# கல்கி

KALKI
21.6.98
ரு. 4.50

மனீஷா
கொய்ராலாவின்
கோப பேட்டி

## "தப்பாகப் பேசுபவர்கள் நரகத்துக்கே போவார்கள்!"

**சந்தோஷம்**

# ஸ்ரீ கந்தசுவாமி பர்மனெண்ட் பண்டு லிமிடெட்

சென்னை
மாநகர
சொத்துக்கள்
மீதும் நகைகள்
மீதும் கடன்
வழங்கப்படும்!



கந்தகோட்டம் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி

இலவசம்
ஐஸ்வர்ய மஞ்சரி
பாராயண புத்தகம்
உறுப்பினர்களுக்கு
மட்டும்.

**மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம்**

**Regd & H.O: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை,**
**சென்னை - 600 002, ☎:8548917, 8527573**
**B.O: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை - 15.**
**☎: 459569,4332950**
**அண்ணா நகர் கிளை முகவரி:**
**B.O: 42. சிந்தூர் ஷாப்பிங் சென்டர்,**
**II அவென்யூ, (ஐயப்பன் கோவில் அடுத்து)அண்ணாநகர்,**
**சென்னை – 600 040.**



சேர்மன்
**Dr. P. பாலசுப்பிரமணியம்**
சீனியர் டிரஸ்ட்டி கந்தகோட்டம்,
சென்னை - 3.
நிர்வாக இயக்குநர் பார்க்டவுன்
பெனிபிட் பண்டு லிட்.



*உறுப்பினராகி பயன்பெறுவீர்!*
*விடுமுறை: H.O. வெள்ளி,*

**இது ஓர் P.B.குரூப் நிறுவனம்**

**நம்பிக்கை ● நாணயம் ● பாதுகாப்பு**

# உருவாகிறது - ‘டெகாய்ட் கிங்!’

“ஹலோ... இந்தியாவில் எல்லோரும் எப்படி இருக்கிறீர்கள்? சௌக்கியம்தானே? என்ன... வெயில் ஜாஸ்தியா? ச்சொ... சொ... இங்கே நான் ஸ்விட்ஜர்லாந்துக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். நில விற்பனை விஷயமாகத்தான்; புதுக் கம்பெனி துவங்க வேண்டுமே... ‘ஜெனிவாவிலிருந்து 300 கி.மீ. தொலைவிலிருந்து இப்போது பேசிக் கொண்டிருக்கிறேன். ஐ மிஸ் இண்டியா ஸோ... ஓ... ஓ... மச்”...

இப்படி மொபைலில், இந்தியப் பிரேமையைப் பிரகடனப்படுத்திய பிரபலம் யாராக இருக்கும்?

அனில் அம்பானியோ அல்லது டாட்டா பிர்லா வகையறாவாகவோ இருக்கும் என்று, நீங்கள் சாமானியராக இருந்தால் எண்ணியிருப்பீர்கள். கொஞ்சம் புத்திசாலியாக இருந்தால் ‘ஏதாவது அரசியல்வாதியோ அல்லது சினிமாக்காரராகவோ இருக்கும்’ என யூகித்திருப்பீர்கள். ஆனால் அந்த ‘‘ஸ்மார்ட்’’ ரகமாயிருந்தால், “சர்வ நிச்சயமாக அண்டர் வர்ல்ட் ஆசாமிதான்” என்று கரெக்டாகச் சொல்லியிருப்பீர்கள். அதுவும் சாதாரண மும்பை அண்டர் வர்ல்ட் டானெல்லாம் இல்லை!



இது இண்டர்நேஷனல் ரகம் - அதாவது, உலகப் புகழ் பெற்ற கிரிமினல்!

ஜெயிலிலிருந்தவர்களுக்கு மயக்க மருந்து கலந்த பர்ஃபியைக் கொடுத்துவிட்டு, சினிமாத்தனமாக “எஸ்கேப்” ஆகி, கோவாவில் ஒரு ரெஸ்டாரண்டில் மாறு வேடத்தில் பிடிபட்டு, மும்பை போலீசுக்கு மெடலெல்லாம் வாங்கிக் கொடுத்த சார்ல்ஸ் சோப்ராஜை நினைவிருக்கிறதா? நாட்டுக்கொரு காதலி என்று நூற்றி எட்டு காதலிகளை வைத்திருந்தானே... அவனேதான்! என்ன இருந்தாலும் 20 வருடம் திஹார் ஜெயிலில் கம்பி எண்ணிய பந்தம் அவ்வளவு லேசில் விட்டுப் போகுமா? டெலிஃபோனிலேயே மண் வாசனை பிடித்து விட்டு...” ஆஹ்... எனக்கு மறுபடியும் இந்தியா வரவேண்டும் போலிருக்கிறது... ஆனால் என்ன செய்வது? டைமே இல்லை...” என்று, பாம்பே டைம்ஸ் பத்திரிகையாளரிடம் அலட்டிக் கொள்ளுமளவுக்கு அப்படி

கல்கி இண்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com # மெயில்: kalki@md2.vsnl.net.in

என்ன நிகழ்ந்திருக்கிறது?

வேறொன்றுமில்லை; பிரகாஷ் வர்மா என்ற பாலிவுட்காரர், சோப்ராஜ் பற்றி ஒரு படம் தயாரிக்க முடிவு செய்து, தகுந்த கதாநாயகனைத் தேடிக் கொண்டிருந்தார். "உன் முகத்தைக் கண்ணாடியில் பார்க்கும் வழக்கமில்லையா?" என்று யாரோ கிண்டலடிக்க, தனக்கும் சோப்ராஜுக்குமுள்ள உருவ ஒற்றுமை அப்போதுதான் இவருக்கு உறைத்திருக்கிறது! உடனே சுறுசுறுவென்று பழைய தினசரிகள், வார மாத இதழ்கள் எல்லாவற்றையும் "ஸ்கான்" செய்து, சோப்ராஜைப் பற்றி தேவையான அளவு திரைக் கதையைத் திரட்டிவிட்டார். படத்தயாரிப்பைப் பற்றி அவர் உரக்க சிந்திக்க ஆரம்பித்ததன் பயனாய், பாம்பே டைம்ஸில் அதையே செய்தியாக்கிவிட்டார்கள்!

கிட்டத்தட்ட இதே சமயத்தில், சோப்ராஜ், தன் சுய சரிதையை எழுதி எடுத்துக் கொண்டு, லண்டனின் புகழ்பெற்ற சானல் - 4 இயக்குனர் ஃப்ரூக் டோண்டியின் முன் நின்று கொண்டிருந்தான் – "உங்களுக்கு யாராவது பப்ளிஷரைத் தெரியுமா?" என்ற கேள்வியுடன்!

இந்தச் செய்தி, தியாகப் பரவி, டோண்டியின் நண்பரும் டாகுமெண்டரிகள் தயாரிப்பாளருமான சோரப் இரானியின் (மும்பைக்காரர்) செவியில் விழ, அவர் உடனே அந்த சுயசரிதையை ஒரு இண்டர்நேஷனல் படமாக உருவாக்க ஆர்வித்தார். அந்த ஆர்வம் அப்படியே டோண்டியையும் சோப்ராஜையும் கவ்வ, அடுத்த நிமிடமே இரானி லண்டனுக்குப் பறந்தார். சார்ல்ஸ் சோப்ராஜை முதன் முதலாக ஒரு ரெஸ்டாரண்டில் வைத்துப் பார்த்ததையே படு "த்ரில்"லிங்காக விவரிக்கிறார்.

"பார்ப்பதற்கு ரொம்ப நார்மலாக... குரூரத்தனம் எதுவுமில்லாமல், சாதாரண மனிதன் போலிருந்தான். அவனது திஹார் சிறைவாசம், உலக வாழ்க்கை, தனி மனித சைக்காலஜி என மூன்று பாகங்களாகப் படத்தைப் பிரித்து, சோப்ராஜ் என்ற கிரிமினலின் மிருகத் தன்மையை, அவனுள் ஒளிந்திருக்கும் மனித நேயத்தை, வெளிக் கொணர்வதுதான் எங்கள் நோக்கம்" என உணர்ச்சி வசப்படுகிறார்.

சோப்ராஜுக்கும் இந்த 'இமேஜ்' ரொம்பப் பிடித்துவிட்டது (பிடிக்காமலா?)

"சுயசரிதையை எழுதும் போது பல இடங்களில் தடுமாறினேன்; என் செயல்களை விவரிப்பதா, செயல்களின் பின்னணியிலிருந்த மன உளைச்சல்களைச் சித்தரிப்பதா, என் நெஞ்சுக்கு நீதி என்று உணர்ந்து அன்று நான் செய்த தவறுகளை இன்று எண்ணி வருந்துவதா எனத் தெரியாமல் அல்லலுற்றேன்; ஆனால் இனி அந்தப் பாதையைத் திரும்பியும் பார்க்கப் போவதில்லை" என்பவன், பிரகாஷ் வர்மாவும் தன்னைப் பற்றி படமெடுக்க விழைவதைக் குறித்து சந்தோஷப்பட வேண்டியதுதானே? மாறாக லீகல் நோட்டீசை அனுப்பி, "மரியாதையாக படத் தயாரிப்பை கைவிடுகிறாயா? இல்லை மும்பை ஹைகோர்ட்டில் வழக்குப் போடவா?" என ஏன் மிரட்ட வேண்டும்?

"என் கதையை என் விருப்பப்படிதான் படமாக்க வேண்டும்"; என்கிறார் ஆணித்தரமாக – "இந்தப் பிரகாஷ் வர்மா என்ன பிஸ்தா? ஹாலிவுட்டிலிருந்து வந்த ஒரு மில்லியன் டாலர் வாய்ப்பை நிராகரித்திருக்கிறேன்! அவர்களிஷ்டப்படி என் கதையைக் கொலை செய்வதை என்னால் பொறுக்க முடியாது" – (ஹூய்... மா.. அதைக் காரணமாக வைத்து யாரையாவது இவன் கொலை செய்யாதிருந்தால் சரிதான்!)

வர்மாவோ "பணத்துக்கு அலைகிறான்! ரீஸனபிளாகக் கேட்டால் கொடுத்துத் தொலைக்கலாம்! ஒரு பப்ளிக் ஃபிகரைப் பற்றி யார் வேண்டுமானாலும் படம் எடுக்கலாம்" என பதில் சவால் விடுகிறார்!

இடையே டோண்டியோ, ஆர்ட் மலிக்கை சோப்ராஜாகப் போட்டு, கோவிந்த் நிஹலானியை இயக்கச் செய்து, ஒரு 30 கோடி பிராஜக்டை தயாரிக்கும் கனவுகளை இரானியுடன் சேர்ந்து காண்கிறார். ஹூம்... அடுத்து என்னவாக இருக்கும்? வேறென்ன? நோபல் பரிசுக்கான அப்ளிகேஷன்தான்!

— ஜெயஸ்ரீ ராஜ்

"போலி டாக்டரா கிளினிக் நடத்திக்கிட்டு இருக்கிற உங்க பையனுக்குப் பொருத்தமா போலி நர்ஸ் ஜாதகம் ஒன்னு இருக்கு... பார்க்கிறீங்களா?"

— கே. அனிதா



# வந்தாரே உன்னிகிருஷ்ணன்; வென்றாரே ஸ்ரீராம்குமார்!

ஆறு மணிக்குக் கச்சேரி ஆரம்பித்த போது படு டென்ஷனாக அவர் இருப்பதைப் பார்த்து நமக்கே கொஞ்சம் டென்ஷனாகி விட்டது!

ஹரிகாம்போதியையும் ஜெயந்தசேனாவையும் கஷ்டப்பட்டு வழியை விட்டு நகர்த்தி, ஸ்ரீராம்குமார் பந்துவராளிக்கு முன்னேறி வந்தபோது துளியூண்டு டென்ஷன் குறைந்தது. ஏழு மணி இருக்கும்... உன்னிகிருஷ்ணன் அரங்கினுள் நுழைந்தார்... நண்பர் உன்னியின் முகத்தைப் பார்த்ததால்தானோ என்னவோ, ஸ்ரீராம்குமாரின் டென்ஷன் இருந்த இடம் தெரியாமல் ஓடியே போய் விட்டது!



• ஸ்ரீராம்குமார்

கூட்டம் சிறியதென்றாலும், ராக சுதா அரங்கில் எஸ்.வி.கே. சேம்பர் மியூசிக் அமைப்பு ஏற்பாடு செய்திருந்த அந்தத் தனி வயலின் கச்சேரிக்கு வந்திருந்தவர்கள் தேர்ந்த ரசிகர்கள். அவர்களது ஒட்டுமொத்தமான பாராட்டை வெல்லும் வகையில் ஸ்ரீராம்குமார் வாசித்த பைரவியும் யதுகுலகாம்போதியும் சங்கராபரணமும் கச்சிதமாக அமைந்தன. பெரும்பாலும் பழமையான ராகங்களையே கையாண்டார் ஸ்ரீராம்குமார். காண்டினென்டல் பிரேக்ஃபஸ்ட் ரக கச்சேரிகளைக் கேட்டு அலுத்தவர்களுக்கு அன்று தஞ்சாவூர் தலைவாழை விருந்து!



• மனோஜ் சிவா

ஆலாபனையின்போதே கீர்த்தனையின் மூடுக்கு நம்மைத் தயார் படுத்துவதில் கெட்டிக்காரர் ஸ்ரீராம்குமார். கீர்த்தனை வாசிப்பில் பாடாந்திர சுத்தம். அனாவசிய சங்கதிகளோ உருட்டல் புரட்டல்களோ கிடையாது. பாடலின் ஜீவனை வாத்தியத்தில் வடித்துத் தரும் வல்லமையை தாராளமாய்ப் பெற்றிருக்கிறார். சாஹித்யத்தில் (பாடலின் வார்த்தைகள்) முழுமையான ஈடுபாடு இருப்பவர்களுக்கு மட்டுமே இது கைவரும்.

கற்பனை ஸ்வரங்கள் வாசிக்கும் போது எளிமையான எல்லைகளைத் தாண்டாமல் கவனமாய் இருக்கிறார் ஸ்ரீராம்குமார். செப்பிடு வித்தை காட்டாவிட்டாலும் இன்னும் கொஞ்சம் துணிந்து தான வேலைப்பாடுகள் வழங்க வேண்டும்.

எனினும் இது பெரிய குறையாகத் தெரியாமல் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் ஜம்பதான கீர்த்தனையை (தக்ஷிணாமூர்த்தே - சங்கராபரணம்) எடுத்துக் கொண்டு ஓரளவு ஈடுசெய்தார் ஸ்ரீராம்குமார். இந்தப் பிரதான முயற்சியை அடுத்து இடம்பெற்ற தனியாவர்த்தனத்தில் மனோஜ் சிவாவும் புருஷோத்தமனும் வெளுத்து வாங்கி விட்டார்கள்!

கீர்த்தனைகளுக்கு வாசிக்கும் போது, ஒவ்வொரு சங்கதியையும் அழகாக எடுத்துக் காட்டும்படி மிருதங்கத்தைக் கையாண்டார் மனோஜ் சிவா. 'அண்ணா அண்ணா' என்று மிருதங்கத்துக்கு வழிவிட்டு, அவ்வப்



• புருஷோத்தமன்

போது அளவாகச் சேர்ந்து கொண்டது புருஷோத்தமனின் கஞ்சிரா! வல்லின மெல்லினங்களை இந்த வாத்தியத்தில் பேச வைப்பதில் புருஷோத்தமன் கவனமாய் இருக்கிறார்.

கலைஞர்களை வாழ்த்திப் பேசிய எஸ்.வி. கிருஷ்ணன், "ஸ்ரீராம்குமார் எல்லா சங்கீதத்தையும் ரசிப்பார். ஆனால் கேட்டு ரசிக்கிற எல்லாத்தையும் தன்னோட வாசிப்பிலே கலந்துட மாட்டார்... தனக்கென்று ரொம்ப சுத்தமான ஒரு பாணி வைச்சிருக்கார்" என்று குறிப்பிட்டது நூற்றுக்கு நூறு உண்மை.

வயலின் கலைஞர் + இளைஞர் ஸ்ரீராம்குமார் சீனியர் மோஸ்ட் செம்மங்குடி முதல் ஜூனியர் மோஸ்ட் அபிஷேக் ரகுராம் வரை ஏகப்பட்ட பாடகர்களுக்குப் பக்கவாத்தியம் வாசித்து வருபவர்... தனக்கென்று ஓர் உயர்ந்த பாணி இருப்பதை அன்று நிரூபித்தார். ஆரம்ப டென்ஷனுக்கு இனி அவசியமே இல்லை!

— சுருதி கீர்த்தி

**மனிஷா கொய்ராலா பற்றிய அறிமுகம் தேவையில்லை. பாலிவுட்டின் முக்கிய நட்சத்திரம் மட்டுமல்ல, பத்திரிகை யுலகின் பரபரப்பான நட்சத்திரமும்கூட. அண்மையில் அவரை மும்பையில் சந்தித்துப் பேசினோம். கேள்விகளால் அவரது கோபத்தைக் கிளறினோம்.**

# தப்பாகப் பேசுபவர்கள் நரகத்துக்கே போவார்கள்!

**"பம்பாய், இந்தியன் படங்களுக்குப் பிறகு நீங்கள் ஏன் தமிழில் நடிக்கவில்லை?"**

"நான் ஏற்கெனவே கொஞ்சம் புகழ் பெற்றுவிட்ட நடிகை என்றே நினைக்கிறேன். இந்த நிலையில் எல்லா டைரக்டர்கள் படங்களிலும் நடிக்கத் தயாராயில்லை. மணிரத்னம், ஷங்கர் போன்ற பெரிய இயக்குனர்கள் படங்களில் மட்டுமே நடிக்க ஆசைப்படுகிறேன். இந்தியில்கூட சுபாஷ் கை, நானா படேகர், சிப்பி போன்ற பெரிய டைரக்டர்கள் படங்களில் மட்டும்தான் நடித்துக் கொண்டிருக்கிறேன். இப்படி பெரிய இயக்குனர்களிடமிருந்து தமிழில் வாய்ப்புகள் வரவில்லை. அதனால்தான் நான் நடிக்கவில்லை. பாரதிராஜா, தமது மகனுக்கு ஜோடியாக நடிக்க என்னை அழைத்தார். நானும் சரியென்று சொன்னேன். அப்புறம் அது பற்றி மீண்டும் யாரும் பேசவில்லை. தற்போது, பிரசாந்துக்கு ஜோடியாக நடிக்க, கே. பாலசந்தர் கேட்டிருக்கிறார். பார்ப்போம். எனக்கும் தமிழில் நடிக்க ஆசைதான்."

**"கோபப்படாமல் இருந்தால் ஒரு கேள்வி..."**

"கோபப்படவில்லை. நான் கோபப்படுகிற அளவுக்கா உங்கள் கேள்வி மட்டமாக இருக்கப் போகிறது? இங்குள்ள (மும்பை) பத்திரிகையாளர்களைப் போல 'நீங்கள் அவரை வைத்திருக்கிறீர்களா?' இவரைக் காதலிப்பது போல் தெரிகிறதே' என்றா கேட்கப் போகிறீர்கள்? தைரியமாகக் கேளுங்கள்!"

**"காமோஷி படத்தில் உங்களுக்கு ஜோடியாக நடிக்கும் சல்மான்கானுடன் தகராறு செய்தீர்களாமே? அதனால் அந்தப் படமே நின்றுவிட்டதென்றும் இனி சல்மான்கானுடன் நடிக்கும் வாய்ப்பு உங்களுக்குக் கிடையாது என்றும் சொல்லிக் கொள்கிறாரர்களே?"**

"ஒரு பார்ட்டியில் அவர் குடித்து விட்டுக் கொஞ்சம் தரக் குறைவாக நடந்து கொண்டார். என்னைப் பற்றி வெளியில் கேவலமாகப் பேசியதாகவும் கேள்வி. இதையறிந்த என் சகோதரர் சித்தார்த், இதுபற்றி சல்மான்கானிடமே கேட்டபோது, இருவருக்குமிடையே நடந்த காரசாரமான வாக்குவாதம் முற்றி, அடிதடியில் முடிந்ததும் உண்மைதான். பிறகு சில நல்ல நண்பர்களின் முயற்சியால் நாங்கள் இப்போது சமாதானமாகி விட்டோம். காமோஷி படம் இப்போது முடிந்தும் விட்டதே!"

**"இருந்தும்கூட சல்மான்கானுடன் நடிக்க உங்களுக்கு வந்த இரண்டு பட வாய்ப்புகளை அவர் தடுத்து விட்டாரென்று சொல்லிக் கொள்கிறார்களே?"**

"அப்படி இரண்டு படங்களில் நடிக்க வந்த வாய்ப்பு கை நழுவிப் போனதும் உண்மைதான். சென்னையிலிருக்கும் உங்களுக்கே இது மாதிரியான தகவல்களெல்லாம் கிடைக்கிறதா? பரவாயில்லையே!"

**"நீங்களும் பார்ட்டிகளில் கலந்து கொள்வதுண்டா?"**

"அதில் என்ன தவறு? ஆனாலும் சில பெண்களைப் போல் பார்ட்டி எப்போது என்று அலைகிற ரகமல்ல நான். பார்ட்டி வைத்துச் சிலரை மகிழ்வித்து, அதன் மூலம் பட வாய்ப்புகளைத் தேடுகிற பெண்ணும் அல்ல."

**"இப்போது நீங்கள் நடித்துக் கொண்டிருக்கும் படங்கள் பற்றிச் சொல்லுங்களேன்!"**

"இந்தி-தெலுங்கு இரண்டிலும் சிரஞ்

— மனிஷா கொய்ராலாவின் கோப பேட்டி

சிவிக்கு ஜோடியாக நடிக்கிறேன். அப்புறம் ராம் கோபால் வர்மாவின் படம். 'அரவிந்த்' என்ற படத்தில், அபிஷேக்குடன் நடிக்கிறேன்.''

**''படங்களில் நடிப்பதோடு டிராவல் ஏஜென்சியும் நடத்துகிறீர்களாமே?''**

''நான் நடத்தவில்லை. என் சகோதரர் தான் நடத்துகிறார். நான் முதலீடு மட்டும் தான் செய்திருக்கிறேன். என் சகோதரருக்கு நான் ஏதாவது செய்ய வேண்டாமா, என்ன!''

**''நீங்கள் யாருடைய கட்டுப்பாட்டிலோ இருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்களே, அது உண்மையா?''**

''நான் யாருக்கும் அடிமையில்லை. முன்னணி நடிகையாக இருக்கும் நான் எதற்காக ஒருவருடைய கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும்? நீங்கள் மறைமுகமாகக் குறிப்பிடுகிற சுபாஷ் கை எங்கள் குடும்ப நண்பர். வெல்விஷர். அவ்வளவுதான்.''

**''கடைசியாக ஒரு கேள்வி...''**

''கேளுங்கள்!''

**''உங்கள் சகோதரர் சித்தார்த் உங்களுக்குச் சகோதரரே அல்ல என்றும் ஒரு பேச்சு அடிபடுகிறதே?''** என்று நாம் கேட்டதும் கோபத்தில் மனீஷா எழுந்து விட்டார். நின்றபடியே பதில் சொன்னார்!

''சாரி... அவர் எனது சகோதரர்தான். எங்களுடைய உறவை நான் யாருக்கும் நிருபித்துக்காட்ட வேண்டிய அவசியம் இல்லை. சேச்சே! இப்படிப்பட்ட வதந்திகளுக்கெல்லாம் நான் எப்படி பதில் சொல்வதென்றே தெரியவில்லை... உடன் பிறந்தவர்களைப் பற்றியே தவறாகப் பேசுபவர்கள் நாசமாய்த்தான் போவார்கள். நேரடியாக நரகத்துக்குத்தான் போவார்கள். இதற்குமேல் நான் என்ன பதில் சொல்வது? சாரி.''

பேட்டி: **நீலா**



●● 'ஆட்சிக் கலைப்பு' பயத்தையெல்லாம் மூட்டை கட்டி வைத்து விட்டார்கள் கழக உடன்பிறப்புக்கள். "தலைவரின் பவள விழாவிற்கு முன்னர் எதாவது அசம்பாவிதம் நடந்து விடப் போகிறதே" என்று ஒரு படபடப்பு இருந்தது. அதுவும் நல்லபடியாக முடிந்து விட்டது. களையாக ஐந்து ராஜ்ய சபா உறுப்பினர்களும் எங்களுக்குக் கிடைத்து விட்டார்கள். இனிமேல் கவலைப்பட ஒன்றும் இல்லை. ஆனால் கலைத்தால் மீண்டும் நாங்கள்தான் வருவோம்" என்று சொன்னார் சென்னை நகர கழக எம்.எல்.ஏ. ஒருவர். "மத்தியில் ஆட்சி மாற்றம் அல்லது தேர்தல் வருவதற்கு வாய்ப்பு இருக்கிறது'' என்று கலைஞர் அதிரடியாக அடித்து, பயத்தைத் தெளிய வைத்திருக்கிறார். ஆனால் அதே சமயத்தில் ஆட்சிக் கலைக்கப்பட்டால், உடனடியாக உயர்நீதி மன்றம், அவசியப்பட்டால் சுப்ரீம் கோர்ட் செல்லவும் எல்லா ஏற்பாடுகளும் தயாராம். அரசு தலைமை வழக்கறிஞர் சண்முக சுந்தரம் இது சம்பந்தமான ஏற்பாடுகளை செய்து கொண்டிருக்கிறாராம். மாறன் மூலமாக, டெல்லியில் செய்ய வேண்டிய திரை மறைவு வேலைகளும் தொடர்கின்றன. ஆட்சிக் கலைப்பு பற்றிய அமைச்சரவையின் தீர்மானம் ஜனாதிபதியின் கையெழுத்துக்கு அனுப்பப்பட்டாலும் அது செயல்படுத்தப்படத் தாமதமாகும் என்று சொல்கிறார்கள். அதனால் ஜனாதிபதியை திருப்தி செய்ய தி.மு.க.வின் மேல் தேசத் துரோக குற்றச்சாட்டுக்கள் கொண்ட கோப்பு ஒன்றும் தயாராகிறது. பொதுவாகவே முஸ்லீம் சமூகத்தினரிடம் கழகத்துக்கு செல்வாக்கு அதிகம். சிலர், தி.மு.க.வினர் சிபாரிசுகளின்படி, அரசாங்க வேலை, அரசு கடன் ஆகியவற்றையும் பெற்றிருக்கிறார்கள். அப்படிப்பட்ட சிலரின் சொந்தக்கார இளைஞர்கள் சிலர் தீவிரவாதிகளாக திசைமாறிப் போயிருக்கிறார்கள். எந்தவிதமான உள்நோக்கமும் இல்லாத இதுபோன்ற விஷயங்களை தூசி தட்டிப் பார்த்து தி.மு.க.வினருக்கும் தீவிரவாதிகளுக்கும் தொடர்பு என்றும், அதன் மூலம் ஐ.எஸ்.ஐ. தமிழகத்தில் தளம் அமைத்து நாசக்கார செயல்களில் ஈடுபடுகிறது என்றும் மத்திய அரசின் ஏஜென்ஸிகள் கோப்புகளைத் தயார் செய்கின்றன. ஆனால் ஜெ.வின் பிளாக்மெயில் காரணமாகத்தான் ஆட்சியை கலைக்க பா.ஜ.க. அரசு தள்ளப்பட்டிருக்கிறது என்பது பனிச்சென்று சகலருக்கும் தெரியுமாதலால், அமைச்சரவைத் தீர்மானம் மறுபரிசீலனைக்காகத் திருப்பி அனுப்பப்படலாம்" என்கிறார்கள். அப்போது கிடைக்கும் இடைவெளியில் தேசிய நாளிதழ்களும், ஐ.மு. உட்பட எதிர்க்கட்சிகளும் ஜெ.வின் சுயநலத்தை தோலுரித்துக் காட்டி அவருக்கெதிரான பொதுமக்கள் கருத்தை உருவாக்குவார்கள். அந்த நிலையில், தேசிய அரசியலில் அணிகளின் மாற்றம் வரலாம் என்றும் சொல்கிறார்கள். இதற்கிடையில் வரும் 18-ம் தேதியன்று தமிழகத்தில் சில ஊர்களில் உள்ளாட்சித் தேர்தல்கள் நடக்கின்றன. எப்பாடுபட்டேனும், வெற்றிக் கனியை ஈட்ட வேண்டும் என்பது கலைஞரின் கட்டளை.

●● "பொறுக்காமலே பூமி ஆள ஜெ. நினைக்கிறார்''



# தயாராகும் ரகசியக் கோப்பு!

என்றார் அந்த பா.ஜ.க. பிரமுகர். "எதற்காக இவர் இவ்வளவு அவசரப்படுகிறார். நாங்கள் அவருக்கு மிகவும் மதிப்பும், கௌரவமும் கொடுத்து வைத்திருக்கிறோம். வெளிநடப்பு, போன்ற காரியங்களில்

ஈடுபட்டு வீண் வம்பு வளர்க்கிறார். ஆட்சி அமைக்க இருந்த சமயத்தில் அவர் செய்த அழுகுணி காரணமாக வாஜ்பாய் அவருக்காகக் காத்திராமல் ஜனாதிபதியைச் சந்தித்தார் அல்லவா! அதை அவர் ஒருமுறை ஞாபகப்படுத்திக் கொள்ளட்டும். இவரது பிளாக்மெயிலால் பொறுமைசாலி வாஜ்பாய், பொக்ரானாக மாறிவிடும் ஆபத்து இருக்கிறது'' என்று கவலையுடன் சொன்னார் அவர். ''இந்தச் சமயத்தில் ஆட்சிக் கலைப்பு என்பதில் எங்களுக்



குச் சிறிதும் உடன்பாடில்லை'' என்றார் அவர். இதற்கிடையில் சு. சுவாமி மீது மிகவும் கோபத்தில் இருக்கிறார்கள் பா.ஜ.க.வினர். ஜெ.வை காங்கிரஸ் பக்கம் தள்ள முயற்சி செய்வதோடு, சமீபத்தில் பிரதமரை அ.தி.மு.க. அணியினர் சந்தித்த போது அந்தக் குழுவில் சுவாமியும் இருந்தார். பேச்சுவாக்கில் கலைப்பு விஷயத்தில் தைரியமாக முடிவெடுக்க பா.ஜ.க. தலைவர்களுக்கு 'சமர்த்து' போதாதென்று ஜாடைமாடையாக அவர் சொன்னதைக் கசப்புடன் ஜீரணித்திருக்கிறார்கள் பா.ஜ.க. பிரமுகர்கள்.

எல்லாம் 'நல்லபடியாக' நடந்து முடிந்து, பா.ஜ.க.வுக்கு அ.தி.மு.க. தோழமை தொடரும் பட்சத்தில், சேடப்பட்டி மீண்டும் மத்திய அமைச்சராகலாம் என்றும் லாயிட்ஸ் சாலை வட்டாரத்தில் பேசப்படுகிறது. சொத்துக் குவிப்பு வழக்கு சம்பந்தமாக உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்துள்ள மனுவின் மீது சாதகமாக தீர்ப்புக் கிடைக்கும் என்றும் அவர் நம்புகிறாராம்.

●● த.மா.கா.வில் மாவட்டத் தலைவர்களை நியமித்தது 'சும்மா இருந்த சங்கு' கதையாகி விட்டது. கிட்டத்தட்ட அறுபது சதவீத இடங்களில் நியமிக்கப்பட்ட தலைவர்கள், கட்சிப் பிரமுகர்களின் சிபாரிசுகளின் பேரில் நியமிக்கப்பட்டதால் தொண்டர்கள் குமுறல் அதிகம். பல இடங்களில் லோக்கல் எம்.எல்.ஏ. தலைவராக நியமிக்கப்பட்டதிலும் அதிருப்தி இருக்கிறது. அதுவும் சென்னையில் உள்ள மூன்று மாவட்டத் தலைவர்கள் செலக்ஷன்தான் தலைவருக்கு மிகவும் கடினமாக இருந்ததாம். ''தேர்தல் என்ற பெயரில் தலைவரின் விருப்பம் கூட செயல்படாத வகையில், அடிமட்டத்திலிருந்து கட்சிப் பதவிகளுக்கு 'உண்மையிலேயே' தேர்தல் நடந்தால்தான் கட்சி பலப்படும்; பிரச்னை தீரும்'' என்கிறார் சத்தியமூர்த்திபவன் பிரமுகர் ஒருவர்.

●● வீரப்பன் விவகாரத்தில் 'நக்கீரன்' குடும்பத்தைப் பழிவாங்கும் போக்கில் அணுகும் போலீஸாரின் சுறுசுறுப்பைக் கண்டிக்க முடியாத நிலையில் இருக்கிறாராம் முதல்வர். காரணம், ஒரு யுக்தியோடு செயல்பட்டு வீரப்பனைச் சரணடைய வைக்க இருந்த ஐடியா, புஸ்வாணமாகப் போய் விட்டதாக போலீஸ் முதல்வரிடம் திருப்திகரமாக எடுத்துச் சொல்லியிருக்கிறதாம். போலீஸ் திட்டமிட்டபடி எல்லாம் நடந்திருந்தால் பவள விழாவில் வீரப்பன் சரணடைந்திருப்பானாம். "எது எப்படியோ... இந்த விவகாரம் இரண்டு பத்திரிகைகளிடையே துவேஷத்தை உண்டாக்கி விட்டது" என்று இரண்டு தரப்பினருக்கும் வேண்டியவர்கள் சொல்கிறார்கள்.

**பின்குறிப்பு :**

❑ தமிழ்நாடு முழுக்க பவள விழாவை முன்னிட்டு நடத்தப்பட்ட வசூல் விவரங்களை லோக்கல் கட்சிக்காரர்கள் மூலம் பெற்றிருக்கிறார் ஜெ.

❑ பக்கத்திலுள்ள கல்யாண மண்டபத்தில் நடக்கும் இசைக் கச்சேரிகளின் தொந்தரவைத் தாங்க முடியாமல் வீட்டை மாற்றுகிறார் டி. ராஜேந்தர்.

— **தில்லப்பா**

● உடல்நலக் குறைவால் பெட்ரெஸ்டில் இருந்த விஜய் புதுத் தெம்போடு மீண்டு வந்திருக்கிறார். இதற்கு முன் விளையாட்டுப் பிள்ளையாய்த் துள்ளித் திரிந்தவர் இப்போது சாதுவாகி விட்டார்! உடல்நிலை தேறியதும் 'நிலாவே வா' படத்திற்காக குலுமனாலியில் சுவலட்சுமியோடு காதல் பாட்டொன்று பாடி ஆடி விட்டு வந்திருக்கிறார். விஜய்க்கு படத்தில் என்னவோ மீனவ குப்பத்து பிஸ்த்தா கேரக்டர். காதலியோடு ஆடிப் பாடுவதோ குலுமனாலியில்! இதைக் கேட்டதும் விஜயிடமிருந்து வந்தது என்னவோ கோபம் இல்லை. சாந்தமான பதில்தான். "சினிமாவுல லாஜிக் பார்க்காதீங்க. பிச்சைக்காரனாயிருந்தாலும் அவனுக்குன்னு ஆசை, கனவெல்லாம் இருக்காதா? இந்தக் குப்பத்து பிஸ்தாவுக்கு குலுமனாலியில ஆடிப் பாடணும்னு ஆசை. அப்படி நெனைச்சுக்குங்களேன்" – விளக்கம் சொன்ன விஜய்க்கு 'நிலாவே வா' படத்தில் வைத்திருக்கும் பெயர் சிலுவை.

● நடிப்பில் விதம்விதமாய் பண்ணிப் பார்க்க வேண்டுமென்பது பார்த்திபனின் கனவு. படைப்பாளிக் கூட்டங்களில் அடிக்கடி சந்தித்துக் கொள்ளும் போது பாலுமகேந்திராவிடம் பார்த்திபன் தமது கனவைச் சொல்ல, பார்த்திபனுக்காக ஒரு கேரக்டரை உருவாக்கினார் பாலு. பார்த்திபனுக்கு அந்த கேரக்டர் ரொம்ப பிடித்துப் போய்விட பாலுமகேந்திரா இயக்கத்தில் பார்த்திபன் நடிக்க ஒரு படம் உருவாகப் போகிறது. அடுத்த மாதம் படப்பிடிப்பு. பார்த்திபனைக் கவர்ந்த அந்த கேரக்டர்? 'அது சஸ்பென்ஸ்' என்கிறார் பாலுமகேந்திரா.

● 'விடுகதை' படத்திற்குப் பின் நீனாவின் பட வாய்ப்புகளும் ஒரு புதிர்தான். கைவசம் இப்போது ஒரே ஒரு படம். 'கண்ணாத்தாள்' என்கிற அந்த பக்திப் படத்தில் அம்மன் பக்தையாக நடித்திருக்கிறார் நீனா. நிஜ வாழ்க்கையிலும் நீனா அம்மன் பக்தைதான். அதற்காக அடிக்கடியெல்லாம் கோவில் பக்கம் தலை காட்டுவதில்லை. ஏதாவது வேண்டுதல் என்றால் மட்டுமே ஆஜர். அம்மா குரூப் டான்ஸர். அப்பா ஐ.வி.சசியிடம் அசோஸியேட் டைரக்டர். அதனால் வாரிசு நீனாவும் சினிமாவுக்கு வந்து விட்டார். ஆனால், வாய்ப்புக்கள்தான் வரவில்லை. "நேரம் நல்லா இருந்தா எல்லாமே தானா வரும்" என்கிற நீனா இப்போது தனக்கு நேரம் சரியில்லை என்பதையும் ஒப்புக் கொள்கிறார்.

● 'பூந்தோட்டம்' என்பது தேவயானி குடியிருக்கும் வீட்டின் பெயர், 'பூந்தோட்டம்' படத்தில். ஆதரவற்ற அப் பூந்தோட்டத்தைச்


• ஜோக்கிங்!


• நீனா



• மோனிகா

சிறைக்கச் சிலர் முயல அடிதடியும் குடியுமாய் இருக்கும் முரளி காவல்காரனாய் வருகிறார். 'பூந்தோட்டம்' கயவர்களிடமிருந்து எப்படி காப்பாற்றப்படுகிறது என்பதுதான் கதை. இயக்குனர் களஞ்சியத்துக்கு இது மூன்றாவது படம். மூன்று படங்களிலும் கதாநாயகி தேவயானியே! இருவரையும் இணைத்து இதுவரை கிசுகிசு எதுவும் வராதது ஆச்சரியம்தான். களஞ்சியமும் தேவயானியும் அண்ணன் - தங்கையாய் தங்கள் நட்பை வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள். களஞ்சியத்தின் அடுத்த படத்திலும் தங்கைதான் கதாநாயகியா? களஞ்சியத்தின் பதில் 'அதே அதே'தான். கொடுத்து வைத்த தங்கை.

● மோகினி எங்கே மாயமாய் மறைந்தார் என்று தேடிப் பிடித்ததில் நடிகை ப்ளஸ் இயக்குனர் என்கிற புது அந்தஸ்தோடு நம்முன் தோன்றினார். ரேவதி தயாரிப்பில் 'சின்னச் சின்ன ஆசை'க்காக நான்கு வார தொடர் ஒன்றை இயக்கியிருந்தார் மோகினி. டைரக்ஷன் அனுபவம் எப்படி? "டென்ஷன். டென்ஷன். போனமா நடிச்சமான்னு இருந்தது போய், அந்த ஷாட்டை எப்படி வைக்கலாம் இந்த ஷாட்டை எப்படி வைக்கலாம்ன்னு யோசிச்சு யோசிச்சு மண்டை காய்ஞ்சதுதான் மிச்சம்" - டைரக்ஷன் அனுபவத்தை மோகினி ரொம்பவே சலித்துக் கொண்டார். நடிப்பிற்கு குட்பை சொல்லி விட்டு டைரக்ஷனில் முழு மூச்சாய் இறங்கி விடுவதுதானே என் றால் "ஐயோ" என்று அலறாத குறையாய் ஓடியே போய் விட்டார் மோகினி.

● ராபின்ஹுட் ஸ்டைலில் ஒரு படம் பண்ணப் போகிறார் நாசர். 'அவதாரம்', 'தேவதை' போன்று இதுவும் ஒரு எக்ஸ்பெரிமண்டல் படமா? என்றால் இல்லை என்கிறார். பக்கா கமர்ஷியல் படம் என்று தெரிய வேண்டுமென்பதற்காகவே குஷ்பூவை கதாநாயகியாய் ஒப்பந்தம் செய்திருக்கிறார். கமர்ஷியல் படம் மட்டுமல்ல; கலைப் படமும் கூட என்று தெரிய மலையாள நடிகர் நெடுமுடி வேணுவையும் சேர்த்திருக்கிறார். கலையும் உண்டு. கமர்ஷியலும் உண்டு. இரண்டிற்குமிடையில் சிக்கித் தவிக்கும் படமாக இல்லாமல் இருந்தால் சரி!

● 'கோல்மால்' கதாநாயகி மோனிகாவுக்கு சென்னையிலேயே செட்டிலாகி விட ஆசை. 'கோல்மால்' ரிலீஸின் போது சென்னைக்கு விசிட் செய்த மோனிகா படத்தின் நாயகன் செல்வாவிடம் இந்த ஆசையைத் தெரிவித்தார். படத்தின் ரிசல்ட்டைப் பொறுத்து முடிவெடு என்று மோனிகாவின் தலையில் குட்டிய செல்வா, தமக்குத் தெரிந்தவர்களிடம் மோனிகாவுக்கு சிபாரிசு செய்யவும் தயங்குவதில்லை. படத்தின் ரிசல்ட்டுக்காக காத்துக் கொண்டிருக்கிறார் மோனிகா. ⦿

— மஹேந்த்

# மோகினியின் டைரக்ஷன் அனுபவம்!

ஷைனிவில்சன், இந்தியாவின் முன்னணி ஓட்ட வீராங்கனை. கடந்த வாரம் தடகளத் துறையிலிருந்து ஓய்வு பெறுவதாக அறிவித்தார். முப்பத்து மூன்று வயது ஷைனியை, சென்னை எழும்பூர் ரயில்வே குடியிருப்பில் உள்ள அவரது வீட்டில் சந்தித்தோம். ஷைனியும், அவரது கணவரும், நீச்சல் வீரருமான வில்சனும் வாங்கிக் குவித்திருக்கும் மெடல்கள் ஷோகேஸ் முழுக்க நிரம்பி வழிகின்றன. "இன்னும் நிறைய இருக்கு; ஷோ கேஸில் இடமில்லை" என்று சொல்லிச் சிரிக்கிறார் ஷைனி. சென்னை வாழ்க்கையில் ஷைனிக்குத் தமிழ் பழகிவிட்டது. தமிழிலேயே அளித்த பேட்டி இது:

"கடந்து வந்த ஸாரி... ஓடி வந்த பாதையைத் திரும்பிப் பார்க்கிறபோது எப்படி உணருகிறீர்கள்?"

"ரொம்ப சந்தோஷமாக! (சொல்கிற போதே முகத்தில் சந்தோஷச் சிரிப்பு) கேரளாவில் தொடுபுழா என்ற சிறிய ஊரில் பிறந்த நான், அதலெட் ஆகி, ஆசிய அளவில் சாம்பியன் ஆவது என்பது கனவிலும் நினைத்துப் பார்த்திராத ஒன்று. என் அதலெடிக் கேரியரில் இந்தியாவின் சார்பாக எழுபத்தைந்து தடவைகளுக்கு மேல், பல்வேறு போட்டிகளிலும் பங்கேற்று இருக்கிறேன். இன்டர் நேஷனல் லெவலில் நான் பெற்ற மெடல்கள் 67. லாஸ் ஏஞ்சல்ஸ்- (84), சியோல் (88), பார்சிலோனா (92), அட்லாண்டா (96) என்று நாலு தடவை ஒலிம்பிக் போட்டிகளில் பங்கேற்றிருக்கிறேன். அதையெல்லாம் நினைத்துப் பார்க்கிறபோது சந்தோஷமாய் இருக்கிறது.

"ஓட்டப் பந்தய வீராங்கனையாவதற்கு உங்களுக்கு இன்ஸ்பிரேஷன் யார்?"

"என் அப்பா ஆபிரகாம், போலீஸ் டிபார்ட்மென்ட்டில் வேலை பார்த்தவர். எனவே, விளையாட்டில் ஆர்வம் உண்டு. ஆரம்பம் முதலே என்னை ஊக்கம் கொடுத்து, உற்சாகப் படுத்தியவர் அவர்.

"உங்கள் வெற்றியின் ரகசியம் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?"

"என்னுடைய கடுமையான உழைப்பு. என்னுடைய கோச்சுகளின் டெடிகேஷன்; ஊக்கம். பயிற்சி என்று வந்து விட்டால் நான் அசந்ததே இல்லை!"

"உங்கள் குடும்பத்தில் வேறு யாராவது அதலெட்கள் உண்டா?"

"என் தங்கை ஷெர்லியும் அதலெட் தான். அவளது கணவர் ரஞ்சித் தமிழ் நாட்டின் முக்கியமான கால்பந்து ஆட்டக்காரர். என் தம்பி, பாஸ்கெட்பால் ஆடுவான். ஆனால், அகில உலக லெவலுக்குப் போனவள் நான் மட்டுமே."

"உங்களிடமிருந்த விளையாட்டுத் திறமை எப்போது கண்டறியப்பட்டது?"

"பதிமூணாவது வயதில். திருச்சூரில் பதினான்கு வயதுக்குட்பட்ட பள்ளி மாணவ, மாணவிகளுக்கான மாநில அளவிலான விளையாட்டுப் போட்டிகள் நடந்தன. என் அப்பா, என்னை அதில் பங்கேற்க அழைத்துக் கொண்டு போனார். 600 மீட்டர் ஓட்டத்தில் நான் வெற்றி பெற்றேன். அதனால் அடுத்த வருடம், கோட்டயத்தில் உள்ள விளையாட்டுப் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து பயிற்சி பெறுகிற, படிக்கிற வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஒன்பதாம் வகுப்பு படித்தபோது, பள்ளி மாணவர் லெவலில் நான் தேசிய சாம்பியன் ஆனேன்."

"உங்கள் திருமணம் காதல் திருமணமா?"

## ஷைனி வில்சன் :

# ஓட்டத்திலிருந்து ஓய்வு!



• ஜனாதிபதியிடம் விருது...

"நானும், நீச்சல் வீரரான வில்சனும், கேரளாவைச் சேர்ந்த விளையாட்டு வீரர்கள் என்கிற முறையில், ஒருவருக்கொருவர் அறிமுகமானவர்கள். என் வீட்டில், ஸ்போர்ட்ஸ் துறையைச் சேர்ந்தவர் எனக்குக் கணவராய் வந்தால், நல்லது என நினைத்தார்கள். எனவே, எங்கள் திருமணத்தைக் காதல் திருமணம் என்பதைவிட, பெற்றோரால் நிச்சயிக்கப்பட்ட ஒரு திருமணம் என்று சொல்வதுதான் சரியானது. இன்று இந்தியாவில் அர்ஜுனா அவார்டு வாங்கிய ஸ்போர்ட்ஸ் தம்பதி நாங்கள்தான் என்பது பெருமைக்குரிய ஒரு விஷயம்.

"உங்கள் வாழ்க்கையின் மிக சந்தோஷமான தருணம் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?"

"நிறைய சொல்லுவேன். 1992 பார்சிலோனா ஒலிம்பிக்ஸில் நம் தேசியக் கொடியை கைகளில் ஏந்தி இந்திய அணியினர் பின் தொடர, அணிவகுப்பில் கலந்து கொண்டபோது, பெருமிதப்பட்டேன். திருமணத்துடன் ஒரு விளையாட்டு வீராங்கனையின் ஸ்போர்ட்ஸ் வாழ்க்கை முற்றுப் பெற்று விடும் என்கிற மரபை முறியடித்து, திருமணமாகி, குழந்தை பிறந்த பின்பும் 95ல் தெற்காசிய விளையாட்டுப் போட்டி (சென்னை)யில் கலந்து கொண்டு வெற்றி பெற்றது; இவ்வாண்டு, ஜனாதிபதி எனக்கு பத்மஸ்ரீ விருது வழங்கியது வாழ்க்கையின் இன்னும் ஒரு இனிய தருணம்."

"வாழ்வின் மிக சோகமான தருணம் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?"

"நீங்கள் எதை மனதில் வைத்துக் கொண்டு, இந்தக் கேள்வியைக் கேட்கிறீர்கள் என்று புரிகிறது. 86ல் ஆசிய விளையாட்டுப் போட்டிகளின்போது ட்ராக் மாறி ஓடியதால், தங்கப் பதக்கத்தைத் தவறவிட்ட தருணம்தான் சோகமானது. அன்று இரவு முழுக்க நான் தூங்கவே இல்லை. மறுநாள் 400 மீட்டர் ஓட்டப் பந்தயம் நடக்கவிருந்தது. அதில் கலந்து கொள்ளாமல் விட்டு விடலாமா என்று கூட ஒரு தடுமாற்றம். ஆனால், அந்த ஓட்டப் பந்தயத்தில் நான் வெள்ளிப் பதக்கம் பெற்றது சிறு ஆறுதல்.

"எதிர்காலத் திட்டம் என்ன?"

"சிறுவர், சிறுமிகளுக்கு ஓட்டப் பயிற்சி அளிக்க விரும்புகிறேன். ஆனால் எப்படி? எங்கே என்று திட்டமிடவில்லை."

"உங்களுடைய பெண்ணை உங்களைப் போல ஓட்டப் பந்தய வீராங்கனையாக்கப்போகிறீர்களா? அல்லது உங்கள் கணவரைப் போல நீச்சல் வீராங்கனையாக்கப்போகிறீர்களா?"

"என் பெண் ஷில்பாவுக்கு எட்டு வயது. இப்போது அவளுக்கு ஸ்விம்மிங்கில்தான் ஆர்வம்."

ஷைனி, இந்திய உணவு கார்ப்பரேஷனில் துணை மானேஜர் (பொது மக்கள் தொடர்பு மற்றும் ஸ்போர்ட்ஸ்) ஆகப் பணிபுரிகிறார். கணவர் வில்சன், தென்னக ரயில்வேயில் துணை ஸ்போர்ட்ஸ் ஆபீஸர்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

# குறையொன்றுமில்லை

நம்மிடத்திலே உள்ளன்போடு விசேஷமான அன்புடன் கூடிய ஆச்ருத வத்ஸலனாக பரமாத்மா இருக்கும்போது, அவனை நெருங்கி, ''ஹே பிரபோ! நீ என்னிடத்திலே வைத்திருக்கிற அன்பு அதிகம்; நான் உன்னிடத்தில் வைத்துள்ளதோ குறைவு...'' என்று சொல்ல வேண்டும். அதை அவனேகூட சொல்லியிருக்கிறான்.

கீதையிலே பரமாத்மாவினுடைய வாக்கை கவனிக்க வேண்டும்.

'எனக்கு ஞானிகள் என்றால் ரொம்ப பிடிக்கும். ஞானிகளுக்கும் என்னைக் கண்டால் ரொம்ப பிடிக்கும். எனக்கு ரொம்பவும் ப்ரியமான ஞானியை நான் பெற்ற பிற்பாடு விடுவேனா...' என்று கேட்கிறான் பரமாத்மா. 'அப்படிப்பட்ட ஞானி கிடைத்துவிட்டால் அப்படியே சிக்கெனப் பிடித்துக் கொள்வேன்' என்கிறான்.

ஒருத்தர் கேட்டார், ''பகவான் நம்மிடத்திலே அன்பு வைப்பது நல்லதா? நாம் அவனிடத்திலே அன்பு வைப்பது நல்லதா...?''

அந்தக் கேள்வியே தப்பு! மாற்ற வேண்டிய கேள்வி! கேள்வியை எப்படி கேட்க வேண்டும்...?

'நீ பகவானிடத்திலே வைத்திருக்கிற அன்பு அதிகமா, அந்த பகவான் உன்னிடத்திலே வைத்திருக்கிற அன்பு அதிகமா...?' -இப்படித்தான் கேட்க வேண்டும்.

பார்த்தோமானால், அவன் நம்மிடத்திலே வைத்திருக்கும் அன்புதான் அதிகம். நாம் அவனிடத்தில் வைத்திருக்கும் அன்பு குறைவு... அக்கம்பக்கத்தில் வைத்திருக்கிற விச்வாசம்கூட நமக்கு பகவானிடத்திலே கிடையாது!

எம்பெருமானிடத்திலே விசேஷ பக்தியோடு இருக்க வேண்டும் என்பதை ராமாயணத்திலே ஒரு உதாரணம் காட்டித் தருகிறது.

அங்கேயிருந்து வந்த பரதன் மூலமாக, அப்பா மாண்டு விட்டார் என்ற விருத்தாந்தத்தை ராமன் கேட்டான். கேட்டவுடன் துடிதுடித்தான். துடித்தவன் என்ன சொல்கிறான்...?

''அப்பா! நான் காட்டுக்குப் போனேன் என்பதைக் கேட்டே உயிரை விட்டாய் நீ. இந்த உலகத்தை விட்டு நீ போய்விட்டாய் என்று கேட்டும் இன்னமும் நான் உயிரோடு இருக்கிறேனே...! நீ என்னிடத்தில் கொண்ட அன்பு எங்கே...? நான் உன்னிடத்தில் வைத்திருக்கும் அன்பு எங்கே...?!''

-இங்கே ராமன் சொல்வது, பரமாத்மாவுக்கும் நமக்கும் இருக்க வேண்டிய உயர்ந்த உறவு முறை!

அவனிடத்திலே நாம் வைக்கிற அன்பு ரொம்ப சொற்பம். ஏனென்றால் இந்த பிரகிருதி மண்டலத்திலே காலம் கட்டுப்படுத்துகிறது நம்மை. அதற்கும் மேலே, சரீரம் இடங்கொடுக்கமாட்டேனென்கிறது. பலவிதமான இடைஞ்சல்கள்...! இந்த உலகத்திலே இவ்வளவையும் மீறி, அவனிடத்திலே அன்பு வைக்க வேண்டுமானால் எவ்வளவு கஷ்டம்! அவனிடத்திலே நெருங்குவதற்கு எத்தனை தடைகள்! இவ்வளவையும் மீறி ஒருவன் பகவானிடத்திலே வாத்ஸல்யத்தோடு பக்தி வைத்து விட்டானானால், அவனை பகவான் விட்டுவிடுவானா?

அவன் வாத்ஸல்யம் நிரம்பியவனாயிற்றே... அதனால் விடமாட்டான். பக்கத்திலேயே இருந்து ரக்ஷிப்பான். அவ்வாறு அவன் ரக்ஷிப்பான் என்பது பாரத யுத்தத்திலே தெரிகிறது...

அர்ஜுனனுக்கும் கர்ணனுக்கும் யுத்தம் நடக்கிறது. கிருஷ்ண பரமாத்மா சாரதியாய் இருந்து ஓட்டுகிறார்.

அர்ஜுனன் கர்ணனுடைய ரதத்துக்கென்று பாணப் பிரயோகம் பண்ணுகிறான்... கர்ணனுடைய ரதம் 3.5 மைல் பின்னாலே போய் விழுகிறது. கர்ணன் பாணப் பிரயோகம் பண்ணுகிறான். அர்ஜுனனின் ரதத் தட்டு முப்பது மைல்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

தள்ளிப் போய் விழுந்தது.

அந்த சமயத்திலே அர்ஜுனனுக்கு கர்வம் வந்து விட்டது! இவனடித்தால் 35 மைல் போயிற்று. கர்ணன் அடித்ததோ முப்பது மைல்தான் போயிற்று என்கிற கர்வம்!

உடனே அர்ஜுனன் என்ன பண்ணினான், முன்னாலே உட்கார்ந்திருந்த பரமாத்மாவின் முதுகிலே ஒரு தட்டு தட்டினான்!

"பாவா! கிருஷ்ணா! என் பராக்கிரமத்தை நீ பார்த்தாயா...?"

"நான் அடித்தேன், 35 மைல் பின்னாலே போய்விட்டது. அவன் அடித்தான் முப்பது மைல்தான் பின்னால் போயிற்று... பார்த்தாயா என் பராக்கிரமத்தை!..."

"அடுலனா!" என்றான் தெலுங்கில் பரமாத்மா. 'அடுலனா' என்றால், 'அப்படியா?' என்று அர்த்தம்!

'அப்படியா...' என்றால் ஏதோ நடக்கப்





## அருள்வாக்கு

**கோ**பதாபமில்லாமல், காம மோஹங்களில்லாமல், பதற்றப் படாமல், அதற்காக ஒரேயடியாக மந்தமாகச் சோம்பியும் வழியாமல், சாந்தமாகவும் ப்ரியமாகவும் இருந்து கொண்டே நல்ல சிந்தனா சக்தியுடனும் க்ரியா சக்தியுடனும் இருப்பது தான் ஸத்வகுணம், ஸாத்விகம் என்பது ஒரே பதற்றம், காமக்ரோதாதி உணர்ச்சி வசப்படுவது இவை எல்லாம் ரஜஸ்-ரஜோகுணம் அல்லது ராஜஸ குணம் என்பது. ஒரே சோம்பல், மந்த புத்தியாயிருப்பது தமஸ்-தமோகுணம் அல்லது தாமஸகுணம். இப்படி மூன்று குணங்கள். உணர்ச்சி மயமாக, ஓவர்-இமோஷனலாக, தடாபுடா என்று தாறுமாறாகக் காரியம் பண்ணுவது ரஜஸ். அது ஒரு 'எக்ஸ்ட்ரீம்' (கோடி).



ஒரே 'டல்'லாக, எதற்கும் ப்ரயோஜனமில்லாமல், புத்தியுமில்லாமல் கார்யசக்தியுமில்லாமலிருப்பது தமஸ்-இன்னொரு 'எக்ஸ்ட்ரீம்'.

போகிறது என்று அர்த்தம்.

பகவான் 'அப்படியா' என்றால் போச்சு! அவன் ஒரு சின்ன சிரிப்பு சிரித்தாலே போச்சு!

அவன் ஒரு சின்ன சிரிப்பு சிரித்தால் அதில் ஆயிரம் அர்த்தம் இருக்கும். 'இதற்குச் சிரித்தான், அதற்குச் சிரித்தான், இதற்குச் சிரித்தான், இதற்காகச் சிரித்திருக்கக் கூடும். அதற்காகச் சிரித்திருக்கக்கூடும்; இதற்காகவும் சிரித்திருக்கக் கூடும்...' என நாம் யூகங்களை எழுதிக் கொண்டேயிருக்க வேண்டியதுதான். நாம் எழுதியதையெல்லாம் தாண்டி வேறேதேனும் ஒன்றிற்குச் சிரித்திருப்பான் அவன்!

'அந்த அசுரன்- நரகாசுரன்-வந்து சித்ரவதை பண்ணுகிறான். அவனை நீ அடக்கி ஆள வேண்டும்' என்று பகவானிடத்திலே வந்து சரணாகதி பண்ணுகிறான் இந்திரன்.

இந்திரன் வருகிறபோது பரமாத்மா ஒரு புன்முறுவல் பூத்தானாம்.

ஏன்...?

'இப்படி, காரியம் ஆக வேண்டும் என்று வந்து சேவிக்கிறானே...? நாளைக்கு யுத்தம் பண்ணப் போகிறானே நம்மோடு-பாரிஜாத விருக்ஷத்துக்காக வந்து சண்டை போடப் போகிறானே...' என்று இந்திரனின் நிலைமையைப் பார்த்துச் சிரிக்கிறான், சர்வக்ஞனான பரமாத்மா!

ஆக... அவன் சிரித்தால் அதற்கு ஆயிரம் அர்த்தம் இருக்கும்! இப்படி கிருஷ்ணாவதாரத்திலே ஒவ்வொரு சிரிப்புக்கும் ஆயிரம் அர்த்தம் சொல்லிக் கொண்டே போகலாம்.

**அ**தனால், அர்ஜுனன் பேசுவதைக் கேட்டும் பகவான் 'அடுலணா' என்று சிரித்தான்.

சிரித்தவன் என்ன பண்ணினான்... மேலே துவஜத்திலே ஆஞ்சநேயன் இருக்கிறான்... அவனைப் பார்த்து, 'கீழே குதி'' என்றான்.

''இது மொத்தத்தையும் நீ பிடித்துக் கொள்...'' என்று குதிரையை அர்ஜுனன் கையிலே கொடுத்தான். ரதத்தை விட்டு கீழே இறங்கினான். இறங்கி, ஆஞ்சநேயன் தோளில் கையைப் போட்டுக் கொண்டு பேசினான்.

''அர்ஜுனா! அன்னிக்கு திரேதா யுகத்திலே இந்த ஆஞ்சநேயனோடு ஒரு ரகசியம் சொல்ல வேண்டியிருந்தது. அதற்கு அவகாசமே கிடைக்காமல் போய்விட்டது. இப்போதுதான் ஞாபகம் வந்தது— ஆகையினாலே கொஞ்சம் நாழி நீ ஓட்டிக் கொண்டிரு... இந்த ஆஞ்சநேயர்கிட்டே அந்த ரகசியத்தைச் சொல்லிவிட்டு வந்துவிடுகிறேன்...'' என்று ஆஞ்சநேயரோடு அந்தர்தியானமாகிவிட்டான். பரமாத்மா

இரண்டுக்கும் நடுவே ஸம நிலையில் 'பாலன்ஸ்டாக' இருப்பது ஸத்வம். மனஸின் எழுச்சி ரஜஸ்; தாழ்ச்சி தமஸ்; ஸமநிலை ஸத்வம். எண்ணம், காரியம் இதுகளைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிற ஸத்வத்தையும் விட உசந்த ஒரு நிலை உண்டு. அங்கே மனஸ் (எண்ணம்), சரீரம் (காரியம்) இதுகளை ஒருத்தன் அடியோடு கடந்து விடுவான். தமஸ் மனஸின் தாழ்ச்சி என்றால், இது மனஸின் வீழ்ச்சி. தமஸிலே தூங்குவான்; இதிலே ஸமாதி நிலையை அனுபவிப்பான். என்ன வித்யாஸமென்றால், தூங்குகிறவனுக்குத் தன்னைத் தெரியாது; ஸமாதியிலிருக்கிறவனும் வெளியில் பார்த்தால் தூங்குகிறாற் போலத்தானிருந்தாலும் அவனுக்குத் தன்னை நன்றாகத் தெரியும்; தான் ஒன்றுதான் இருக்கிற எல்லாமும் என்று தெரியும். இப்படியிருக்கிறவன், நாமெல்லாம் சின்னதாக 'நான்', 'நான்' என்று எதையோ சொல்லிக் கொண்டு அதற்காக இத்தனை ஹிம்ஸையும் பட்டுக் கொண்டிருக்கிறோமே, அந்த 'நானை'ப் பற்றின நினைப்போ, அரிப்போ கொஞ்சங்கூட இல்லாமல், ஈச்வரன் கைக்கருவியாக, லோக கல்யாணத்துக்காக ரஜோ குணக்காரனைவிட நிறைய சிந்தித்து, நிறையக் காரியமும் பண்ணுவான். நாம் பட்டுக்கொண்டு, அடிபட்டுக் கொண்டு பண்ணுவதைவிட ஜாஸ்தியாகவும் சுவரணையாகவும் இவன் பட்டுக் கொள்ளாமலே பண்ணிவிடுவான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

மறைந்து போய்விட்டான்.

அப்போது கர்ணனுக்கும் அர்ஜுன னுக்கும் யுத்தம் மறுபடியும் நடந்தது. மறு படியும் கர்ணன் பாணப் பிரயோகம் பண்ணினான். 150 மைல் பின்னாலே போய் விழுந்தது ரதம்! ரதம் ஒரு பக்கம்- அர் ஜுனன் ஒரு பக்கம்! தலையிலே அணிந்து கொண்டிருந்த கிரீடம் கீழே விழுந்தது. ஒவ்வொன்றையும் எடுத்து சரி தட்டுவதற் குள் பிராணன் போகிறது. அவ்வளவு சிர மப்பட்டு எடுத்துக் கொண்டிருக்கிறான்!

எல்லாம் முடிந்து, கிரீடத்தைப் போய் எடுக்கிறபோது அர்ஜுனனுடைய முதுகிலே இலேசாகத் தட்டினான் பகவான்.

"பாவா அர்ஜுனா! உன் பராக்கிரமத்தை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேனடா!" என்றான்.

நடுங்கிப் போய்விட்டான் அர்ஜுனன்.

ஆஞ்சநேயன் இருக்கிறபோது, முன் னாலே ரதசாரதியாக பரமாத்மா, விச் வாத்மா- உட்கார்ந்திருக்கிறபோது, இவ் வளவு பலம் அர்ஜுனனுக்கு இருக்கிற போதே கர்ணன் அவனை முப்பது மைல் பின்னால் தள்ளுகிறான் என்றால் யார் பலவான்...? அர்ஜுனனா? கர்ணனா...?

பகவான் கேட்கிறான்: "நீ பலவானா? உன்னை ஒவ்வொரு கணத்திலேயும் காக்கும் நான் இல்லையேல் உன் கதி என்ன? அதை மறந்து, 'பார்த்தாயா என் பராக்கிரமத்தை' என்று கேட்கிறாயே...?"

அர்ஜுனன் உண்மையை உணரும்படி பண்ணிவிட்டான் பரமாத்மா.

இப்போது நாமும் உணர வேண்டும். என்ன உணரவேண்டும் என்றால், கூடவே இருந்து, பகவானுடைய பெருமையைப் பார்த்துக் கொண்டேயிருந்து அவனை அனுபவித்த அர்ஜுனனுக்கே விவேகம் வரவில்லையே... நமக்கு எங்கேயிருந்து வரும்?! நாம் அந்த பகவானைப் பார்க்க வில்லையே! அவனோடு பழகவில்லையே அவனுடன் பேசி மகிழவில்லையே...!' ஏதோ இருப்பதை படித்து வைத்துக் கொண்டு சொல்கிறோம்- இது லாபமா? ஏதோ கேட்கிறோம்- இது பிரயோஜனமா? அவனுடன் பேச வேண்டாமா? அவனோடு உரையாட வேண்டாமா? உரையாடி யவனுடைய நிலையே ஒரு க்ஷணம் மறந்து போய், 'நான்தான் எல்லாம் பண்ணுகிறேன்' என்று அகங்காரம் வந்து விடுகிறதே! அர்ஜுனனுக்கு வந்ததே! அது நம்மைப் போன்றோருக்குக் கட்டாயம் வரும் என் பதுதான் உண்மை. அப்போது நாம் இந்தக் கதையை நினைத்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். கதையை நினைத்துக் கொண்டு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

(தொடரும்)

இதுபோல் நம்
ஒவ்வொருவருக்கும் ஒரு
லட்சியம் இருக்கும்...
இருக்கவேண்டும்.

வக்கீலாக... டாக்டராக...
வங்கி அதிகாரியாக...
இப்படி எத்தனையோ
கனவுகள்... குறிக்கோள்கள்.

இளம் வயதில்
நம் உழைப்புதான் வெற்றிக்கு
அடிப்படை. மாறாக,
சபலத்திற்கு இடம்
கொடுத்தால்...
வாழ்நாளெல்லாம்
அவலம்தான் மிஞ்சும்.

**சாதனை படைக்க வேண்டிய
வயதில் சபலம் எதற்கு ?**

**நான் இஞ்சினியர் ஆகணும் அதுவே என் குறிக்கோள்**





**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு சங்கம்**
417, பாந்தியன் ரோடு, சென்னை - 600 008.
போன் : 8255467, 8255261, 8254917
ஹாட் லைன் : 8256882, 8256864.






1998 ஜூன் 21
வெகுதான்ய ஆனி 7
மலர் : 56
இதழ் : 47

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## விஷம் தடவிய கத்தி!

ஜூலை இறுதிவரை வாய்தா கேட்டுக் கொண்டிருக்கிறார் பிரதமர்! 'தமிழக அரசை டிஸ்மிஸ் செய்யப் போகிறீர்களா இல்லையா...?' என்ற ஜெயலலிதாவின் மிரட்டலுக்குப் பயந்து, 'நாடாளுமன்ற பட்ஜெட் கூட்டத் தொடர் முடிந்ததும் கோரிக்கையை (மிரட்டலை?) பரிசீலிக்கிறோம்' என்று சமாதானம் கூறியிருக்கிறார்!

வாஜ்பேயின் போக்கு ஒரு பிரதமரின் கௌரவத்துக்கும் பொறுப்புணர்ச்சிக்கும் உகந்ததாக அமையவில்லை. ஜெயலலிதாவின் பிடிவாதமோ விஷம் தடவிய கத்தி! ஆதரவு வாபஸ் என்ற ஆயுதத்தில் 'தமிழக சட்டம் ஒழுங்கு நிலைமை கவலைக்கிடம்' என்ற விஷத்தைத் தடவி, 'விட்டேனா பார்...' என்று சுழற்றிக் கொண்டிருக்கிறார்.

டிஸ்மிஸ் கோரிக்கையைக் காரணமாக்கி நாடாளுமன்றத்திலிருந்து வெளிநடப்புச் செய்கிற அளவுக்கு அ.தி.மு.க தாழ்ந்திருக்கிறது. அ.தி.மு.க பங்கேற்கின்ற அரசை எதிர்த்து அ.தி.மு.க.வே வெளிநடப்புச் செய்கிற அபத்தம் அரங்கேறுகிறது!

ஒரு பொய்யைத் திரும்பத் திரும்பச் சொல்லி நிஜம் போல அதை தொனிக்கச் செய்வதென்பது கோயபெல்ஸ் பிரசாரம். அந்தப் பிரசாரம் ஜெயலலிதாவுக்குக் கைவந்த கலையாகியிருக்கிறது.

இதை உணர்ந்து பிரதமர் எச்சரிக்கை அடைந்தாலும் அடையாவிட்டாலும் தமிழக முதல்வர் எச்சரிக்கையாக இருக்க வேண்டியது ரொம்ப முக்கியம்.

ஜூன் 15 அன்று விவசாயிகளை ஒன்று திரட்டிப் போராட்டம் நடத்தப் போவதாக




அறிவித்திருக்கிறார் ஜெ. இது தமிழகத்தில் சட்டம் - ஒழுங்குச் சீர்குலைவை உருவாக்கத் திட்டமிட்ட செயலாக இருக்கக் கூடும்.

விவசாயிகளின் நலன்கள் புறக்கணிக்கப்பட்டுள்ளன என்ற பிரசாரத்தில் தொடங்கும் இந்தப் போராட்டம், ஆளும்கட்சிக்கு சங்கடம் விளைவிக்கும் வகையில் வன்முறை, அரசியல் பழிவாங்கல் என்ற திசைகளில் திருப்பி விடப்பட்டால் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

அ.தி.மு.க.வின் இந்த வியூகத்தை முறியடிக்கும் வகையில் அரசு செயல்பட வேண்டும். விவசாயிகளை, விவசாயத் தலைவர்களை முன்கூட்டியே சந்தித்து, அவர்கள் நலனில் அக்கறை கொண்டுள்ளதை எடுத்துச் சொல்லி ஒத்துழைப்புக் கோர வேண்டும்.

ஜூன் 19 முதல் ஜூலை 2 வரையில் தி.மு.க. அரசின் 'பழிவாங்கல்' நடவடிக்கைகளை எதிர்த்து பொதுக்கூட்டங்கள் நடத்தத் திட்டமிட்டிருக்கிறது அ.தி.மு.க. இந்தக் கூட்டங்களின்போது வன்முறை வெடிக்காமல் பாதுகாப்பு அளிப்பதும் மிக முக்கியம். இக்கூட்டங்கள் அமைதியாக, அரசு பாதுகாப்புடன் நடந்தேறினாலே முதல்வருக்கு வெற்றிதான். மாறாக, ஆளும் கட்சிக்காரர்களின் உணர்ச்சி வேகத்தினால் அசம்பாவிதங்கள் நடந்தால் ஆட்சிக்கு அவப்பெயர் நேர்ந்து விடும்!

ஜெயலலிதாவின் கோரிக்கையை நிறைவேற்ற வாஜ்பேயிக்கு வழி வகுத்துக் கொடுத்து விடாமல் தமிழக முதல்வர் முன்னெச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும்.

# முந்திக் கொண்ட மகளிர் கமிஷன்

கொடைக்கானல் அருகே குண்டுப்பட்டி என்ற கிராமத்தில் நடந்த காவல்துறை அத்துமீறல்களை ஆராய்ந்து அறிக்கை தர ஒரு கமிஷனை தமிழக அரசு நிறுவியது. அந்த கமிஷன், குண்டுப்பட்டி சம்பவங்களை ஆய்வு செய்து அறிக்கை தருவதற்குள் தேசிய மகளிர் கமிஷன் அப்பணியைச் சுறுசுறுப்பாகச் செய்து விட்டது!




356-கத்தி தீட்டப் பட்டு வருகிறது. – காளிமுத்து

கொடைக்கானல் பஞ்சாயத்து சேர்மனை குண்டுப்பட்டி கிராம மக்கள் கைப்பற்றி, தங்கள் கட்டுப்பாட்டில் வைத்து மிரட்டியதாகவும் அதன் காரணமாகவே காவல்துறையினர் அவ்வூரில் நுழைந்து அவரை விடுவிக்க வேண்டியதாயிற்று என்பதும் காவல்துறை வாதம்.

தேசிய மகளிர் கமிஷனின் கண்டுபிடிப்பு இதற்கு நேர் மாறாக அமைந்துள்ளது: அப்பகுதி மக்கள் அடிப்படை வசதிகள் கோரிப் போராடினார்கள் என்பதுதான் உண்மை. அந்தப் போராட்டம் ஆளும்கட்சியைச் சேர்ந்த உள்ளாட்சித் துறை உறுப்பினருக்கு எதிராக இருந்ததால் காவல் துறையினர் தங்கள் 'பலத்தை'க் காட்டி மக்களை ஒடுக்க முயன்றனர். அந்த முயற்சியில் ஏராளமான அத்துமீறல்கள்; பெண்களுக்கெதிரான கொடுமைகள் நிகழ்ந்துள்ளன...

- இதுதான் தேசிய மகளிர் கமிஷனின் கண்டுபிடிப்பு.

'இச் சம்பவங்களுக்குப் பிறகு கிராம மக்களுக்கு முதல்வர் இடைக்கால நிவாரணம் அளித்துள்ளதை வரவேற்கிறோம்... ஆனால் அது மட்டுமே போதாது...' என்கிறது கமிஷன்.

'கட்சி சார்பாகச் செயல்பட்ட காவல் துறையினரைத் தாற்காலிகமாகப் பணி மாற்றம் செய்வதென்பது வெறும் கண்துடைப்பு; அவர்கள் நியாயமான தண்டனை பெற்றே ஆக வேண்டும்' என்கிறது கமிஷன்.

பாதிக்கப்பட்ட குண்டுப்பட்டி மக்களுக்கு, குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் நிரந்தர நிவாரணம் அளிக்கப்பட வேண்டும் என்பது கமிஷனின் நியாயமான சிபாரிசு.

அரசு நியமித்த கமிஷனின் முடிவுகள் வெளி வரும் வரையில் காத்திராமல், தேசிய மகளிர் கமிஷனின் முடிவுகளை ஏற்பதும் அதன் அடிப்படையில் உகந்த தாற்காலிக நடவடிக்கைகள் எடுப்பதும் பண்பட்ட அரசியலுக்கும் ஆட்சி முறைக்கும் அடையாளமாக அமையும்.

பிற்பாடு அரசு நியமித்த கமிஷன் அறிக்கை வெளிவந்து அது ஒருவேளை மாறுபட்டு அமையுமானால், அப்போது அதற்கேற்ப இன்றைய தாற்காலிக உத்தரவுகளை மாற்றி அமைத்துக் கொள்ளலாம்.

# “பா.ஜ.கவைத் திருப்திப்படுத்துவதே தி.மு.க.வின் நோக்கம்!”

**குண்டு வெடிப்பு, கலவரப் பின்னணியில் கைது செய்யப்பட்டு சிறையில் வாடுவோர் குடும்பங்களுக்கு நிதியுதவி வழங்குவதற்காகக் கோவை வந்திருந்தார் த.மு.மு.க. (தமிழ்நாடு முஸ்லீம் முன்னேற்றக் கழகம்) மாநிலப் பொதுச் செயலாளர் ஹைதர் அலி. திரண்டு நின்ற குடும்பப் பெண்களை (பெரும்பாலும் முஸ்லீம்களே) விசாரித்துக் கொண்டே 'காசோலை'களை பட்டுவாடா செய்து கொண்டிருந்தார். அவரிடம் நாம் சில கேள்விகளை வைத்தோம்...**

**“தற்போது தமிழக அரசு கொண்டு வந்துள்ள பயங்கரவாத தடுப்புச் சட்டத்தை இந்து முன்னணி (ராமகோபாலன்) வரவேற்றிருக்கிறது. நீங்களோ எதிர்க்கிறீர்கள். என்ன காரணம்?”**

“இதை நாங்கள் மட்டுமல்ல, பாட்டாளி மக்கள் கட்சி, தேசிய லீக், கம்யூனிஸ்ட் கட்சிகள், புதிய தமிழகம், மனித உரிமை ஆர்வலர்கள் அனைவரும்தான் எதிர்க்கிறார்கள். இச் சட்டத்தின் மூலம் போலீஸ்காரர்கள் கைகாட்டினாலே போதும். அவர்கள் குற்றவாளிகளாக உருமாற்றப் படுவார்கள். இச்சட்டத்தில் மனிதனின் அடிப்படை உரிமைகளை மீற நிறைய இடமிருக்கிறது. குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யாமலேயே 180 நாட்கள் வரை ஒருவரைச் சிறையில் அடைக்கலாம். சொத்துக்களை ஜப்தி கூட செய்யலாம். தடாவை விட கொடூரமானது. எதிர் முகாமில் ஆதரிக்கிறார்களே எனக் கேட்கிறீர்கள். இன்றைய கருணாநிதி, யாருக்காக இந்தச் சட்டத்தைப் போட்டிருக்கிறார் என்பது ராமகோபாலனுக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் அவரின் தற்போதைய அறிக்கைகள் கூட கருணாநிதி பக்தனாகவே அவரை இனம் காட்டுகிறது. இப்போதும் சொல்லுகிறேன். கோவையிலும் திருச்சியிலும் கைது செய்யப்பட்டவர்களில் பெரும்பான்மையோர் அப்பாவிகள். 'அல் உம்மா' என்று சொல்லி மற்ற அமைப்புகளின் நிர்வாகிகளைக் கூட கைது செய்திருக்கின்றனர். எங்கள் மாநகர மாவட்டச் செயலாளர் அயூப்கான், பொருளாளர் யாசின், துணைத் தலைவர் ஹாஜா, துணைச் செயலர் சாதிக் அலி, மற்றும் போலீசுக்கு வேண்டாதவர்கள், எல்லாம் பயங்கரவாதிகளாகத் தெரிகிறார்



[redacted]

கள்; உருவாக்கப்படுகிறார்கள். அதே நேரத்தில் இச்சட்டத்தை சட்டமன்றத்தில் நிறைவேற்றும் பொழுது, சட்ட அமைச்சர் ஆலடி அருணா, 'இந்தச் சட்டத்தை எந்தவித எதிர்ப்புமில்லாமல் நிறைவேற்றினால் வடக்கே உள்ளவர்களும் மெச்சுவார்கள்' என்பது போலப் பேசி இச்சட்டத்திற்கு ஆதரவு கோரினார்."

**"தமு.மு.க.வை தடை செய்ய வேண்டும் என ஒரு கோரிக்கை. அல் உம்மாதான் இப்போதைய த.மு.மு.க. என்றெல்லாம் பரவலாய்ப் பேச்சு!"**

"1995 ஆம் ஆண்டு த.மு.மு.க. ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து இன்று வரை நடத்திய போராட்டங்கள் என்னென்ன, வன்முறையைத் தூண்டுகிற-துணைபோகிற சம்பவங்களை அது நடத்தியுள்ளதா என யோசித்துப் பாருங்கள். இதைத் தடை செய்யச் சொல்பவர்கள்தான் தமிழகத்தின் அமைதியை 1981-லிருந்தே கெடுப்பவர்களாக இருந்து வந்திருக்கின்றனர். ஒரு குடும்பப் பெண்ணை விபசாரி என்று சொல்வது போல் உள்ளது இவர்கள் கூற்று. தமிழக அரசு, ஜிகாத், அல் உம்மா ஆகியவற்றைத் தடை செய்த நேரத்தில், நியாயமான நடவடிக்கையை எடுத்திருந்தால் ஆர்.எஸ்.எஸ்., இந்து முன்னணி ஆகியவையும் கடந்த நவம்பர், டிசம்பரிலேயே தடை செய்யப்பட்டிருக்க வேண்டும். ஏனென்றால் எதிர் முகாமில் இருக்கிறவர்களால் மதிக்கப்படுகிற மனிதர்கள், தாறுமாறாகப் பேசுவதும், எழுதுவதும்தான் ஆங்காங்கே நடக்கும் கலவரங்களின் ஆணிவேராக இருந்து வருகிறது."

**"தடா கைதிகளை வெளியில் விட்ட பிறகுதான் கலவரமும், குண்டு வெடிப்பும் நடந்துள்ளன என்பது பொதுவான அபிப்ராயம். உங்களுக்குள்ளும் (த.மு.மு.க.வில்) தடாவிலிருந்து வெளி வந்தவர்கள் உள்ளதாகத் தகவல். அவர்களின் போக்கு இப்போது எப்படி உள்ளது?"**

"இந்தக் கேள்வியே தவறான கண்ணோட்டத்தில் எழுந்த கேள்வி. தடா கைதிகள் வந்த பிறகுதான் குண்டு வெடிப்பு நிகழ்ந்தது என்பதைவிட 1997 நவம்பர் கலவரத்தின் பின்னணியில்தான் குண்டு வெடிப்பு நிகழ்ந்தது என முதல்வரே தமது வெள்ளை அறிக்கையில் தெளிவுபடுத்தியிருக்கிறார். கோவையில் அப்போது தடாவில் கைது செய்யப்பட்ட சம்பவம் அன்று இருந்த காவல்துறை ஆணையாளர் கணேசனின் காவிச் சிந்தனையால் நிகழ்த்திக் காட்டப்பட்ட சம்பவமே. முறையான நீதிமன்றத் தீர்ப்பின்படியே தடா கைதிகள் விடுவிக்கப்பட்டனர். குறிப்பாக அன்றைக்கு அவர்கள் அனுபவித்தது செய்யாத குற்றத்திற்கான தண்டனையே. அதனாலேயே நாங்கள் மக்களைத் திரட்டிப் போராடினோம்!"

**"அப்படியென்றால் குண்டு வெடிப்பின் பின்னணியில் யார்தான் இருந்தார்கள் எனச் சொல்லுகிறீர்கள்?"**

**"போலீஸார் இன்னும் திருந்தவில்லையென்பதே எங்களின் வேதனையான அனுபவம். இன்றைய தமிழக அரசு மத்திய பா.ஜ.க. அரசை திருப்தி செய்வதை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருக்கிற ஓர் அம்சத் திட்டத்துடன் செயல்படுவதுதான் உண்மை நிலவரம்."**

"1997 நவம்பரில் காவல் துறையினரால் நடத்தப்பட்ட வன்முறைகள் தான். போலீஸ்காரர் செல்வராஜ் கொலைக்குப்பிறகு காவலர்களுக்கும், காவல் துறை அதிகாரிகளுக்கும் இருந்த மோதல்கள்தான் அன்று கலவரமாக வெடித்தது. எங்கள் இஸ்லாமிய சகோதரர்கள் அநியாயமாகக் கொல்லப்பட்டார்கள். குறிப்பாக அவர்களின் சொத்துக்கள் திட்டமிட்டு சூறையாடப்பட்டன. கொள்ளை, தீவைப்புச் சம்பவங்கள் நடந்தன. அந்நேரத்தில் காவலர்களோடு 'இந்துத்வா' சக்திகள் கைகோத்துக் கொண்டு



''புது ஏரியாவுக்குப் பேர் வையுங்க'னு தலைவரைக் கேட்டுக்கிட்டே சரி; எதுக்கு கொசுத் தொல்லை அதிகமா இருக்குன்னு புலம்பினே!''

''ஏன் அதுல என்ன தப்பு?''

''இந்த புது ஏரியாவுக்கு மலேரியான்னு பேர் வைக்கிறதா அறிவிச்சுட்டார்!''



''ஹனிமூன்லேயே சண்டையை ஆரம்பிச்சுட்டாங்கன்னு நினைக்கிறேன்...''

''எப்படிச் சொல்றே?''

''எங்கே போயிட்டு வந்தேன்னு கேட்டால் 'சனிமூன்' போயிட்டு வந்தேன்கிறானே!''



''அந்த ஆளை டாக்டர் ஏன் 'ஆயிரத்தில் ஒருவன்'னு புகழ்கிறார்?''

''அவர் செஞ்ச ஆயிரம் ஆபரேஷனில் பிழைச்ச ஒரே ஆளாம்!''

– வெ. ராஜாராமன்

இஸ்லாமியர்களுக்கு எதிரான வன்முறையில் ஈடுபட்டனர். அச் சம்பவம் யார் யாரால் நடந்ததென்பது தெளிவாக அரசுக்குத் தெரிந்திருந்தாலும் அதை மூடி மறைப்பதில்தான் கவனம் செலுத்தினார்களே யொழிய, தவறு செய்தவர்களை தண்டிக்க வேண்டும் என சிறிதளவும் நினைக்க வில்லை. பாதிக்கப்பட்டவர்களுக்கு அரசிடத்தில் நீதியும் பரிவும் கிடைக்குமென எதிர்பார்த்த மக்கள் ஏமாற்றத்திற்கு உள்ளானார்கள். இந்தக் குண்டு வெடிப்பைப் பற்றி கவலைப்படுகிற சிந்தனையாளர்கள், அரசியல்வாதிகள், பத்திரிகையாளர்களும் கூட ஏனோ அச்சம்பவத்தை மறந்தே விட்டனர். இவ்வாறாக நாங்கள் புறக்கணிக்கப் படுகிறோம் என எண்ணிய ஒரு சில இளைஞர்கள், தங்களுடைய வெறுப்பை வெளிப்படுத்துகிற முகமாக இக் கொடுஞ் செயலைச் செய்திருக்கலாம் என்பதுதான் எங்களின் கருத்து. அதற்காக நடந்த குண்டு வெடிப்பை எந்த மனித நேய ஆர்வலர்களும் நியாயப்படுத்த மாட்டார்கள். நியாயப்படுத்தவும் முடியாது. இதேதான் எங்கள் நிலையும்.''

**''காலங்காலமாய் இங்குள்ள முஸ்லீம் லீக் கூட இந்த அளவு நிவாரண நடவடிக்கையை எடுத்து விடவில்லை. நீங்கள் இவ்வளவு துரிதமாய் இதைச் செய்வதற்கும், உங்களுக்குக் கிடைக்கும் பணத்துக்கும் 'ஏதோ பின்னணி' உள்ளதாகக் கூறப்படுகிறது. இது பற்றிச் சட்ட சபையில் கூட சர்ச்சை கிளம்பியதே? உங்கள் பதில் என்ன?''**

''த.மு.மு.க. என்பது ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமைகளை பெற்றுத் தருகிற ஒரு பேரியக்கம். இது எந்தச் சமூகத்திற்காகக் குரல் கொடுக்கிறதோ அந்த மக்களை அறைகூவல் விடுத்து அழைத்து, அவர்களின் உழைப்பிலிருந்தே நன்கொடைகள் பெற்று அதற்கென தனி வங்கிக் கணக்கை (Coimbatore Muslim Relief Fund) தொடங்கியுள்ளது. நிவாரணத் தொகையைக் காசோலைகளாகவே அளித்து பகிரங்கமாகச் செயல்பட்டு வருகிறோம். இதை எங்கள் 'உணர்வு' பத்திரிகையிலும் விரிவாக வெளியிட்டு வருகிறோம். இதுவரை எந்த ஓர் அரசியல் இயக்கமும் இதுபோன்ற முறையான கணக்குகளை வைத்து நிவாரணம் அளிக்கவில்லை. இதனாலேயே

அவர்கள் எங்களைச் சந்தேகப்படுகிறார்களேதவிர, வேறில்லை..."

**"அப்படியே இருக்கட்டும். குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் உள்ளவர்கள் குடும்பங்களாகப் பார்த்து மாதாமாதம் (ரூ. 2000/-) நீங்கள் நிவாரண நிதியளிப்பது அவர்களின் செயலை ஆதரிப்பதாக ஆகிவிடாதா? அவர்களை தியாகியாக்கிவிடாதா?"**

"நாங்கள் அளிக்கும் உதவி குற்றம் செய்தவர்களுக்கு அல்ல. பொய்யாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் வாடிக் கொண்டிருப்பவர்களுக்கு மட்டுமே. அதை முதலில் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். எங்களுடைய பார்வையில், கோவை குண்டு வெடிப்புக் குற்றவாளிகளை முறையாகப் பிடிப்பவர்கள் பரம்வீர்சிங் தலைமையில் இயங்கும் – நேர்மையான அதிகாரியின் கீழ் இயங்கும் CBCID போலீசார் மட்டும்தான். சட்டம்-ஒழுங்கு பிரிவை சேர்ந்தவர்கள் யாரையாவது பிடித்துக் கைது செய்து எண்ணிக்கையைக் கூட்டுகிறார்களே தவிர உண்மையான குற்றவாளிகளைப் பிடிப்பதில்லை. அப்படி பிடிபட்ட அப்பாவிகளின் குடும்பங்கள் அந்தப் பகுதி நிர்வாகி-மாவட்ட நிர்வாகிகளால் ஆய்வு செய்யப்பட்டு மூன்று கட்ட பரிசிலனைக்கு உட்படுத்தப்படுகின்றன. பிறகே நிதியுதவி வழங்குகிறோம்."

**"இன்னும் குண்டு வெடிக்கப் போகிறது– என ஜனங்கள் மத்தியில் ஒரு பீதி இருக்கிறதே?"**

"குண்டு வெடிக்கப் போகிறதா? யார் வைக்கப் போகிறார்களோ அவர்கள் மீது துரிதமாக நடவடிக்கை எடுத்துக் களைய வேண்டியது அரசின் கடமை."

**"இப்போது, இஸ்லாமியரிடத்தில் காவல்துறையின் அணுகுமுறை எப்படியுள்ளது?"**

"போலீஸார் இன்னும் திருந்தவில்லையென்பதே எங்களின் வேதனையான அனுபவம். இன்றைய தமிழக அரசு, மத்திய பா.ஜ.க. அரசை திருப்தி செய்வதை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருக்கிற ஓர் அம்சத் திட்டத்துடன் செயல்படுவதுதான் உண்மை நிலவரம். தமிழ் நாட்டில் மக்கள் விரோதப் போக்கைக் கடைப்பிடிக்கின்ற அரசுதான் செயல்படுகிறது. இது பரவலாக நடக்கும் காவல் துறையின் அத்துமீறல்களிலிருந்து தெரிய வருகிறது."

**"குண்டு வெடிப்பிற்கும், பாகிஸ்தானின் உளவுத் துறைக்கும் (ISI) தொடர்பு எனச் சொல்லப்படுகிறதே?"**

(ஆவேசம் ததும்ப) "இப்படிச் சொல்வதென்பது 'இஸ்லாமியன் இந்த இந்திய தேசத்திற்குச் சொந்தக்காரனல்ல' என்று வர்ணம் பூசுகிற செயல். ஒரு பாடகன் வருகிறான்; ஓர் இசைக் கலைஞன் வருகிறான்; ஒரு விளையாட்டு வீரனும் வருகிறான்....' அவன் இங்கே பாடக் கூடாது, இசையமைக்கக் கூடாது, விளையாடக் கூடாது...' என்றால் அது பாசிச சிந்தனை! இந்த தேசத்தை நேசிக்கிற இஸ்லாமியர் மீது சுமத்துகிற அபாண்டமேயொழிய வேறில்லை."

பேட்டி, படம்: **ரோகிணி**

**"உன் காதலன் ரமேஷ் பந்தய வெறியனா இருப்பான்னு எப்படிச் சொல்றே?"**



**"பின்ன என்னடி...? பீச்சுல வாங்கின சுண்டல் பாக்கெட்ல, 'சுண்டல் ஒற்றை இலக்கத்துல இருந்தா காதல் சக்ஸஸ் ஆகும்; இரட்டை இலக்கம்னா ஃபெய்லியர் ஆயிடும்; பெட்டு கட்டுறியா'ன்னு கேட்டாரே!"**

**– சீர்காழி வி. ரேவதி**



''அவர் எல்லாமே 'தள்ளுபடி விலை'யில் வாங்கறவரா இருக்கலாம்!'' ஆனா அதுக்கும் ஒரு எல்லை இல்லையா?''

''ஏன்? என்ன செய்தார்?''

''போன மாசத்து நியூஸ் பேப்பரை எடைக்கு வாங்கி இந்த மாசம் படிக்கிறார்!''

– சம்பத் குமாரி

''என் மருமக பூரிக்கட்டைக்கு பயந்த காலம் மலையேறிப் போச்சு?''

''அதனால?''

''நாலஞ்சு நாட்டு வெடிகுண்டுகள இப்ப வீட்ல வாங்கி வச்சிருக்கேன்!''

– ஜி. செல்வத்துரை





''மனிதச் சங்கிலி போராட்டம் நடக்கற இடத்துக்கு எப்படிங்க போவணும்!''

''வாட்ச், மோதிரம், வளையல் எல்லாத்தையும் கழட்டி வீட்ல வெச்சிட்டுப் போங்க!''

– ஜூனியர் தேஜ்

''என் கதையை உங்களால ஜீரணிக்க முடியாம இருக்கலாம். அதுக்காக டாக்டருக்குக் கொடுத்த பீஸ் ரூபாய் ஐம்பதை என்கிட்ட கேட்கறது நல்லா இல்ல.''

– பா. ஜெயக்குமார்



# ரிலாக்ஸ்!



''என்னோட ஷர்ட் பாக்கெட்ல 100/- ரூபா பணம் இருக்கு.. ஏதுன்னே தெரியலை சரசு.''

''ஆபீஸ்ல தூங்கும்போது யாராவது சம்திங் வச்சிருப்பாங்களோ!''

– சீர்காழி வி. ரேவதி



''என் மனைவி டீ.வி.யில் நியூஸ் வாசிக்கிறாள்.''

''பரவாயில்லையே, போரடித்தால் நிறுத்தி விடலாமே.''

– எஸ். மோகன்



''நாம வாங்கிக் கொடுத்த ஸ்கூட்டர் மாப்பிள்ளைக்குப் பிடிக்கலை போலிருக்கு...''

''எப்படி சொல்றீங்க?''

''கால் கிலோ பேரிச்சம்பழம் பார்சல் அனுப்பியிருக்கார்!''

– ராஜாஜி



''அந்த பேஷண்ட் இறுக மூடியிருக்கிற தன்னோட கையைத் திறந்தா அவர் உயிருக்கு ஆபத்துன்னு எப்படி டாக்டர் சொல்றீங்க?''

''அவர் உயிரைக் கையில பிடிச்சிக்கிட்டிருக்கார்.''

– திருவாரூர் ஏ. ஆர். முத்தமிழன்



**ரூபாய் மதிப்பு குறைந்து வருவது ஏதோ அரசாங்கத்தின் தலைவலி என்று சராசரி மனிதன் இருந்துவிட முடியாது... நம்மை நேரடியாக பாதிக்கும் இந்த நிலையை மாற்றும் வல்லமை நம் கையில்தான் இருக்கிறது...**

தந்தரம் அடைந்தபோது, புதிய இந்தியாவில் டாலர் மதிப்பு நான்கு ரூபாயாக இருந்தது; ஒரு பிரிட்டிஷ் பவுண்டின் மதிப்பு 13.33 ரூபாய்...! ஐம்பதாண்டு சுயாட்சியில் அடுத்தடுத்து வந்த அரசாங்கங்களின் ஆசியுடன்தான் ரூபாய் மதிப்பு இவ்வளவு தூரம் குறைந்திருக்கிறது. டாலருக்கு 42.50 என்ற நிலையைத் தொட்டிருக்கிறது!

ரூபாய் மதிப்பு குறைய ஒரு காரணம் பண வீக்கம்– அதாவது தேவைக்கு ஏற்ப உற்பத்தி பெருகாத நிலையில் பணப் புழக்கம் மட்டும் அதிகரித்துள்ள நிலைமை!

(அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் கூட பணவீக்கம் உண்டு.. ஆனால் ரொம்பவும் கட்டுப்பட்ட நிலையில் இருக்கிறது.)

தவறான பொருளாதாரக் கொள்கைகளால் போஷிக்கப்பட்டு வளர்ந்த இந்தப் பண வீக்கத்தைக் குறித்து நிபுணர்கள் கவலைக் குரலெழுப்பி எச்சரிக்கை செய்து கொண்டுதான் இருந்தனர். புதிய பொருளாதாரக் கொள்கை அறிமுகமான பிறகு கொஞ்சம் கட்டுப்பாட்டுக்குள் வந்தது பணவீக்கம். ஆனால் நமது அரசியல் ஸ்திரத்தன்மை பாதிக்கப்பட்டபோது மீண்டும் இதில் பின்னடைவு ஏற்பட்டது. இப்போது, அணு குண்டு பரிசோதனை நிகழ்த்தி உலக நாடுகளின் ஒட்டுமொத்த கோபத்துக்கும் பொருளாதார புறக்கணிப்புக்கும் உள்ளாகியிருக்கிற நிலையில் ரூபாய் மதிப்பு சரிந்து கொண்டே வருவதில் ஆச்சர்யமில்லை.

இதனாலெல்லாம் கலவரமுற்ற அயல்நாட்டு முதலீட்டாளர்கள் வேறு நம் நாட்டில் உள்ள தங்கள் முதலீடுகளைத் திரும்பப் பெற ஆரம்பித்திருக்கிறார்கள். உலக நாடுகளிடமிருந்து பெற்று வரும் 8 முதல் 10 பில்லியன் டாலர் கடனுதவி கேள்விக்குறியாக இருக்கிறது.

நம் நாட்டு இறக்குமதியாளர்கள் பயந்துபோய் டாலர்களைச் சந்தையில் வாங்கிப் பதுக்க முயன்று வருகிறார்கள்...

இதன் நிகர விளைவு...? நமது அன்னியச் செலாவணி கையிருப்பு தடாலென்று குறையப் போகிறது!

கச்சா எண்ணெய், உரங்கள் போன்றவற்றை இறக்குமதி செய்துதான் இன்னமும் காலத்தை ஓட்டுகிறோம். இந்த அத்தியாவசிய இறக்குமதிகளுக்குக் கூட கையிருப்பாக அந்நியச் செலாவணி இல்லாமல் அவதியுறும் நிலை இந்தியாவை எதிர்நோக்கியிருக்கிறது.

இதனாலெல்லாம் விலைவாசி இன்னமும் ஏறி நம்மை வாட்டி வதைக்கப்போகிறது என்பதில் சந்தேகமில்லை...

ரூபாய் மதிப்பை ரிசர்வ் வங்கியும் நிதியமைச்சகமும் ஓரளவு நிர்வகித்துக் கட்டுப்படுத்தலாம். உலக நாடுகளும் ஜி-8 அமைப்பும் மனமிரங்கி பொருளாதாரத் தடைகளைத் தளர்த்தலாம் அல்லது நீக்கலாம்... ஆனால் இவற்றால் மட்டும் நிலைமை நேராகிவிடாது.

பணப்புழக்கத்துக்கு ஏற்ப உற்பத்தியைப் பெருக்கியாக வேண்டும். அவ்வாறு பெருக்க வேண்டுமானால் ஒவ்வொரு இந்தியனும் இப்போது உழைப்பதைப் போல் பல மடங்கு கடினமாகவும் உபயோகமான வகையிலும் உழைத்தாக வேண்டும். பண வீக்கத்தின் சுறுசுறுப்பைவிட நமது உழைப்பும் அர்ப்பணிப்பும் அதிகமாயிருந்தாலொழிய அதை வெல்ல முடியாது. ●

— வி. கோபாலன்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
சென்னை- 600 063. தொலைபேசி : 2376129



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 70 பேருக்கு ) | ரூ. | 500/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/ MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

ADCHOICE

வருமான வரி விலக்கு ( Section 80 G ) உண்டு



# ஜோக்குக்கும் பஞ்சமில்லை!

**போயஸ் தோட்டத்தில், தமது கட்சித் தோழர்களுடன் ஆலோசனை நடத்துகிறார் ஜெ.**

**ஜெ:** நாடாளுமன்றத்துல சத்தம் போட்டாச்சு. பி.எம்.மைப் பார்த்து பெட்டிஷன் கொடுத்தாச்சு. ஆனா அவர் அசையறதாத் தெரியலியே?

**நெடுஞ்செழியன்:** அசையலேன்னா என்ன! புன்னகை புரிஞ்சாராமே? போதாதா?

**ஜெ:** என்ன... ஜோக் அடிக்கறீங்களா? யாருக்கு வேணும் புன்னகை? டிஸ்மிஸா இல்லியாங்கறதுக்குப் பதில் சொல்லித் தொலைய மாட்டேங்கறாரே?

**நெடு:** நானா ஜோக் அடிக்கிறேன்...? தோழமைக் கட்சித் தலைவர்கள் போனா பிரதமர் பிரேக்ஃபாஸ்ட் கொடுத்து அனுப்பிச்சிடுறாரு. அவங்களும் இட்லியோட சேர்த்து, நம்ம கோரிக்கையையும் முழுங்கிட்டு வந்துடறாங்க... அதுதான் பெரிய ஜோக்!

**ஜெ:** கருணாநிதிய இன்னமும் இப்பிடியே விட்டு வைக்கிறதிலே அர்த்தமில்லே... நம்ம எம்.பிங்க என்ன பண்றாங்க?

**நெடு:** தெனம் தெனம் வெளிநடப்புச் செய்யறாங்களே? சபாநாயகர் காதைப் பொத்திக்கிற அளவுக்குக் கூச்சல் போட்டுட்டுத்தான் எல்லாருமா வெளிய போறாங்க! ஆனா கலைஞர்தான் அதை ஜோக்குன்னுட்டார்...

**ஜெ:** எது ஜோக்? அவரோட பவளவிழா பெரிய ஜோக்! இன்னும் 75 வயசாகலே. ஆட்சிக் கலைப்புக்கு முன்னாலயே பவளவிழா கொண்டாடணும்னு இந்த வருஷமே கொண்டாடிட்டார்! அதுதான் மெகா ஜோக். சுப்பிரமணிய சுவாமி அவரோட வயசுக்கு ஆதாரம் தேடிட்டிருக்கார். போடுவார் பாருங்க ஒரு போடு!

**வாழப்பாடி (வந்து கொண்டே) :** என்ன போடு போட்டாலும் அசையலேன்னா அடுத்த கட்ட நடவடிக்கை என்ன? அதான் பிரச்னை இப்ப.

**ஜெ:** ஆதரவு வாபஸ்!

**நெடு:** அது இன்னும் பெரிய ஜோக் ஆயிடும். வேணாம் இப்போதைக்கு.

**வாழப்பாடி:** அரசியல்ல

ஒண்ணு-எல்லாமே ஜோக். இல்லே, எதுவுமே ஜோக் இல்லே. தெரிஞ்சுக்கிடுங்க.

நெடு: கலைஞர் அறிக்கை உட்டுக் கேலி பண்ணுவாருங்க, ஜாக்கிரதை!

ஜெ: ஓ, நீங்க அதுக்குப் பயந்துக்கிட்டுத் தான் அடக்கி வாசிக்கிறீங்க போல! அவர் ஒரு ஜோக்குன்னா நான் பத்து ஜோக்கும் பேன்!

நெடு: வேணாங்க, அப்புறம் ஒரே எஸ்.வி. சேகர் டிராமாவா ஆயிடப் போவுது...

வாழப்பாடி: கருணாநிதியக் கவுக்கற துக்கு முன்னால, கவர்னரை மாத்த முடி யுமான்னு நீங்க ட்ரை பண்ணிப் பாருங்க. சட்டம்-ஒழுங்கு சீர் குலையலேன்னு அவங்க சர்ட்டிபிகேட் கொடுத்தப்புறம் வாஜ்பேய் நிச்சயம் தயங்கத்தான் செய்வாரு!

ஜெ: அவங்க கொடுத்த சர்ட்டிபிகேட் ஒரு பெரிய ஜோக்! எந்தக் கட்சியுமே பெரிசா மறியல்-போராட்டம்னு நடத்தாத போதே ஒரே ட்ராஃபிக் ஜாம். உருளைக் கிழங்கு-வெங்காயம்லாம் யானைவிலை குதிரைவிலை விக்குது!

வாழப்பாடி: நீங்க கருணாநிதி அறிக் கைக்கு மறு அறிக்கை உடறேன்னு, ரொம்ப லைட்டா, ஜோக்குக்கு ஜோக்கா பதில் அறிக்கை உடறீங்க. அது போதாது. கடு மையா இருக்கணும்.

நெடு: வெயில் கொடுமையைக்கூடச் சேர்த்துக்கலாம்கறீங்களா?

ஜெ : என்ன! ஜோக் அடிக்கறீங்களா...! தென்மேற்கு பருவ மழை ஆரம்பிச்சு வெயில்லாம் குறைஞ்சுக்கிட்டு வருது... டிஸ்மிஸை வலியுறுத்த வேறெதாவது யோசனை சொல்லுங்க...

வாழப்பாடி : நம்ம வெளிநடப்பை 'ஜோக்'குன்னு சொன்னாரில்ல... அதை வைச்சே அவரை மாட்டுங்க... நகைச்சுவை உணர்வுன்னா என்னன்னு தெரியாத முதல்வரோட கொடுமைல தமிழ்நாடே வாடி வருந்துது... அதனால உடனே இந்த ஆட்சியைக் கலைக்கணும்னு பிரதமருக்கு பதினஞ்சாயிரம் தந்தி குடுங்க...

நெடு : ஆமாம்! தமிழக ஆட்சி சிரிப்பாய் சிரிக்கிறதுன்னு அம்பதாயிரம் பேர்கிட்ட கையெழுத்து வாங்கி அனுப்பலாம்...

ஜெ : இது நல்ல யோசனையாயிருக்கே... உடனே செய்யுங்க. (சிரித்தபடி போகி றார்.)

கற்பனை: **சாருகேசி**

# 58 - லிருந்து 60 - வரை

**மானேஜர் : எதுக்கு லீவு வேணுங் குறீங்க?**

**குமாஸ்தா : எனக்கு நாளைக்கு அறுபதாம் கல்யாணம் சார், அதுக்குத்தான் லீவு.**

**ஒருவர் : கம்பை ஊன்றிக்கிட்டு எங்க கிளம்பிட்டீங்க?**

**மற்றவர் : ஆபீசுக்குத்தான்.**

பியூன் (குமாஸ்தாவைப் பார்த்து) : யோவ் பெருசு, உன்னைய மானேஜர் கூப்புடுறார்.

குமாஸ்தா : ....? ....? ...?



மானேஜர் : இந்த ஆபீஸ்லே, நாம எல் லோரும் ஒற்றுமையா, ஒரு குடும்பம் மாதிரி செயல்படணும், தெரியுதா?

பெண் குமாஸ்தா : சரிங்க தாத்தா.

பியூன் : சார் மணி அடிச்ச சத்தம் கேட்டுதே. கூப்புட்டீங்களா?

மானேஜர் : ஆமா என்னோட பல் செட்டை வீட்ல மறந்து வச்சிட்டு வந்துட்டேன். போய் எடுத்துக்கிட்டு வா.

**மானேஜர் (டைப்பிஸ்ட்டைப் பார்த்து) : என்னையா டைப் அடிச்சிருக்கீங்க, முதியோர் இல்லத்துல இருக்க வேண்டிய ஆளுங்களெல் லாம், ஆபீஸ்ல இருந்து கழுத்தறுக்குறீங்களே.**

— வீ.பா. கிருஷ்ணன்

பனியன் கழிவுத் துணிகளை நூல்களாகப் பிரித்தெடுக்கும் ஒரு கருவியைக் கண்டு பிடித்துள்ளார் ஒருவர். இதன்மூலம் கைகளால் பிரித்தெடுக்கும் பெண்களின் தினசரி வருமானம் இருபது ரூபாயிலிருந்து இருநூறு ரூபாயாக உயரும் என்கிறார் இதன் கண்டுபிடிப் பாளர்...



• கண்டுபிடிப்புடன் ராமசாமி

# வேலை வாய்ப்புக்கு ஒரு கண்டுபிடிப்பு!

திருப்பூர் பக்கம் சென்றீர்களென்றால் ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் பனியன் துணி கழிவுகளை நூல் நூலாகப் பிரிப்பதைக் காணலாம். இப்படிப் பிரிக்கப்படும் நூல் வேஸ்ட்டுகள் பெயிண்ட் அடிக்கும் இடங்கள், ஆட்டோமொபைல் ஒர்க் ஷாப்புகள் போன்ற இடங்களில் பயன்படுத்தப்படுகின்றன. இந்த நூல் வேஸ்டுகள் இல்லையென்றால் அந்த வேலைகளே நடக்காது என்கிற நிலை!

இந்த நூல் வேஸ்டுகளைத் தயாரிக்க, ஒவ்வொரு நூலாக பனியன் கழிவுகளிலிருந்து பிரித்துப் பெண்கள் சிரமப்படுவதைப் பார்த்தார் ஒருவர். அதைப் பற்றியே சிந்தித்து அதைப் பிரிப்பதற்கென ஒரு கருவியையே உருவாக்கிவிட்டார். அவர் பெயர் சி.ராமசாமி. பெருந்துறைப் பக்கம் திம்மநாயக்கன் பாளையத்தைச் சேர்ந்த 42 வயதுக்காரர்.

"படித்தது ஐந்தாம் வகுப்புதான்

என்றாலும் தொழில்நுட்பம் சம்பந்தமாய் நிறைய படிப்பேன். அப்படிப் பழகியதுதான் டீ.வி., டேப் ரெக்கார்டர் ரிப்பேர் வேலையெல்லாம். முன்பெல்லாம் பனியன் கழிவுகளை பலரும் கத்தியைக் கொண்டு பிரிப்பார்கள். அதையே ஒரு மெஷினை உருவாக்கிச் செய்தால் என்ன என்ற யோசனையில் சதா சிந்தித்து உருவாக்கினதுதான் இந்த மெஷின்...!" என்கிறார் ராமசாமி.

சாதாரணமாக, பெண்கள் கையில் பிரித்தால் தினசரி அதிக பட்சமாக ஒரு கிலோ அளவுக்குப் பிரித்தாலே அதிகமாம். ஆனால் இந்த மெஷினோ தினமும் 20-25 கிலோ வேஸ்ட்டுகளை பிரித்து விடும் என உறுதியாய்க் கூறுகிறார் இவர். சுமார் 30-ஆயிரம் ரூபாய் வரை (ஆராய்ச்சிக்கு) செலவு செய்துள்ளதாகக் கூறும் இவர், இதன் காப்புரிமை பெறவே காத்திருப்பதாகச் சொல்கிறார்.

"இதை இப்போதே வெளியில் விற்பனைக்கு விட்டால், இதற்குட கண், காது, மூக்கு என்று வைத்து வேறு யாரேனும் உரிமை கொண்டாடி விடுவார்கள். அதனால் இதை நானே தயாரித்து விற்பனை செய்ய விரும்புகிறேன். அல்லது எனக்கு ஒரு கணிசமான தொகையைச் கொடுத்து தனியாரோ, அரசோ என்னிடமிருந்து பல மெஷின்களைப் பெற்று, வேஸ்டுகள் தயாரிக்கும் தொழிலகம் ஒன்றை அமைத்து இப்பகுதிப் பெண்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுத்தாலும் சந்தோஷப்படுவேன்...!" என்கிறார் ராமசாமி.

அந்த அளவுக்கு பனியன் கழிவுகள் கிடைக்குமா என்றால், "திருப்பூரில் கிடைக்காதா? மலை மலையாகக் கிடைக்கின்றன!" என்கிறார்.

சந்திப்பு, படம்: **ரோகிணி**




# கல்கி— B. M. SILK SAREES




இணைந்து வழங்கும்

## பட்டுப் புடவை பரிசுப் போட்டி - 11

"கம்யூனிசத்துக்கு எதிராகச் செயல்பட்டார் நடுவர்" என்று எந்த நாட்டுப் பத்திரிகைகள் எழுதின?

இந்த இதழைப் படித்துக் கண்டுபிடித்துக் கீழுள்ள ஒரு பாதிக் கூப்பனில் எழுதியனுப்புங்கள். பலர் சரியான விடையெழுதினால் குலுக்கல் முறையில் ஒருவருக்கே பட்டுப் புடவை பரிசு!

மீதிப் பேருக்கு ஏமாற்றம்தானா? இல்லை. கூப் பனிலுள்ள மறுபாதியிலும் இதே விடையை எழுதிப் பத்திரப்படுத்திக் கொள்ளுங்கள். பன்னிரண்டு வாரம் தொடரப் போகும் இப் போட்டியின் முடிவில் பம்பர் பரிசாக கலர் டீவி. ஒன்று காத்திருக்கிறது. வழங்குபவர்:



VASANTH வசந்த் & கோ

- விடைகளைக் கூப்பனில் மட்டுமே எழுதியனுப்ப வேண்டும். ஒரிஜினல் கூப்பன்தான்; ஜெராக்ஸ் பிரதிகள் செல்லாது.
- ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

முடிவு தேதி: 29.6.98

**பட்டுப் புடவை பரிசுப் போட்டி – 11**
**(நீங்கள் பத்திரப்படுத்த வேண்டிய கூப்பன்)**

நாட்டின் பெயர் : ..............................

..............................

என் பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

**பட்டுப் புடவை பரிசுப் போட்டி – 11**
**(எங்களுக்கு அனுப்ப வேண்டிய கூப்பன்)**

நாட்டின் பெயர் : ..............................

..............................

என் பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................




# ருசி ஊறுகாய்கள் வீட்டில் செய்த சுவை போல




**RUCHI AGRO PRODUCTS PRIVATE LIMITED**

50, GIRIAPPA ROAD, CHENNAI - 600 017. PH. 8269290, 8269438, 8241348

---



**ESTD : 1955** ஸ்ரீ **Ph : 706823, 704312**

## 29 முதல் 30 நாட்கள் கொண்ட இமாலய பத்ரிநாத், கேதார்நாத், நேபாள், பசுபதிநாத் யாத்திரை

12.7.98-ஆம் தேதி நித்திரை வசதி கொண்ட 3 டயர் ஸ்லீப்பர் கேரேஜ் புறப்படுகிறது. யாத்திரை மார்க்கம் : சென்னை, ஜெய்ப்பூர், மதுரா, ஆக்ரா, டில்லி, அரித்வார், ரிஷிகேஷ், கேதார் – பத்ரிநாத், அலகாபாத், அயோத்யா, காசி, நேபாள், கயா, கல்கத்தா (குர்தா ரோடு) பூரி, புவனேஷ்வர், கோனாரக், விஜயவாடா வழியாக சென்னை வந்து சேருகிறது. 2-ம் வகுப்பு ரயில் டிக்கெட் முழு பர்த் வசதி, காலை டிபன், காப்பி 2 வேளை போஜனம், ரயில் கேரேஜிலேயே தங்கும் வசதி உள்பட நபருக்கு ரூ. 9975/- பத்ரிநாத், கேதார்நாத், நேபாள் யாத்திரைக்கு பஸ் சார்ஜ் தனியாக ரூ. 3750/- செலுத்த வேண்டும்.

## 19 முதல் 23 – நாட்கள் நேபாள் – பசுபதிநாத் காசி யாத்திரை

25 நாட்கள் கொண்ட 3 TIER SLEEPER கேரேஜ் மூலம் சென்னை சென்ட்ரலில் இருந்து 6.9.98 தேதி ஜம்முதாவி எக்ஸ்பிரஸ் மூலம் புறப்பட்டு ஜெய்ப்பூர் ஆக்ரா – டில்லி அரித்வார் – ரிஷிகேஷ் – அலகாபாத் – அயோத்யா – காசி (நேபாள்) கயா கல்கத்தா – பூரி – விஜயவாடா வழியாக சென்னைக்குத் திரும்பி வந்து சேர்கிறது. கட்டணம் ரூ. 8575+2000 ரூ. 2500/- வீதம் அட்வான்ஸ் செலுத்தி தேவையான பர்த்துகளை முன்கூட்டியே ரிசர்வ் செய்து கொள்ள நேரில் வருவது நலம்.

## 19 நாட்கள் – தீபாவளி கங்கா ஸ்நானமும் தங்க அன்னபூர்ணா தேவி தரிசனமும் கூடிய காசி யாத்திரை ஸ்பெஷல்

சென்னையிலிருந்து 11.10.98ம் தேதி இரவு ஹவுரா மெயில் மூலம் ஒரு 3 டயர் கேரேஜ் புறப்படுகிறது. டிபன் – காப்பி போஜனம் உள்பட நபருக்குக் கட்டணம் ரூ. 7875/-

விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,**

34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2. Ph : 706823

K. E. நம்பிள்ளை. D. சேகர். N.K. சேகர். N. கங்கா. Ph : 704312



• 1989-ல் ஸ்வீடன் அணியுடன் ஏற்பட்ட மோதலில் காயமடைந்த இங்கிலாந்து வீரர் டெரிபுட்சர்....

# யுத்த களமாகும் கால்பந்து மைதானங்கள்!

அரசியலும், அணுகுண்டும் இருக்கட்டும்! இந்தியா பாகிஸ்தான் அணிகளுக்கிடையே கிரிக்கெட் போட்டி நடைபெற்றாலே அதை ஏதோ யுத்தம் போலக் கருதி உணர்ச்சிவசப்படுபடுபவர்கள் ஏராளம். அப்படி இருக்க 32 நாடுகள் கலந்து கொள்ளும் கால்பந்து, உலகக் கோப்பைப் பந்தயங்களில் அரசியல் உணர்வுகள் வெள்ளமாகப் பாயக் கேட்பானேன்?

இங்கிலாந்துக்கும் ஜெர்மனிக்கும் இடையே கால்பந்து போட்டி என்றால் டென்ஷன் கொஞ்ச நஞ்சமில்லை. இரண்டாம் உலகப் போரின் போது உண்டான வெறுப்பு அலைகள் இன்னமும் தொடர்கின்றன. 1966 உலகக் கோப்பையின் இறுதிச் சுற்றில், இந்த இரண்டு அணிகளும் மோதிய போது ஏற்பட்ட பரபரப்பு வெகு அதிகம். தங்கள் நாட்டு விளையாட்டு வீரர்களை ஆதரிக்கும் வகையில் இங்கிலாந்து நாட்டு ராணுவத்தினர், மிலிடரி உடையுடன் பெருமளவில் மைதானத்துக்கு வந்திருந்தார்கள்.

1954 உலகக் கோப்பையில், மேற்கு ஜெர்மனி அணியும், ஹங்கேரி அணியும் மோதியபோது பல அநீதிகள். ஹங்கேரி அணியைச் சேர்ந்த பிரபல கால்பந்து வீரர் புஸ்காஸ்"க்கு பாதி போட்டியில் பலத்த அடி. இருந்தும் அவருக்கு மாற்றாக வேறு எவரையும் அனுமதிக்க மறுத்து விட்டார் ரெஃப்ரி. அப்போது ஹங்கேரி



• அர்ஜென்டைனா - பிரேசில் அணிகளுக்கிடையிலான போட்டியில்...

''உங்கப்பாவை நச்சரிச்சு பீரோ, கட்டில், டி.வி, மிக்ஸி... வாங்கினது தப்பாப் போச்சு!''




''நீங்கள் நலமா? பிரேமா நலமா? கட்டில் நலமா? பீரோ நலமா? டி.வி நலமா? மிக்ஸி நலமா? என்றெல்லாம் லெட்டரில் கேட்டு கழுத்தறுக்கிறாரு!''

— உ. ராஜாஜி

இரண்டு கோல்கள் போட்டிருந்தது; மேற்கு ஜெர்மனியோ மூன்று கோல்கள். ஏதோ வெறி வந்தது போல் ரத்தத்தைத் துடைத்துக் கொண்டு ஆட்டத்தைத் தொடர்ந்த புஸ்காஸ், மின்னலென செயல் பட்டு ஒரு கோலை அடித்தார். ஹங்கேரி ரசிகர்கள் உற்சாகக் கூக்குரலிட, மேற்கு ஜெர்மனி ரசிகர்களிடையே கனத்த மௌனம். இதைத் தொடர்ந்து ஹங்கேரி அணி மேலும் ஒரு கோலைக் குவிக்க, "அது கோல் அல்ல" என்று அழுகுணியாகத் தீர்ப்பளித்தார் நடுவர். இத்தனைக்கும் அவர் ஜெர்மனியைச் சேர்ந்தவரல்ல. ஆனாலும் முதலாளித்துவத்தை ஆதரித்த மற்றொரு ஐரோப்பிய நாடான பிரான்ஸைச் சேர்ந்தவர். "கம்யூனிசத்துக்கு எதிராகச் செயல்பட்டார் நடுவர்" என்று ஹங்கேரி நாட்டுப் பத்திரிகைகள் தலையங்கங்களில் திட்டித் (திட்டித்!) தீர்த்தன.

நைஜீரிய அணி பலமானதாகத்தான் இருந்து வந்தது என்றாலும் இனவெறி நிலவியது என்பதாலேயே அது அவ்வப்போது புறக்கணிக்கப்பட்டு விடும். இதன் காரணமாக சில குறிப்பிட்ட ஐரோப்பிய நாடுகளுக்கும் நைஜீரியாவுக்குமிடையே பந்தயம் என்றாலே வன்முறை தலைவிரித்தாடும். இந்த மாதம் 19ம் தேதி நைஜீரியாவுக்கும் பல்கேரியாவுக்கும் நடைபெறவுள்ள போட்டியில் பாரீஸ் நகரப் போலீஸாருக்கு அதிகப்படி வேலை இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

அர்ஜென்டைனாவுக்கும் இங்கிலாந்துக்குமிடையே போட்டி என்றால் அதில் துவேஷ விதைகள் விதைக்கப்படுவதென்பது பலகாலமாகவே- முக்கியமாக பாக்லாந்து உரிமைப் பிரச்னை எழுந்த நாளிலிருந்தே - தொடர்ந்து வருகிறது. இந்த இரு அணிகளும் 1986ல் மெக்ஸிகோவில் நடைபெற்ற உலகக் கோப்பை கால் இறுதிப் போட்டியில் மோதியபோது நிகழ்ந்த சம்பவத்தை எந்தத் தீவிர கால்பந்து ரசிகராலும் மறக்க முடியாது. 'கோலை'ப் பொறுத்தவரை இரு அணிகளும் சமமாக இருந்த நிலையில் அர்ஜென்டைனாவைச் சேர்ந்த பிரபல வீரரான மாரடோனா கோல் போஸ்டுக்குள் பந்தை உதைத்துத் தள்ள, அர்ஜென்டைனா வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது. ஆனால் அது டெக்னிகலாக 'கோல்' அல்ல. காரணம் அந்தப் பந்து அப்போது ஓரிரு நொடிகளுக்கு அவர் கை மீது பட்டு பிறகு உதைக்கப்பட்டு கோலை நோக்கிச் சென்றது. இதை ரெஃபரி, லைன்ஸ்மென் ஆகிய யாருமே கவனிக்காதது பெரும் ஆச்சரியம். இந்த 'கோல்' கடவுளின் கரத்தால் வீசப்பட்ட கோல் என்று கூறி மகிழ்ந்தார் மாரடோனா.

ஆறு வருடங்களுக்குப் பிறகு யுகோஸ்லேவியா உலக அரங்கில் கால் பந்துப் போட்டியில் கலந்து கொள்ள வந்திருக்கிறது. தலை சிறந்த விளையாட்டு வீரர்களைப் பெற்றிருந்தும் நடுவில் ஏற்பட்ட இந்த இடைவெளிக்குக் காரணம் போஸ்னியாவில் நடைபெற்று வந்த (நடைபெற்று வரும்?) உள்நாட்டு இனப் போர்தான்.

ஆக ஒருபுறம் வேறுபாடுகளைக் களைவதில் விளையாட்டுக்கு முக்கிய பங்கு உண்டு என்பது உறுதிப்பட்டுக் கொண்டு வர, மறுபுறம் இந்த வேறுபாடுகளின் காரணமாகவே விளையாட்டு மைதானங்களும் யுத்த பூமியாக மாறி, பெரும் வன்முறைகளை சந்தித்து வருகிறது. அதற்கு "சிறந்த" எடுத்துக்காட்டுகளில் ஒன்றாக விளங்கி வருகிறது கால்பந்து உலகக் கோப்பை போட்டிகள்.

— ஜி.எஸ்.எஸ்.

# ஆர். சூடாமணி

அன்புள்ள ரம்யா,

உன் கடிதம் கண்டு மிகவும் வருத்தமடைந்தேன். சக்கையாய் புலம்பித் தீர்த்திருக்கிறாய். என் வருத்தம் நீ துக்கப்படுகிறாயே என்பதற்காக இல்லை. இப்படி இருக்கிறாயே என்பதற்காக.

கடைசியில் உன் துக்கம்தான் என்ன? சிறு வயதில் உன் சித்தி உன்னைக் கொடுமைப்படுத்தினாள். உன் அப்பா தனியாய் உன்னிடம் வந்து "எனக்காகப் பொறுத்துக்கோம்மா ரமி! அப்பாவுக்கு உன்கிட்ட கொள்ளை பிரியம். ஆனா சித்தியை நான் கண்டிக்க முடியாது. அப்புறம் வீட்ல பிரளயம்தான் வரும். எனக்காகப் பொறுத்துக்கோ'' என்று சொல்வாரே தவிர உன்னைச் சித்தியின் கொடுமையிலிருந்து காப்பாற்ற எதுவும் செய்யவில்லை. உனக்கு நான்கு வயதாகும்வரை உன் அம்மா உயிரோடு இருந்தாள். "என் பட்டுச் சுட்டி! என் செல்லக் குட்டி!'' என்றெல்லாம் கொஞ்சி உன் உள்ளங்கையில் அவள் முத்தமிடுவது ஏதோ கனவுபோல் உனக்கு லேசாய் நினைவிருக்கிறது. அந்தக் கையில் சித்தி சூடு போட்டாள் என்ற நினைவு தகிக்கிறது. திருமணமாகி இரண்டு ஆண்டுகள் வரை உன்னைச் சீராட்டி செல்லம் கொடுத்து உன் சுருள் முடியைச் சீவிக் கிருஷ்ணன் கொண்டை போட்டு அழகு பார்த்திருந்த அதே சித்தி, தனக்கு ஒரு மகன் பிறந்த பிறகு உன்னை வெறுத்துத் துன்புறுத்தலானாள் என்ற நினைவு அதை விட அதிகமாய்த் தகிக்கிறது.

அப்புறம், உன் கணவன்.

கல்லூரிப் பேச்சுப் போட்டியில் உன் தர்க்கப் புலமையைக் கண்டு பிரமித்து உன்னை மணக்க விரும்பியவர். அவர் பெற்றோர் உன்னைப் பார்க்க வந்தபோது உன் சித்தி பேசியதையெல்லாம் குறிப்பிட்டிருக்கிறாய்.

"ரமியையா பிடிச்சிருக்காம் உங்க பையனுக்கு? நிச்சயமாய் இந்த வீட்டு ரம்யாதானா?''

"ஆமாம்.''

"அவ அவ்வளவு சேப்பு கூட இல்லையே! கிட்டத்திலேர்ந்து பார்த்தாரா?''

"அவ மேடைப் பேச்சில் அறிவு ததும்பித்தாம்.''

"குடித்தனம் பண்ணப் போற பெண்ணுக்கு எதுக்கு அறிவும் பேச்சும்? எதிர்த்து வாயாடவா?''

"ஏன், பார்க்கவும்தானே அழகாயிருக்கா!''

"அது சரி. கழுதை கூட பருவத்தில் அழகாய்த்தானிருக்கும்.''

இது எதுவும் உன் நினைவிலிருந்து இன்றும் அழியவில்லை. இது போல் இன்னும் எத்தனையோ குரூரங்களைச் சித்தியிடம் சந்தித்து நீ உணர்ந்த நோவும் அவமானமும் கோபமும் இன்னும் மறக்கவில்லை.

ஐம்பது வயதாகிறது உனக்கு!

நான்கு மாதங்கள் முன்பு நீ அரை நூற்றாண்டு முடித்தபோது உன் கணவர் உனக்கு

மல்லி மொக்கு டிஸைன் தங்க நெக்லஸ் வாங்கிப் பரிசளித்தார்.

"உனக்கும் நாட்டுக்கும் பிறந்த நாள் பொன்விழா. என் ரம்யாதேவிக்கு அன்பான வாழ்த்துக்கள்!"

அவர் முகத்தில் மலர்ச்சி. பல ஆண்டுகள் முன்பு, முதல் முதலில் உன்னைக் கண்டு விரிந்திருந்த அதே லயிப்பு.

நீ முகம் சுளித்தாய். எனக்கு எழுதியிருக்கிறாய்.

"ஆமாம், தங்க நகை பரிசளித்தால் ஏமாந்துவிடுவேனாக்கும்! பொன்விழா அது இது என்று அலங்காரமாய் பேசிவிட்டால் போதுமா? பேச்சில் இருக்கும் அன்பு மனசில் இருக்க வேணாமா? கண்தான் அலைகிறதே!"

அவர் மனசில் என்ன இருக்கிறதோ என்னமோ, உன் மனசில் ஊட்டி இன்னும் இருக்கிறது.

அப்போது உனக்கு இருபத்தைந்து வயது. நளினி மூன்று வயதுக் குழந்தை. உன் மடியில் நளினி. சுற்றிலும் உதகமண்டலத்தின் குளிர்ச்சி. தொலைவில் வானத்துக்கு அவாவுறும் யூகலிப்டஸ் மரங்கள். பொட்டானிகல் கார்டனில் இருக்கிறாய். பூக்களஞ்சியத்தின் வர்ணக் கோலாகலம். டேலியா, பிட்டுனியா, ஸினாடி போலஸ், சாமந்தி, ரோஜா, லார்க்ஸ்பர்... பெயர்களை அடுக்குவதால் இன்பம் கூடுமா என்ன? இன்பம் ஒரு பரிபூரணம். கூடுவதோ குறைவதோ அதற்கில்லை. மேடுகளின் உச்சியிலுள்ள மரங்களின் இலைப் பின்னல் வெப்பத்தை வடிக்கட்டித் தணித்துத் தரும் மிருதுவான சூரிய ஒளி. சரிவுகளில் சறுக்கி விளையாடும் பட்டுக் குழந்தைகள். வண்ண வண்ண ஸ்வெட்டர்களுள் ரோஜாக் கன்னங்கள் குலுங்க பந்துகளாய் உருண்டுவரும் உற்சாக ஒளிக் குவியல்கள். அவர்களின் கலீர் கலீரென்ற சிரிப்பு.

நீ அழகின் நடுவில் அமர்ந்திருந்தாய். பிக்னிக் கூடையைத் திறந்து ஃப்ளாஸ்கிலிருந்து சூடான, மணமிக்க தேநீரை ஒரு கப்பில் வார்த்து உன்னிடம் புன்னகையோடு நீட்டினார் உன் கணவர்.

"களைப்பாத் தெரியறே ரமி. ஸ்நாக்ஸ் அப்புறம் சாப்பிடலாம். முதல்ல டீயைக் குடி."

நீ கையை நீட்டினாய். உன்னை நோக்கியிருந்த அவர் விழிகள் கணநேரம் அசைந்தன. எங்கே பார்க்கிறார்? நீயும் தலையை லேசாய்த் திருப்ப, கண்ணைக் கட்டி நிறுத்தும் ஒரு வடிவம். பச்சை நிறச் சேலையில் அழகின் பூர்ண அருள் பெற்ற உருவம். கூந்தல் மல்லிகையைவிட வெள்ளையாய்ப் புன்னகை. உடனிருந்தவர்களிடம் ஏதோ சொல்லிச் சிரித்துக் கொண்டிருந்தாள். இந்தத் தொலைவில் பேச்சு

# பல்லால் தேங்காய் உரிக்கிறார்!

**மங்களூரைச் சேர்ந்த அனில் பங்கராவின் மனைவி, ஒருநாள் மட்டைத் தேங்காயை உரிப்பதற்காக அரிவாளைத் தேடியபோது கிடைக்காமற் போகவே, அவளுக்கு உதவ, அனில், தேங்காயை எடுத்து பற்களினாலேயே மட்டையைக் கடித்து உரிக்கத் தொடங்கினார். அன்றிலிருந்து தேங்காயை உரித்துக் கொடுக்கத் தம்முடைய பற்களையே பயன்படுத்தி வருகிறார் அனில்!**

**ஒரு திருமண விழாவின் போது பந்தயம் கட்டிக் கொண்டு 48 நிமிடத்தில் 10 மட்டைத் தேங்காய்களை உரித்துக் காட்டினார். இப்போது லிம்கா மற்றும் கின்னஸ் உலக சாதனைப் பட்டியலில் இடம் பெறும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்.**

**கடந்த பத்தாண்டுகளாக சிரமமான வாழ்க்கையை நடத்தி வந்தாலும் தற்போதைய சாதனை மூலம் போதுமான வருமானம் கிடைத்து வருவதாகச் சொல்கிறார். வருமானத்தை மேலும் பெருக்கிக் கொள்ள ஏதாவது பற்பசை தயாரிப்பு நிறுவனம் அணுகினால் தம்முடைய பற்களின் வலிமையைக் காட்டி விளம்பரப் படங்களில் நடிக்கத் தயாராக இருக்கிறாராம்!**



**– அ. குமார்**

**நன்றி: தி. ஏஷியன் ஏஜ்**



்கேட்கவில்லை. ஆனால் இவள் பேசினால் அந்தப் பேச்சும் அழகாய்த்தானிருக்க வேண் டும் என்று எண்ண வைக்கும் தோற்றம்.

உன் முகத்தில் மலர்ச்சி மறைந்து கருகரு வென்று கோபம் ஏறியது. "எனக்கு டீயும் வேணாம் ஒரு இழவும் வேணாம்." குழந் தையைப் பொத்தென்று தரையில் இறக்கி விட்டு எழுந்து நடந்தாய்.

உன் மனசில் ஊட்டி இன்னும் மறைய வில்லை. அதனால்தான் இப்போது கூட, உன் ஐம்பதாம் பிறந்த நாளுக்கு அவர் பரி சளிக்கும்போது, 'பேச்சில் இருக்கிற அன்பு மனசில் இருக்க வேணாமா?' என்று கேட்கத் தோன்றுகிறது உனக்கு.

எப்படி அழுது தள்ளியிருக்கிறாய் இதை யெல்லாம் நினைவு கூர்ந்து! "சுவரோடா யினும் சொல்லி அழு என்பதற்கிணங்க எழுதுகிறேன்" என்று பழமொழியை வேறு துணைக்கு அழைத்திருக்கிறாய். நான் சுவர் இல்லை ரம்யா. உன்னுள் இருக்கும் கண் ணாடி. உன்னை நீ என்னில் பார்த்துக் கொள்ளலாம்.

இந்த அழுகையெல்லாம் ஒரு பீடிகை தான், உச்ச அழுகைக்கு வருவதற்கு.

சித்தியின் பிள்ளை உனக்குக் கடிதம் எழுதியிருக்கிறான். ஒரு புது மனிதன் போல் தன்னை அறிமுகம் செய்து கொண்டபின்:

"அக்கா! சென்ற காலத்தில் ஏதேதோ நடந்திருக்கலாம். அது ஒன்றையும் மனசில் வைத்துக் கொள்ளாதே. மன்னித்துவிடு. நான் உன் சகோதரன் என்ற உரிமையை என்னிடமிருந்து பறித்து விடாதே. அந்த உரிமையின் பேரில், உன் கருணையை எதிர் நோக்கும் தீனனாக, இந்த வேண்டுகோளை உன்முன் வைக்கிறேன்.

"அம்மாவுக்குத் தீவிர இருதய நோய். சில ஆண்டுகளாகச் சிகிச்சை அளித்து வந்தும் பயனில்லை. வால்வ் கோளாறு. இனி அறுவைச் சிகிச்சை செய்வதுதான் ஒரே நம்பிக்கை என்று டாக்டர்கள் ஒன்றுபோல் சொல்லிவிட்டார்கள்.

"என் பொருளாதார நிலை மோச மென்று சொல்லமாட்டேன். ஆனால் நான் பணக்காரனுமில்லை. பட்டு போர்த்திய வைக்கோல் பொம்மையான மத்திய வர்க்கக் குடும்பஸ்தன். அறுதியிட்ட வருவாயில் செலவு போக சேமிப்பு அதிகமில்லை. நிச் சயமாக, தொடரும் வைத்தியச் செலவு களுக்கு ஈடுகொடுக்கும் செழுமை இல்லை. அதற்காக விதவைத் தாயைக் கைவிட முடியுமா? அங்கே இங்கே கடன் வாங்கி பெரும்பாலும் பணம் புரட்டிவிட்டேன். ஆனால் இன்னும் சுமார் முப்பதாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது. தயவு செய்து தந்து உதவுவாயா? தொழிலதிபரான உன் கணவரின் செல்வச் செழிப்பு பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்தத் தொகை உனக்குப் பெரிசில்லை. கேட்கும் உரிமை





எனக்கு இல்லை என்று நீ கருதலாம். ஆயினும் என் தாயின் உயிரைக் காப்பாற்ற-ஒரு மனித உயிரைக் காப்பாற்ற-இந்த நெருக்கடி சமயத்தில் இவ்வுதவியை நீ செய்வாயா அக்கா?"

'என்ன கொழுப்பு!' என்று நீ வெகுண்டாய். 'அக்காவாவது ஆட்டுக்குட்டியாவது! எத்தனையோ காலமாய்த் தொடர்பு விட்டுப் போன ஒருவன் இப்போது உதவி தேவைப்படுகிறதென்று உறவு கொண்டாடுகிறானா?' என்று பொங்கினாய். 'என் கணவரிடம் பணம் இருப்பது மாற்றாம் மாமியாருக்கு வைத்தியம் பார்க்கவா? என்று நினைத்துப் பொருமினாய்.

உன்னைக் கொடுமை செய்த சித்தி சாகக் கிடக்கிறாள் என்ற எண்ணம் இனிக்கிறது. சாகட்டும் என்று வஞ்சம் தீர்க்கும் எண்ணம் இனிக்கிறது.

பின்னே உனக்கென்ன பிரச்னை? "பணம் தர முடியாது" என்று தம்பிக்கு எழுதிப் போட்டுவிட்டு உன் இனிப்பான எண்ணங்களை ரசித்துக் கொண்டிருக்க வேண்டியதுதானே? மாறாக, வாழ்க்கையில் உனக்குள்ள குறைகளையெல்லாம் பட்டியலிட்டு, போதாதற்கு உன் ரத்தக் கொதிப்பு, சர்க்கரை நோய், மெனோபாஸ் தொல்லை என்று உடல் உபாதைகளையும் சொல்லி ஒரு பாட்டம் அழுது விட்டு, "நான் எத்தனை கஷ்டப்பட்டிருக்கிறேன்! இப்போதும் படுகிறேன்! இந் நிலையில் அந்தப் பயல் வேறு பணம் கேட்டு என்னைத் தொந்தரவு செய்கிறானே! இது எனக்கு இழைக்கப்படும் அநீதியில்லையா?" என்று தன்னிரக்கத்தில் புலம்பி, உன் மனசைக் கொட்டிக் காற்றில் எனக்கொரு கடிதம் எழுதியிருக்கிறாயே, இது ஏன்? உன் எண்ணத்தை நான் ஆமோதிக்க வேண்டும் என்பதற்காகவா? என் ஆமோதிப்பு உனக்கு அத்தனை முக்கியமா?

ஆனால் எனக்குக் குமட்டுகிறது ரம்யா? வருஷக் கணக்காய் வெறும் குப்பையாகவே மனசில் சேர்த்து வைத்திருக்கிறாயே! எப்படி இதனோடு வாழ்கிறாய்? இந்த மக்கள் நாற்றம் அருவருப்பாயில்லையா?

கசப்பும் வெறுப்புமாக எண்ணங்கள். வெறும் குப்பைகள். மனசில் எடுத்து வைத்துக் கொள்ள உனக்குப் பூக்களே கிடைக்கவில்லையா ரம்யா? அதாவது, நல்ல விஷயங்களோ இனிய நினைவுகளோ எதுமில்லையா?

அம்மா முத்தமிட்ட உள்ளங்கையில் சித்தி சூடு போட்டாள் என்று ஏழு வயதில் நடந்ததை ஐம்பது வயதிலும் அக்கறையாய் நினைவு வைத்துக் கொண்டு அழுதிருக்கிறாய். வரிசையைக் கொஞ்சம் மாற்றிப் பாரேன்! சித்தி சூடு போட்ட உள்ளங்கையில்தான் அம்மா முத்தமிட்டிருந்தாள். இப்படி நினைத்து அந்த இனிமையில் ஆழ்ந்து போகலாமே! குப்பையைத் தள்ளு. பூவை எடுத்துக் கொள்.

தனக்கொரு மகன் பிறந்த பின் சித்தி உன்னைக் கொடுமைப்படுத்தலானாள் என்பதை ஏன் நினைக்கிறாய்? தனக்கொரு மகன் பிறக்கும் வரை சித்தி உன்னிடம் பாசத்தைப் பொழிந்தாள் என்பதை நினைத்துக் கொள்ளேன். இன்னொரு பூ.

சித்தி உன்னை வெறுத்தாள் என்பதை விட்டுவிட்டு, அப்பாவின் அன்பு உனக்கு எப்போதும் இருந்தது என்பதை மனசில் பதுக்கிக் கொள். குழந்தையான உன்னிடம் இரவில் வந்து உன்னைக் கையிலேந்திக் கண்ணைத் துடைத்து "உன் கண்ணில் நீர் வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி" என்று நெஞ்சுருகப் பாடிக் கதை சொல்லிப் படுக்க வைத்துத் தட்டித் தூங்கச்

செய்வாரே, அந்த நினைவை உன்னுள் பத்திரப்படுத்திக் கொள். ஆமாம், அப்பா சித்தியின் கொடுமையிலிருந்து உன்னைக் காப்பாற்றவில்லை என்பதை வெகு அக்கறையாய் நினைவு வைத்துக் கொண்டு எழுதியிருக்கிறாயே, அப்பாவைப் பற்றிய இந்த நல்ல நினைவை ஏன் குறிப்பிடவில்லை?

உன் சித்தியின் விஷப் பேச்சால் உன் கல்யாணம் ஒன்றும் நின்று போய்விடவில்லையே! பேச்சுப் போட்டியில் உன் அறிவை வியந்தவர் இன்று வரை உன்னிடம் அன்பு மாறாமல்தான் இருக்கிறார். அவர் கண் அழகிய பெண்ணின் பக்கமாய் அலைந்ததாம். பைத்தியமா உனக்கு? அழகை அதன் எந்த வெளிப்பாட்டிலும் ரசிப்பது மனித இயல்பு. ஊட்டியின் பசுமையான எழில் சூழலில் பச்சை ஆடையுடுத்து நின்றவள் அந்தக் கணம் அவ்விடத்தின் உயிர்நாடியாக, அதன் அழகுக்கெல்லாம் ஒரு முத்தாய்ப்பாக, தோன்றியிருக்கலாம். ஏன் கூடாது? உன்னிடம் அவர் அன்பின் ஆந்தரிகம் என்றாவது மாறியதுண்டா? விகல்பமில்லாத அந்தப் பார்வையால் முகம் களித்த நீ அதற்குப் பதில் அந்த இடத்தின் வண்ண மலர்களும் பட்டுக் குழந்தைகளும் தண்ணென்ற காற்றும் மெத்தென்ற கதிரொளியுமான அழகிய சூழ்நிலையின் இனிமையை மனசில் தேக்கியிருக்கலாமே! உன் மடியில் குழந்தையோடு நீயே அழகின் மடியின் அமர்ந்திருந்த இன்பம் உன் மனசில் புகவில்லை. தேநீர் எடுத்து நீட்டிய அவர் அக்கறை, அந்த இன்பத்தின் ஒரு பாகமாய் உனக்குத் தெரியவில்லை. அவர் கண் அலைந்தது என்று ஒரு கசப்பைத்தான் உள்வாங்கிக் கொண்டாய்.

வேறு நினைவுகளுக்கு எத்தனை சந்தர்ப்பங்கள் இருக்கின்றன! டைஃபாய்ட் ஜுரத்தில் நீ படுத்தபோது இரவு பகல் பாராது அவர் உனக்குப் பணிவிடை செய்ததும், நீ விரும்பிக் கேட்டிருந்த புத்தகத்தைக் கொட்டும் மழையில் ஊரெல்லாம் அலைந்து தேடி எங்கோ நகர்க் கோடியில் ஒரு சிறு சந்துக் கடையில் கண்டு பிடித்து வாங்கி வந்து உன் கையில் வைத்து உன் முகம் மலர்வதைக் கண்டு பூரித்து நின்றதும்... இவை போன்ற எதுவும் உன் நினைவில் தங்கவில்லை. ஊட்டிக் கசப்பு ஒன்றைத்தான் இத்தனை ஆண்டுகளும் நெஞ்சில் காப்பாற்றி வைத்திருக்கிறாய். குப்பை சேர்ப்பதில்தான் உனக்கு எத்தனை ஆசை!

உனக்கென்ன குறைச்சல் ரம்யா? வளமான வாழ்க்கை. அன்பான கணவன். எம்.எஸ்ஸி., எம்.சி.ஏ. முடித்து வெளி நாட்டில் கணிப்பொறி உயர்நிலைக் கல்வி பயிலும் அறிவு மிக்க மகள். எத்தனை பூக்கள் உனக்கு!

"நம்ம கல்யாணத்தைப் பத்தி உங்க அப்பாகிட்டே பேசினியா கலா?"



"ஓ எஸ்! எனக்கு நிச்சயம் கல்யாணம் பண்ணி வைக்கறேன்னாரு. ஆனா உங்களுக்குத்தான் அதிர்ஷ்டமில்லே! 'அவன் யாரு? அவனுக்கு ஏன் நான் கல்யாணம் பண்ணி வைக்கணும்'னு கேட்கறாரு!"

– பா. ஜெயக்குமார்

எனினும் நீ புலம்புகிறாய். இப்போது உன் முக்கியப் புலம்பல், உன்னைக் கொடுமை செய்த சித்தியின் வைத்தியத்துக்காக அவள் பிள்ளை உன்னிடம் பணவுதவி கேட்பது உனக்கு இழைக்கப்படும் அநீதி என்பது. அவன் உயிர் பிழைக்க நீ ஏன் உதவ வேண்டும்? அவள் செத்தால்தான் உனக்கென்ன? சொல்லப் போனால் அது உனக்கு மகிழ்ச்சியல்லவா தரும்?

இருப்பினும், உடனடியாய்த் தம்பிக்கு ஒரு மறுப்புக் கடிதம் எழுதிப் போடாமல் என் ஆமோதிப்புக்காகக் காத்திருந்து காலம் தாழ்த்துகிறாய். அப்படியானால் உன் முடிவைப் பற்றி உனக்கே மனமூலையில்

## இதயப் பூவுக்கோர் நறுமணம்!

ஹார்ட் ஸ்கேன் என்றழைக்கப்படும் இக்கருவி கம்ப்யூட்டர் ஏக்ஸியல் டோமோகிராபி என்ற முறையில் இதயத்துக்கு ரத்தம் பாய்ச்சும் நாளங்களின் அமைப்பு, வேலை செய்யும் விதம், அடைப்பு போன்றவற்றை சுமார் இருபது நிமிடங்களில் போட்டோவுடன் துல்லியமாக அறிவித்து விடுகிறது. அதைப் பார்த்துவிட்டு இதய ஆபரேஷன் செய்ய சர்ஜன்களுக்கு வசதியாக உள்ளது. சாதாரண எக்ஸ்ரே அளவில்தான் கதிர்வீச்சு இருப்பதால் ஆபத்தும் ஒன்றுமில்லை.



– பரிமளவல்லி சீதாராமன்

எங்கோ ஒரு சிறு சந்தேகம் இருக்கிறதென்று அர்த்தமா?

ஆபத்து என்று கேட்கும் போது உதவ மறுத்தால் அது உனக்குள் எங்கேயோ உறுத்தும் போல் தோன்றுகிறது. அதுதானே? அவன் இறந்தால் நீ சந்தோஷப்படுவாய் என்ற நினைப்பை விட அதிக கன மாயிருக்கிறதா இந்த உறுத்தல்?

'இல்லை!' என்று கூவுகிறாய். 'பணம் அனுப்ப முடியாது என்று இப்போதே அவனுக்கு எழுதிவிடுகிறேன்', காகிதமும் பேனாவுமாய் மேஜையடியில் உட்கார்ந்து விட்டாய்.

ஒரு நிமிஷம் பொறு ரம்யா. நான் சொல்லும் மிச்சத்தையும் கேட்டபிறகு எழுது. ப்ளீஸ். எனக்காக.

'சரி, சொல்லு.'

நமக்கு யாரையாவது பிடிக்கவில்லை என்றால் அவர்களோடு வாழ்வது சுலபமான காரியமா?

'இல்லை. ஒரு போதும் இல்லை!'

கடைசி மூச்சுவரை நாம் நம்மோடு தானே வாழ்ந்தாக வேண்டும் ரம்யா?

'ஆமாம்.'

அப்படியானால் நம்மை நமக்குப் பிடிக்க வேண்டியது எவ்வளவு அவசியம்!

'நீ என்ன சொல்ல வருகிறாய்?'

நீ காப்பாற்றியிருக்கக் கூடிய ஒரு மனித உயிர் உன் உதவி கிடைக்காததால் இறந்து போயிற்று என்றால் அதன் பிறகு உன்னை உனக்குப் பிடிக்குமா? உன்னோடு நீ வாழ சகிப்பாயா?

சிறிது நேரம் வரை உன்னிடம் பேச்சில்லை. அசைவில்லை. சுவரை வெறித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாய். பிறகு பேனாவை மெல்ல மூடி வைக்கிறாய். நெற்றியில் கைபதித்து யோசனையில் ஆழ்கிறாய்.

உன்னை வெறுப்பவனுக்கு இந்த உதவியைச் செய்தாயானால் அதில் உனக்கும் பெரிய லாபம் இருக்கிறது ரம்யா. வெறுப்பு, கசப்பு என்றெல்லாம் மனசில் நீ சேர்த்து வைத்திருக்கும் குப்பை கூளங்கள் அனைத்தையும் இந்த ஒரு செயல் ஒரே வீச்சில் பெருக்கித் தள்ளித் துப்புரவாக்கிவிடும். அப்படி சுத்தமாகிய இடத்தில், நீ இதுவரை புறக்கணித்து வந்துள்ள நல்ல நினைவுகளை–அந்தப் பூக்களை– எடுத்து வந்து வைத்துக் கொள்ளலாம். அவற்றை அழகான மாலையாய்த் தொடுக்கலாம். சித்திக்கு உதவி செய்வதன் மூலம் கசப்புத் தளை உடைந்து நீ பெறும் விடுதலையுணர்வு அந்தப் பூமாலையில் ஒரு பாரிஜாத மலர்போல் நடு நாயகமாய் விளங்கும். எனக்கும், குப்பையின் மக்கல் நாற்றம் நீங்கிப் பூமணம் கமழும் உன் மனசில் குடியிருப்பது கொஞ்சம் வசதியாய் இருக்கும்.

மீண்டும் பேனாவை எடுத்துத் திறக்கிறாய். மூக்குக் கண்ணாடியை சரிசெய்து கொள்கிறாய். என்ன எழுதப் போகிறாய்?

உனக்குப் பதில் சொன்னதோடு என் வேலை முடிந்தது. இனி உன் இஷ்டம். வரட்டுமா ரம்யா?

உன் பரிய
ரமா.




ஐம்பதாம் அத்தியாயம்

## பராந்தகர் ஆதுரசாலை




கல்கி கலெக்ஷன்

மறு நாள் காலையில் சூரிய பகவான் உதயமாகி உலகத்தை ஒளிமயமாகச் செய்து கொண்டிருந்தார். சூரியனுடைய செங்கிரணங்கள் பழையாறை அரண்மனைகளின் பொற் கலசங்களின் மீது விழுந்து தக தகா மயமாய்ச் செய்து கொண்டிருந்தன. குந்தவைப் பிராட்டியின் மாளிகை முன்றலில் அம்பாரி வைத்து அலங்கரித்த மாபெரும் யானை ஒன்று வந்து நின்றது. குந்தவையும் வானதியும் மாளிகையின் உள்ளேயிருந்து வெளி வந்து மேடைப் படிகளின் மீது ஏறி யானையின் மேல் ஏறிக் கொண்டார்கள். படை வீடுகளுக்கு நடுவில் இருந்த பராந்தக சோழர் ஆதுர சாலையை நோக்கி யானை பூமி அதிரும் படி நடந்து சென்றது. யானைப் பாகன் அதனருகில் நடந்து, அதன் நடை வேகத்தைக் குறைத்து அழைத்துச் சென்றான். யானையின் மணி ஓசையைக் கேட்டு நகர மாந்தர் தத்தம் வீடுகளுக்குள்ளேயிருந்து விரைந்து வெளி வந்து பார்த்தார்கள். பெண்ணரசிகள் இருவரையும் கண்டதும் அவர்கள் முகமலர்ந்து கைகூப்பி நின்று முகமன் செலுத்தினார்கள்.

மற்ற வீதிகளைக் கடந்து, யானை, படை வீடுகள் இருந்த நகரத்தின் பகுதியை அடைந்தது. அந்த வீதிகளின் தோற்றமே ஒரு தனி மாதிரியாகத்தான் இருந்தது. கொழுத்த சேவற் கோழிகள் ஒன்றையொன்று சண்டைக்காகத் தேடிக் கொண்டு சென்றன. வளைந்து சுருண்ட கொம்புகளையுடைய ஆட்டுக் கடாக்கள் "போருக்கு வருவோர் யாரேனும் உண்டோ?"

அமரர் கல்கி

என்ற பாவனையுடன் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு நின்றன. ரோஸம் மிருந்த வேட்டை நாய்களைத் தோல் வாரினாலும் மணிக் கயிறுகளினாலும் வீட்டு வாசல் தூண்களில் பிணைத்திருந் தார்கள். சின்னஞ் சிறு பிள்ளைகள் கைகளில் மூங்கில் கழி பிடித்து ஒருவரோ டொருவர் சிலம்பம் விளையாடிக் கொண்டிருந்தார்கள். சிலம்பக் கழிகள் மோதிக் கொண்ட போது, 'சட சடா பட படா' என்ற ஓசைகள் எழுந்தன.

வீடுகளின் திண்ணைச் சுவர்களிலே காவிக் கட்டிகளினால் விதவிதமான சித்திரக் காட்சிகள் வரையப்பட்டிருந்தன. பெரும்பாலும் அவை முருகப் பெருமானு டைய லீலைகளையும், சோழ மன்னர் களின் வாழ்க்கை வரலாறுகளையும் சித்திரித்தன. அவற்றில் யுத்தக் காட்சி களே அதிகமாயிருந்தன. முருகப் பெரு மான் சூரபதுமாசுரனுடைய தலைகளை முளைக்க முளைக்க வெட்டித் தள்ளிய காட்சியும், துர்க்கா பரமேசுவரி மகிஷா சுரனை வதம் செய்த காட்சியும் மிகப் பயங்கரமாக எழுதப்பட்டிருந்தன. தெள் ளாறு, தஞ்சை, குடமூக்கு, அரிசிலாறு, திருப்புறம்பயம், வெள்ளூர், தக்கோலம், சேவூர் முதலிய போர்க்களங்களில் சோழ நாட்டு வீரர்கள் நிகழ்த்திய அற்புத பராக் கிரமச் செயல்கள் திண்ணைச் சுவர்களில் தத்ரூபமாகக் காட்சி அளித்தன.

இந்தப் படை வீட்டு வீதிகளில் இள வரசிகள் ஏறியிருந்த யானை வந்த தும் ஒரே அல்லோல கல்லோல மாயிற்று. சேவல்கள் இறகுகளைச் சடசட வென்று அடித்துக் கொண்டு பறந்து, கூரை மீது உட்கார்ந்து கூவின. பிள் ளைகள் ஒருவரையொருவர் கூச்சலிட்டு அழைத்துக் கொண்டு ஓடினார்கள். அவரவர்களின் வீட்டுக் கதவுகளைத் தட்டி உள்ளேயிருந்தவர்களுக்குச் செய்தி அறிவித்தார்கள்.

படை வீட்டு வீதிகள் வழியாக யானை சென்றபோது வீட்டு வாசல்தோறும் பெண்களும் குழந்தைகளும் முதியோர் களும் நின்று "இளைய பிராட்டி குந்தவை தேவி வாழ்க!" "சுந்தர சோழரின் செல்வத் திருமகள் வாழ்க!" என்று வாழ்த்தி மகிழ்ந் தார்கள். அவர்களில் சிலர் யானையைத் தொடர்ந்து செல்லவும் ஆரம்பித்தார்கள். வர வர இக்கூட்டம் அதிகமாகி வந்தது. பலவித வாழ்த்தொலிகள் மூலமாகத் தங்கள் மகிழ்ச்சியை அவர்கள் வெளி யிட்டுக் கொண்டு வந்தார்கள்.

அப்படை வீடுகளில், இலங்கைக்குப் போர் புரியச் சென்றிருந்த வீரர்களின் பெண்டு பிள்ளைகளும் பெற்றோர்களும் அச்சமயம் வசித்து வந்தார்கள் என்பதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். அவர் களுடைய நலத்துக்காக ஒரு மருத்துவச் சாலையைக் குந்தவை தன் சொந்த நில மான்யங்களின் வருமானத்தைக் கொண்டு ஸ்தாபித்திருந்தாள். சோழ குலத்தாரிடம் தம் முன்னோர்களைப் போற்றும் வழக் கம் சிறப்பாக இருந்து வந்தது. குந்தவை யின் மூதாதைகளில் அவளுடைய பாட்ட னாரின் தந்தையான முதற் பராந்தக சக்க ரவர்த்தி மிகப் பிரசித்தி பெற்றவர். அவரு டைய பெயர் விளங்கும்படி குந்தவை தேவி இந்தப் 'பராந்தகர் ஆதுர சாலை'யை ஸ்தாபித்து நடத்தி வந்தாள். அடிக்கடி அந்த வைத்தியசாலைக்கு வரும் வியாஜத்தை வைத்துக் கொண்டு போர் வீரர்களின் குடும்பத்தாருடைய க்ஷேம லாபங்களைப் பற்றி அவள் விசாரிப்பது வழக்கம்.

ஆதுர சாலைக்கு அருகில் வந்து சேர்ந்ததும் யானை நின்றது. முன் னங்கால்களை முதலில் மடித்துப் பிறகு பின்னங் கால்களையும் மடித்து அது தரையில் படுத்துக் கொண்டது. பெண்ணரசிகள் இருவரும் யானை மேலிருந்து பூமியில் இறங்கினார்கள்.

யானை சிறிது நகர்ந்து அப்பால் சென் றதும் ஜனக் கூட்டம்,- முக்கியமாகப் பெண்கள்- குழந்தைகளின் கூட்டம், தேவிமார்களை நெருங்கிச் சூழ்ந்து கொண்டது.

"ஆதுர சாலை உங்களுக்கெல்லாம் உபயோகமாயிருக்கிறதல்லவா? வைத்தியர் கள் தினந்தோறும் வந்து தேவையானவர் களுக்கு மருந்து கொடுத்து வருகிறார்கள் அல்லவா?" என்று இளவரசி கேட்டாள்.

"ஆம், தாயே! ஆம்!" என்று பல குரல் கள் மறுமொழி கூறின.

"மூன்று மாதமாக இருமலினால்

கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன். ஒரு வாரம் வைத்தியரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டதில் குணமாகி விட்டது!" என்றாள் ஒரு பெண்மணி.

"அம்மா! என் மகன் மரத்தின் மேல் ஏறி விழுந்து காலை ஒடித்துக் கொண்டான். வைத்தியர் கட்டுப் போட்டு விட்டுப் பதினைந்து நாள் மருந்து கொடுத்தார். சுகமாகி விட்டது. இப்போது துள்ளி ஓடி விளையாடுகிறான். மறுபடி மரத்தின் மேல் ஏறவும் ஆரம்பித்து விட்டான்!". என்றாள் இன்னொரு ஸ்திரீ.

"என் தாயாருக்குக் கொஞ்ச காலமாகக் கண் மங்கலடைந்து வந்தது. ஒரு மாதம் இந்த ஆதுர சாலைக்கு வந்து மருந்து போட்டுக் கொண்டு வந்தாள். இப்போது கண் அவளுக்கு நன்றாய்த் தெரிகிறது!" என்றாள் இளம் பெண் ஒருத்தி.

"பார்த்தாயா வானதி! நம் தமிழகத்தில் வாழ்ந்த முன்னோர்கள் எப்பேர்ப்பட்டவர்கள்? இன்ன வியாதியை இன்ன மூலிகையினால் தீர்க்கலாம் என்று அவர்கள் எப்படித்தான் கண்டுபிடித்தார்களோ தெரியவில்லை!" என்றாள் குந்தவைப் பிராட்டி.

"ஞானக் கண் கொண்டு பார்த்துத் தான் அவர்கள் இவ்வளவு அதிசயமான மருந்துகளைக் கண்டு பிடித்திருக்க வேண்டும். வேறு எப்படி முடியும்?" என்றாள் வானதி.

"எவ்வளவோ அதிசயமான மருந்துகளை அவர்கள் கண்டு பிடித்திருப்பது உண்மைதான். ஆனால் உன்னைப் போல் மனோவியாதியினால் வருந்துகிறவர்களுக்கு மருந்து ஒன்றும் கண்டுபிடிக்கவில்லையே? என்ன செய்வது?"

"அக்கா! எனக்கு ஒரு மனோ வியாதியும் இல்லை. கருணை கூர்ந்து இவ்விதம் அடிக்கடி சொல்லாதிருங்கள்! என் தோழிகள் ஓயாது என்னைப் பரிகசித்து என் பிராணனை வாங்குகிறார்கள்!"

"நன்றாக வேண்டுமடி உனக்கு! உலகத்தில் ஒரு கவலையும் இல்லாமல் வாழ்ந்து வந்த என் தம்பியின் மனம் பேதலிக்கும் படி செய்து விட்டாய் அல்லவா? ஒவ்வொரு தடவையும் இலங்கையிலிருந்து ஆள் வரும்போதெல்லாம் உன் உடம்பு எப்படியிருக்கிறது என்று கேட்டு அனுப்புகிறானே!" என்றாள் இளைய பிராட்டி.

இதற்குள் "வைத்தியருக்கு வழி விடுங்கள்! வைத்தியருக்கு வழி விடுங்கள்!" என்று கோஷம் கேட்டது. அங்கே சூழ்ந்து நின்றவர்களைக் காவலர்கள் விலக்கினார்கள். ஆதுர சாலையின் வயது முதிர்ந்த தலைமை வைத்தியர் வந்து இளவரசிகளை வரவேற்று உபசரித்தார்.

"வைத்தியரே! கோடிக்கரைப் பக்கத்துக்காடுகளில் சில உயர்ந்த மூலிகைகள் இருக்கின்றனவென்று சொன்னீர் அல்லவா? அங்கே போய் வருவதற்காக ஒரு வாலிப வீரரை அனுப்பினேனே? அவர் வந்தாரா?" என்று குந்தவை கேட்டாள்.

"ஆம், தாயே! அந்தச் சூடிகையான இளம் பிள்ளை வந்தான். ஈசான சிவ பட்டர் அழைத்துக் கொண்டு வந்தார். அவனுடன் என் மகன் ஒருவனை



அனுப்பி வைக்கிறேன். என் மகன் கோடிக்கரையிலிருந்து திரும்பி வந்து விடுவான். தாங்கள் அனுப்பிய வீரன் இலங்கைத் தீவுக்கும்போய் வருவதாகச் சொல்கிறான்..."

''இலங்கையிலிருந்து கூடவா மூலிகை கொண்டு வர வேண்டும்!'' என்று வானதி கேட்டாள்.

"ஆம், தாயே! லக்ஷ்மணருடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக அனுமார் சஞ்சீவி பர்வதம் கொண்டு வந்த போது கோடிக்கரை வழியாகத்தான் கடலைத் தாண்டினாராம். அப்போது சஞ்சீவி மலையிலிருந்து சில மூலிகைகள் கோடிக்கரைக் காட்டில் விழுந்த படியால் தான் அங்கே இன்றைக்கும் நல்ல மூலிகைகள் கிடைக்கின்றன. இலங்கையில் சஞ்சீவி பர்வதமே இருந்தபடியால் அங்கே இன்னும் அபூர்வமான மூலிகைகள் கிடைக்கும் அல்லவா? நான் எதிர்பார்க்கும் மூலிகைகள் மட்டும் கிடைத்து விட்டால், சக்கரவர்த்தியின் நோயை நானே கட்டாயம் குணப்படுத்தி விடுவேன்.

"கடவுள் கிருபையினால் அப்படியே ஆகட்டும். இப்போது அந்த வாலிபர்கள் இருவரும் எங்கே?"

''உள்ளே இருக்கிறார்கள், அம்மா! பிரயாணத்துக்கு ஆயத்தமாகத் தங்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படக் காத்திருக்கிறார்கள்!"

தலைமை மருத்துவர் அழைத்துச் செல்ல இளவரசிகள் இருவரும் ஆதுர சாலைக்குள் சென்றார்கள். அங்கே தாழ்வாரங்களில் மருந்து வாங்கிக்



கொண்டு வந்தவர்களையும் மருந்துக்காகக் காத்திருப்பவர்களையும் பார்த்துக் கொண்டு நடந்தார்கள். அவர்கள் அனைவரும் குந்தவைப் பிராட்டியைப் பார்த்ததும் அகமும் முகமும் மலர்ந்து இவ்வளவு நல்ல மருத்துவ சாலையைத் தங்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்ததற்காக இளவரசியை வாழ்த்தினார்கள்.

தலைமை மருத்துவரின் அறையில் இருவர் காத்திருந்தனர். அவர்களில் நம் வந்தியத் தேவன் புதிய முறையில் உடை அணிந்திருந்



தைப் பார்த்து இளையபிராட்டி புன்னகை பூத்தாள். வானதிக்கும் அவ்வீரனை ஒருவாறு அடையாளம் தெரிந்து விட்டது. குந்தவையின் காதோடு, "அக்கா! குடந்தை ஜோதிடரின் வீட்டில் பார்த்தவர் மாதிரி இருக்கிறதே!"என்றாள்.

"அவர் மாதிரிதான் எனக்கும் தோன்றுகிறது. ஜோதிடரைப் பார்த்த பிறகு வைத்தியரிடம் வந்திருக்கிறார். உன் மாதிரியே இவருக்கும் ஏதாவது சித்தக் கோளாறு போலிருக்கிறது!" என்று சொல்லிவிட்டு, வந்தியத் தேவனைப் பார்த்து, "ஏன் ஐயா! சக்கரவர்த்தியின் உடல் நலத்துக்காக மூலிகை கொண்டு வருவதற்கு இலங்கைக்குப் போக ஒப்புக் கொண்டவர் நீர்தானா?" என்று கேட்டாள்.

வந்தியத்தேவனுடைய கண்களும் கண்ணிமைகளும் வேறு ஏதோ இரகசிய பாஷையில் பேசின. அவன் வாயினால், "ஆம், இளவரசி! நான்தான் இலங்கைக்குப் போகிறேன். ஒருவேளை அங்கு இளவரசரைப் பார்த்தாலும் பார்ப்பேன். அவருக்கு ஏதாவது செய்தி சொல்ல வேண்டுமா?" என்று கேட்டான்.

"பார்த்தால் அவசியம் இந்தச் செய்தியைச் சொல்லுவீர். கொடும்பாளூர் இளவரசி வானதிக்கு உடம்பு சரியாகவே இல்லை. அடிக்கடி நினைவு இழந்து மூர்ச்சை போட்டு விழுகிறாள். இளவரசியைச் சுயப் பிரக்ஞையோடு பார்க்க வேண்டுமானால் உடனே புறப்பட்டு வர வேண்டும் என்பதாகத் தெரிவிக்க வேண்டும்" என்றாள் இளையபிராட்டி.

"அப்படியே தெரிவிக்கிறேன், அம்மணி!" என்று கூறி வந்தியத்தேவன் வானதியை நோக்கினான்.

குந்தவையின் வார்த்தைகளைக் கேட்டதும் உண்டான நாணத்தினால் வானதியின் இனிய முகம் இன்னும் பன் மடங்கு அழகு பெற்றுப் பொலிந்தது. பொங்கி வந்த நாணத்தையும் கூச்சத்தையும் சமாளித்துக் கொண்டு வானதி தட்டுத் தடுமாறி, "ஐயா! அப்படியொன்றும் தாங்கள் சொல்லிவிட வேண்டாம். ரொம்பவும் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். கொடும்பாளூர் வானதி, இளையபிராட்டியின் போஷணையில் தினம் நாலு வேளை உண்டு உடுத்துச் சுகமாக இருப்பதாகத் தெரியப்படுத்துங்கள்" என்றாள்.

"அப்படியே தெரிவித்து விடுகிறேன், அம்மணி!" என்றான் வந்தியத் தேவன்.

"அழகாயிருக்கிறது! நான் கூறியதையும் 'அப்படியே தெரிவிக்கிறேன்' என்றீர். இவள் சொன்னதையும் 'அப்படியே தெரிவிக்கிறேன்' என்று ஒப்புக் கொள்கிறீரே? இரண்டில் ஏதாவது ஒன்றுதானே உண்மையாக இருக்க முடியும்?"

"அதனால் என்ன, அம்மணி! வாதி கூறியதையும் பிரதிவாதி சொன்னதையும் அப்படி அப்படியே நான் சொல்லி விடுகிறேன். எது உண்மை, எது இல்லை என்பதை இளவரசரே நீதிபதியாக இருந்து தீர்மானித்துக் கொள்ளட்டும்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

ஆனால் ஒருவர் சொன்னதை இன்னொருவர் சொன்னதாக மட்டும் மாற்றிச் சொல்லிவிட வேண்டாம்! உமக்குப் புண்ணியம் உண்டு!" என்றாள் வானதி.

குந்தவை இந்தப் பேச்சை அத்துடன் நிறுத்த விரும்பி, "வைத்தியரே! அரண்மனைத் திருமந்திர அதிகாரியிடமிருந்து இவர்களுக்குக் கொடுத்து அனுப்ப ஓலை கிடைத்ததா?" என்று கேட்டாள்.

"கிடைத்தது தாயே! 'சக்கரவர்த்திக்கு வைத்தியம் செய்வதற்காக இவர்கள் மூலிகை கொண்டு வரப்போவதால் வழியிலுள்ள அரசாங்க அதிகாரிகள் எல்லாரும் இவர்கள் கோரும் உதவி செய்ய வேண்டும்' என்று பொதுவாக ஓர் ஓலையும், கோடிக்கரைக் கலங்கரை விளக்கக் காவலருக்குத் தனியாக ஓர் ஓலையும் கிடைத்தன. இவர்களிடம் கொடுத்து விட்டேன்!" என்றார் வைத்தியர்.

"அப்படியானால் ஏன் தாமதம்? உடனே புறப்பட வேண்டியதுதானே?" என்றாள் இளையபிராட்டி குந்தவை.

"ஆம்; புறப்பட வேண்டியதுதான்!" என்றான் வந்தியத் தேவன்.

ஆனால் உடனே புறப்பட்டு விடுங் காரியம் அவ்வளவு சுலபமாக இல்லை.

மருத்துவ சாலையிலிருந்து அவர்கள் வெளியேறி வெளியில் வந்தார்கள். அரச குமாரிகளை ஏற்றிச் செல்ல அம்பாரி யானை காத்திருந்தது. வந்தியத் தேவனையும் அவனுடைய துணைவனை

யும் ஏற்றிக் கொண்டு காற்றாகப் பறந்து செல்வதற்கு அரண்மனைக் குதிரைகள் இரண்டு துடிதுடித்துக் கொண்டு நின்றன.

ஆனால் வந்தியத்தேவனுக்குத் திடீர் திடீர் என்று ஏதாவது சந்தேகம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. குந்தவைக்கும் புதிது புதிதாக எச்சரிக்கை செய்வதற்கு ஏதேனும் விஷயம் தோன்றிக் கொண்டிருந்தது. போகும் வழியில் அவர்களுக்கு ஏற்படக் கூடிய அபாயங்களைப் பற்றிக் குந்தவை முக்கியமாக எச்சரிக்கை செய்தாள்.

அரசகுமாரிகள் அம்பாரி யானை மீது ஏறிக் கொண்டார்கள்.

பிறகு வந்தியத்தேவனும் அவனுடைய துணைவனும் குதிரைகள் மீது ஏறினார்கள்.

யானை புறப்படுகிற வழியாகத் தோன்றவில்லை. நெடுந்தூரம் பிரயாணம் போகிறவர்கள்தான் முதலில் புறப்பட வேண்டும் என்று குந்தவை குறிப்பினால் தெரியப்படுத்தினாள்.

வந்தியத்தேவன் மனமின்றித் தயக்கத்துடன் குதிரையைத் திருப்பினான். இன்னும் ஒருமுறை ஆவல் ததும்பிய கண்களுடன் இளவரசியைத் திரும்பிப் பார்த்தான். பிறகு குதிரையின் பேரில் கோபங்கொண்டவன் போல் சுளீர் என்று ஓர் அடி கொடுத்தான். ரோஷம் மிகுந்த அந்தக் குதிரை நாலு கால் பாய்ச்சலில் பிய்த்துக் கொண்டு பறந்து சென்றது. அவனைத் தொடர்ந்து போவதற்கு வைத்தியரின் புதல்வன் திணற வேண்டியிருந்தது.

யானை திரும்பிச் செல்லத் தொடங்கிய பிறகு குந்தவை சிந்தனையில் ஆழ்ந்தாள். இந்த மனதுதான் என்ன விசித்திரமான இயல்பை உடையது? மன்னாதி மன்னர்களையும் வீராதி வீரர்களையும் நிராகரித்த இந்த மனது வழிப் போக்கனாக வந்த இவ்வாலிபனிடம் ஏன் இவ்வளவு சிரத்தை கொள்கிறது? இவன் ஏற்றுக் கொண்ட காரியத்தை வெற்றியுடன் முடித்துக் கொண்டு பத்திரமாய்த் திரும்ப வேண்டுமே என்று ஏன் இவ்வளவு கவலைப் படுகிறது?...

''அக்கா! என்ன யோசிக்கிறீர்கள்?'' என்ற வானதியின் குரல் குந்தவையை இந்த உலகத்துக்குக் கொண்டு வந்தது.

"ஒன்றுமில்லை வானதி! அந்த வாலிபனுடைய அகம்பாவ சுபாவத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அவனிடம் என் தம்பிக்கு ஏன் செய்தி சொல்லி அனுப்பினோம் என்று இப்போது தோன்றுகிறது..."

''ஆம், அக்கா! அவன் ரொம்பப் பொல்லாதவன்தான்! பெரிய கொள்ளைக்காரன் என்று கூடச் சொல்லத் தோன்றுகிறது..."

"அது என்ன? கொள்ளைக்காரன் என்று எதனால் சொல்கிறாய்?"

''சாதாரண கொள்ளைக்காரர்கள் பொன் வெள்ளி முதலிய பயனற்ற பொருள்களைக் கொள்ளையடிப்பார்கள். இந்த வாலிபன் சோழவள நாட்டின் குல தெய்வத்தையே கொள்ளையடித்துக் கொண்டு போய் விடுவான் என்று எனக்குப் பயமாயிருக்கிறது. தாங்கள் அதற்கு இடங் கொடுக்க மாட்டீர்கள் அல்லவா?" என்று வானதி கூறினாள்.

"அடி கள்ளி! உன்னைப் போல் என்னையும் நினைத்து விட்டாயா? அப்படியெல்லாம் ஒருநாளும் நடவாது!" என்றாள் குந்தவை.

யானை திரும்பிச் சிறிது தூரம் சென்றபோது வீதியில் ஓரிடத்தில் பெண்கள் பலர் கூட்டம் கூடி நிற்பதை அரசிளங்குமரிகள் பார்த்தார்கள். யானையை நிறுத்தச் செய்து விட்டு, "ஏன் கூட்டம் கூடி நிற்கிறீர்கள்? ஏதாவது சொல்ல வேண்டுமா?" என்று இளைய பிராட்டி குந்தவை கேட்டாள்.

அந்தப் பெண்களில் ஒருத்தி முன் வந்து, "தாயே! இலங்கையில் உள்ள எங்கள் புருஷர்களைப் பற்றி ஒரு செய்தியும் இல்லையே! அவர்களுக்கு இங்கிருந்து அரிசி அனுப்பக் கூடாதென்று தஞ்சாவூர்க்காரர்கள் தடுத்து விட்டார்களாமே? வயிற்றுக்குச் சாப்பாடு இல்லாமல் எப்படி அம்மா, அவர்கள் சண்டை போட முடியும்?'' என்று கேட்டாள்.

''அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம். மாமல்லபுரம் துறைமுகத்திலிருந்து அவர்களுக்கு வேண்டிய தானியம் போய்க் கொண்டிருக்கிறது. தஞ்சாவூர்க்காரர்கள் என்ன செய்தாலும், உங்கள் இளவரசர் சும்மா விட்டு விடுவாரா? சோழ நாட்டு மகாவீரர்கள் பட்டினி கிடக்கும்படி பார்த்துக் கொண்

டிருந்து விடுவாரா!" என்றாள் இளைய பிராட்டி.

வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால், குந்தவை அங்கேயே இறங்கி அந்தப் பெண்களுக்கு மேலும் சமாதானம் சொல்லியிருப்பாள். இப்போது அவளுடைய மனம் வேறுவிதமான சஞ்சலத்துக்கு உள்ளாகியிருந்தபடியால் தனிமையை விரும்பினாள். யானை அரண்மனையை நோக்கிச் சென்றது.

## அத்தியாயம் 51

# மாமல்லபுரம்

நேயர்கள் ஏற்கெனவே நன்கு அறிந்துள்ள மாமல்லபுரத்துக்கு இப்போது அவர்களை அழைத்துச் செல்ல விரும்புகிறோம்.



மகேந்திர பல்லவரும் மாமல்ல நரசிம்மரும் இத்துறைமுகப் பட்டினத்தை அற்புதச் சிற்பவேலைகளின் மூலம் ஒரு சொப்பனபுரியாகச் செய்த காலத்திற்குப் பிறகு இப்போது முந்நூறு ஆண்டுகளுக்கு மேலேயே ஆகி விட்டன.

நகரத்தின் தோற்றம் ஓரளவு மங்கியிருக்கிறது. மாறுதல் நம் மனத்துக்கு மகிழ்ச்சி தரவில்லை.

மாடமாளிகைகள் இடிந்து விழுந்து பாழடைந்து கிடக்கின்றன. வீதிகளிலும் துறைமுகத்திலும் முன்போல் அவ்வளவு ஜனக்கூட்டம் இல்லை. வர்த்தகப் பெருக்கமும் அவ்வளவாக

இல்லை. பெரிய பெரிய பண்டக சாலைகள் இல்லை. வீதிகளிலெல்லாம் ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கள் மலை மலையாகக் குவிந்திருக்கவில்லை.

கடல் பூமிக்குள் புகுந்து ஆழம் மிகுந்த கால்வாயாக அமைந்து கப்பல்கள் வந்து பத்திரமாய் நிற்பதற்குரிய இயற்கைத் துறைமுகமாக இருந்ததை முன்னர் பார்த்தோம். இப்போது அந்தக் கால்வாயில் மணல் அடித்து அடித்துத் தூர்ந்து போய்



ஆழம் வெகுவாகக் குறைந்து போயிருக்கிறது. ஆழமற்ற அக்கடற்கழியில் சிறிய படகுகளும் ஓடங்களும்தான் வரக்கூடும். நாவாய்களும் மரக்கலங்களும் சற்றுத் தூரத்தில் கடலிலே தான் நிற்க வேண்டும். படகுகளில் வர்த்தகப் பொருள்களை ஏற்றிச் சென்று அந்த மரக்கலங்களில் சேர்ப்பிக்க வேண்டும்.

மேலே கூறிய இடைக் காலத்தில் மாமல்லபுரம் சில புதிய சிறப்புக்களையும் அடைந்திருந்ததைக் குறிப்பிட வேண்டும். முக்கியமாக கடற்கரையோரத்தில் விளங்கிய அழகிய கற்கோயில் நம் கண்களையும் கருத்தையும் கவர்கின்றது. அது மகேந்திரன் – மாமல்லன் காலத்தில் அமைக்கப்பட்ட குன்றுகளைக் குடைந்தெடுத்த கோவில்களைப் போன்றதல்ல. குன்றுகளிலிருந்து கற்களைப் பெயர்த்துக் கொண்டு வந்து கட்டப்பட்ட கோயில், சமுத்திர ராஜனுடைய தலையில் சூட்டப்பட்ட அழகிய மணிமகுடத்தைப் போல் விளங்குகிறது. அடடா! அந்தக் கோயில் அமைப்பின் அழகை என்னவென்று சொல்வது?

இதைத் தவிர நகரத்தின் நடுவே மூவுலகும் அளந்த பெருமாள் சயனித்திருக்கும் விண்ணகரக் கோயில் ஒன்றும் காட்சி அளிக்கிறது. சைவத்தையும் வைஷ்ணவத்தையும் இரு கண்களைப் போல எண்ணிப் போற்றி வளர்த்த பரமேசுவர பல்லவன் திருப்பணி செய்த விண்ணகரம் அது. திருமங்கையாழ்வார் இந்தக் கோயிலுக்கு வந்து தலசயனப் பெருமாளைத் தரிசித்துப் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் தமிழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார். அவருடைய காலத்திலேகூடப் பல்லவ சாம்ராஜ்யம் பெருகி வளர்ந்த சிறப்புடன் விளங்கியது என்பதையும் மாமல்லபுரம் செல்வம் கொழிக்கும் துறைமுகமாக விளங்கியது என்பதையும் பின்வரும் பாசுரத்தின் மூலம் நன்கு அறியலாம்:-

**"புலன்கொள் நிதிக்குவை யொடு**
**புழைக்கை மா களிற்றினமும்**
**நலங்கொள் நவமணிக் குவையும்**
**சுமந்தெங்கும் நான் றொசிந்து**
**கலங்கள் இயங்கும் மல்லைக்**
**கடல் மல்லைத் தலசயனம்**
**வலங்கொள் மனத்தார வரை**
**வலங்கொள் என் மட நெஞ்சே!"**

திருமங்கையாழ்வாரின் காலத்துக்குப் பிற்பட்ட நூறாண்டுக் காலத்தில் பல்லவ சாம்ராஜ்ய சூரியன் அஸ்தமித்துவிட்டது. 'கல்வியில் இணையில்லாத காஞ்சி' மாநகரின் சிறப்பும் குறைந்து விட்டது. 'கலங்கள் இயங்கும் கடல் மல்லை'யின் வர்த்தக வளமும் குன்றி வந்தது.

ஆனால் தமிழகத்துக்கு அழியாப் புகழ் அளிப்பதற்கென்று அமைந்த அந்த அமர நகரத்தின் அற்புதச் சிற்பக் கலைகளுக்கு மட்டும் எந்தவிதக் குறைவும் நேரவில்லை. பாறைச் சுவர்களில் செதுக்கப்பட்ட சித்திர விசித்திரமான சிற்பங்களும் குன்றுகளைக் குடைந்து எடுத்து அமைத்த விமான ரதங்களும் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் அவற்றை அமைத்த காலத்தில் விளங்கியது போலவே இன்றைக்கும் புத்தம் புதியனவாக விளங்கின. பண்டங்களை ஏற்றுமதி செய்வதற்காக வந்த வர்த்தகர்களின் கூட்டத்தைக் காட்டிலும் சிற்பச் செல்வங்களைக் கண்டு களித்துப் போவதற்காக வந்த ஜனக் கூட்டம் அதிகமாயிருந்தது.

மாமல்லபுரத்து வீதிகளின் வழியாக இரட்டைக் குதிரைகள் பூட்டிய அழகிய விமான ரதம் ஒன்று சென்றது. குதிரைகளின் அலங்காரங்களும், ரதத்தின் வேலைப்பாடுகளும், பொன் தகடு வேய்ந்து மாலை வெயிலில் மற்றொரு சூரியனைப் போல் பிரகாசித்த ரதத்தின் மேல் விதானமும் அதில் இருந்தவர்கள் அரச குலத்தினராயிருக்க வேண்டும் என்பதை உணர்த்தின.

ஆம்; அந்தப் பொன் ரதத்தின் விசாலமான உட்புறத்தில் அரசகுலத்தினர் மூவர் அமர்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவன் தான், வீராதி வீரனும் சுந்தர சோழரின் மூத்த குமாரனுமான ஆதித்த கரிகாலன். மிக இளம்பிராயத்திலேயே இவன் போர்க்களத்துக்குச் சென்று செயற்கரும் வீரச் செயல்கள் புரிந்தான். மதுரை வீர பாண்டியனை இறுதிப் போரில் கொன்று, "வீர'

பாண்டியன் தலை கொண்ட கோப்பர கேசரி" என்று பட்டப் பெயர் பெற்றான். வீரபாண்டியன் வீர சொர்க்கம் அடைந்து பாண்டிய நாடு சோழ சாம்ராஜ்யத்தின் கீழ் வந்த உடனடியாகத்தான் சுந்தரசோழர் நோய் வாய்ப்பட்டார். ஆதித்த கரிகாலனே அடுத்த பட்டத்துக்கு உரியவன் என்பதை ஐயமற நிலை நாட்ட அவனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார். அது முதல் கல்வெட்டுக்களில் தன் பெயரைப் பொறித்துச் சாஸனம் அளிக்கும் உரிமையும் ஆதித்த கரிகாலன் பெற்றான்.

பின்னர், தொண்டைமண்டலத்தை இரட்டை மண்டலத்துக் கன்னர தேவனுடைய ஆதிக்கத்திலிருந்து முழுதும் விடுவிக்கும் பொருட்டு ஆதித்த கரிகாலன் வடநாட்டுக்குப் பிரயாணமானான். அங்கேயும் பல போர்க்களங்களில் செயற்கரும் வீரச் செயல்களைப் புரிந்தான். இரட்டை மண்டலத்துப் படைகளை வட பெண்ணைக்கு வடக்கே துரத்தியடித்தான். மேலும் வடதிசையில் படையெடுத்துச் செல்வதற்குப் படை பலத்தைப் பெருக்கிக் கொள்ளுதல் அவசியமாயிற்று. ஆதலின் காஞ்சியில் வந்து தங்கிப் படை திரட்டவும் மற்றும் படையெடுப்புக்கு அவசியமான ஆயுத தளவாட சாமக்ரியைகளைத் திரட்டவும் தொடங்கினான். இந்த நிலையில் பழுவேட்டரையர்கள் அவனுடைய முயற்சிக்குத் தடங்கல் செய்யத் தொடங்கினார்கள். இலங்கைப் போர் முடிந்த பிறகுதான் வடநாட்டுப் படையெடுப்புத் தொடங்கலாம் என்று சொன்னார்கள். இன்னும் பலவிதமான வதந்திகளும் காற்றிலே மிதந்து வரத் தொடங்கின. இலங்கையில் போர் செய்யச் சென்றுள்ள படைக்குச் சோழ நாட்டிலிருந்து வேண்டிய உணவுப் பொருள் போகவில்லையென்று தெரிந்தது. இதனாலெல்லாம் ஆதித்த கரிகாலனுடைய வீர உள்ளம் துடித்துக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

நமது கதை நடந்த காலத்துக்கு முன்னும் பின்னும் சுமார் முந்நூறு ஆண்டு காலத்தில் தமிழ் அன்னையின் திருவயிற்றில் இதிகாச காவியங்களில் நாம் படிக்கும் மகா வீரர்களையொத்த வீரப் புதல்வர்கள் தோன்றிக் கொண்டிருந்தார்கள். வீமனையும் அர்ச்சுனனையும் பீஷ்மரையும் துரோணரையும் கடோத்கஜனையும் அபிமன்யுவையும் ஒத்த வீரர்கள் தமிழகத்தில் அவதரித்தார்கள். உலகம் வியக்கும்படியான தீரச் செயல்களைப் புரிந்தார்கள். போரில் அடைந்த ஒவ்வொரு வெற்றியும் இவர்களுடைய தோள்களுக்கு மேலும் வலி அளித்தன. வயது முதிர்ந்த கிழவர்கள் மலையைப் பெயர்த்தெடுக்கும் வலிமை பெற்றிருந்தார்கள். பிராயம் ஆகாத இளம் வாலிபர்கள் காற்றில் ஏறிச் சென்று வான முகட்டை அடைந்து விண் மீன்களை உதிர்க்கும் ஆற்றல் பெற்றிருந்தார்கள்.

இப்படிப்பட்ட வீரர்கள் இருவர் அச்சமயம் ஆதித்த கரிகாலன் ஏறிச் சென்ற ரதத்தில் அவனுடன் சம ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார்கள்.

இவர்களில் ஒருவர் திருக்கோவலூர் மலையமான். இவர் ஆண்ட மலையமானாடு வழக்கத்தில் பெயர் சுருங்கி 'மலாடு' என்றும் 'மிலாடு' என்றும் வழங்கியது. ஆகையால் இவருக்கு 'மிலாடுடையார்' என்ற பட்டப் பெயர் ஏற்பட்டிருந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இரண்டாவது பத்தினியாகிய வானமாதேவி இவருடைய செல்வத் திருமகள்தான். எனவே, ஆதித்த கரிகாலனுடைய பாட்டனார் இவர். முதிர்ந்த பிராயத்திலும் நிறைந்த அறிவிலும் இவர் கௌரவர்களின் பாட்டனாரான பீஷ்மரை ஒத்திருந்தார். ஆதித்த கரிகாலன் இவரிடம் பெரும் பக்தி வைத்திருந்த போதிலும் இவருடைய புத்திமதி சில சமயம் அந்த வீர இளவரசனின் பொறுமையைச் சோதித்தது.

ரதத்தில் இருந்தவர்களில் இன்னொருவன் பார்த்திபேந்திரன். இவன் பழைய பல்லவர் குலத்திலிருந்து கிளை வழி ஒன்றில் தோன்றியவன். ஆதித்த கரிகாலனை விட வயதில் சிறிது மூத்தவன். அரசுரிமை அற்றவனாதலால் போர்க்களத்தில் தன் ஆற்றலைக் காட்டி வீரப் புகழை நிலை நாட்ட விரும்பினான். ஆதித்த கரிகாலனைச் சென்றடைந்தான். வீரபாண்டியனோடு நடத்திய போரில்

ஆதித்த கரிகாலனுக்கு வலது கையைப் போல இருந்து உதவி புரிந்தான். இதனால் ஆதித்த கரிகாலனுடைய அந்தரங்க நட்புக்கு உரியவனானான். வீரபாண்டியன் விழுந்த நாளிலிருந்து இருவரும் இணை பிரியாத் தோழர்கள் ஆனார்கள்.

இந்த மூவரும் ரதத்தில் சென்றபோது தஞ்சாவூரிலிருந்து பராபரியாக வந்த செய்திகளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள்.

''இந்தப் பழுவேட்டரையர்களின் அகம்பாவத்தை இனிமேல் என்னால் ஒருகணமும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. நாளுக்கு நாள் அவர்கள் வரம்பு கடந்து போகிறார்கள். நான் அனுப்பிய தூதன் பேரில் 'ஒற்றன்' என்ற குற்றம் சுமத்துவதற்கு இவர்களுக்கு எத்தனை அகந்தை இருக்க வேண்டும்? அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ஆயிரம் பொன் வெகுமதி கொடுப்பதாகப் பறையறைவித்தார்களாமே? இதையெல்லாம் நான் எப்படிப் பொறுக்க முடியும்? என் உறையிலுள்ள வாள் அவமானத்தில் குன்றிப் போயிருக்கிறது. நீங்களோ பொறுமை உபதேசம் செய்கிறீர்கள்!'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''பொறுமை உபதேசம் நான் செய்யவில்லை. ஆனால் இந்த மாதிரி முக்கியமான காரியத்துக்கு வந்தியத்தேவனை அனுப்ப வேண்டாம் என்று மட்டும் அப்போதே சொன்னேன். அந்தப் பதற்றக்காரன் காரியத்தைக் கெடுத்து விடுவான் என்று எனக்குத் தெரியும்! வாளை வீசவும் வேலை எறியவும் மட்டும் தெரிந்திருந்தால் போதுமா? இராஜ காரியமாகத் தூது செல்கிறவனுக்குப் புத்திக் கூர்மை இருக்க வேண்டும்...'' என்று கூறினான் பார்த்திபேந்திரன்.

இளவரசன் கரிகாலன் வந்தியத்தேவனிடம் காட்டிய அபிமானம் பார்த்திபேந்திரனுக்குப் பிடிப்பதில்லை. எப்போதும் அவனைப் பற்றி ஏதாவது குறை சொல்லிக் கொண்டிருப்பான். அவன் செய்யும் எந்தக் காரியத்திலும் குற்றம் கண்டுபிடிப்பான். ஆகையால் இந்தச் சந்தர்ப்பத்திலும் அவ்வாறு குற்றம் சொன்னான்.

''ஆரம்பித்து விட்டாயா, உன் கதையை? வந்தியத்தேவன் பேரில் ஏதாவது சொல்லிக் கொண்டிராவிட்டால் உனக்குப் பொழுது போகாது. அவனுக்குப் புத்திக் கூர்மையில்லா விட்டால் வேறு



யாருக்கு இருக்கிறது? எந்த விதத்திலாவது, எப்படியாவது, சக்கரவர்த்தியிடம் நேரில் ஓலையைக் கொடுத்து விடவேண்டும் என்று நான் இட்ட கட்டளையை அவன் நிறைவேற்றி விட்டான். அதனால் பழு வேட்டரையர்கள் கோபங்கொண்டிருக் கிறார்கள். இதில் வந்தியத்தேவனின் தவறு என்ன?" என்று ஆதித்த கரிகாலன் கேட்டான்.

"தாங்கள் சொல்லி அனுப்பிய காரி யத்தோடு அவன் நின்றிருக்க மாட்டான். வேறு வேண்டாத காரியங்களிலும் தலை யிட்டிருப்பான்!'' என்றான் பார்த்தி பேந்திரன்.

"நீ சற்றுச் சும்மாயிரு! தாத்தா! ஏன் இப்படி மௌனமாயிருக்கிறீர்கள்? தங் களுடைய கருத்து என்ன? ஒரு பெரும் படை திரட்டிக் கொண்டு சென்று தஞ் சாவூரிலிருந்து சக்கரவர்த்தியை மீட்டு காஞ்சிக்கு அழைத்து வந்துவிட்டால் என்ன? எத்தனை நாள் சக்கரவர்த் தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருப்பது போல வைத்திருப்பதை நாம் பார்த்துக் கொண்டிருப்பது? எத் தனை நாள் பழுவேட்டரையர்களுக்குப் பயந்து காலம் கழிப்பது?" என்று பொங் கினான் ஆதித்த கரிகாலன்.

தம் வாழ்நாளில் அறுபத்தாறு போர்க் களங்களைக் கண்டு அனுபவம் பெற்றவ ரான திருக்கோவலூர் மலையமான் - மிலாடுடையார் - மறுமொழி சொல்லு வதற்காகத் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். இதற்குள் எதிரே கடல் அலைகள் தெரியவும் ''முதலில் இந்த ரதத்திலிருந்து இறங்குவோம், தம்பி! வழக்கமான இடத்தில் போய் உட்கார்ந்து பேசுவோம். எனக்கு வயது ஆகி விட்ட தல்லவா? ஓடுகிற ரதத்தில் பேசுவது எளிதாக இல்லை'' என்றார்.

(தொடரும்)



**சங்கீத பிதாமகர் செம்மங்குடி சீனிவாச அய்யர் இவ்வாண்டு 90வது வயதைக் கடக்கிறார். 'கர்நாடகம்' என்ற புனைபெயரில் அமரர் கல்கி செம்மங்குடியைப் பற்றி எழுதிய கட்டுரையின் சில பகுதிகள்:**

# இசைக் கலையின் தவப் புதல்வர்!

ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் அவர்களைத் தலைவராகப் பெற்ற பாரத சுதந்தர சர்க்கார் ஒரு காரியத்தைச் செய்தார்கள், - அதைத் திருச்செந்தூர் முருகன் "சபாஷ்!" என்று ஆமோதித்து அருளினார் என்றால், - அது எவ்வளவு விசேஷ நிகழ்ச்சியாக இருக்க வேண்டும்?

பாரத தேசம் முழுவதும் அந்தச் செயலை ஆமோதித்தது என்று சொன்னால் மட்டும் போதாது; - மண்ணுலகமும் விண்ணுலகமும் ஆமோதித்து மகிழ்ந்தது என்றே சொல்ல வேண்டும்.

இந்த ஆண்டில் நமது இந்தியக் குடியரசு சர்க்கார் கர்நாடக சங்கீதக் கலையைக் கௌரவிப்பதற்காகத் தென்னாட்டுச் சங்கீத வித்வான்கள் இருவரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர் அவர்கள்.

இந்த மகிழ்ச்சிகரமான செய்தி வெளியான சில தினங்களுக்குள்ளே செம்மங்குடி சீனிவாசய்யர் திருச்செந்தூர் முருகப் பெருமானின் சந்நிதானத்தில் சங்கீதக் கச்சேரி நிகழ்த்தினார். முருகப் பெருமானோடு சேர்ந்து ஆயிரக்கணக்கான முருகனடியார்கள் கேட்டு ஆனந்தித்தார்கள். கச்சேரி அமோகமாக அமைந்தது.

முற் பிறப்பில் இறைவனுக்குக் குடங் குடமாகத் தேன் அபிஷேகம் செய்தவர்கள் இப்பிறப்பில் இனிய சாரீர சம்பத்தை அடைகிறார்கள் என்று பெரியோர்கள் சொல்வதுண்டு.

சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர் பூர்வஜன்மத்தில் குடங்குடமாகத் தேனபிஷேகம் செய்திருப்பார் என்று சொல்ல முடியாது.

"இரண்டு இரண்டு குடமாக இரண்டு கையிலும் எடுத்துக் கொண்டுபோய் இறைவனுடைய திருமேனியில் தேனைக் கொட்டி அபிஷேகம் செய்திருப்பார்!" என்று நம்ப வேண்டியிருக்கிறது.

ஏனெனில், இயற்கையிலேயே இரட்டை நாதம் உள்ள சாரீர சம்பத்தையல்லவா செம்மங்குடி சீனிவாசய்யரிடம் நாம் காண்கிறோம்.

நன்றாகச் சுருதி சேர்க்கப்பட்ட தம்புராவில் ஒரு தந்தியைத் தட்டிப் பாருங்கள்; இனிய நாதம் கிளம்புகிறது. அதே தம்புராவில் இரண்டு தந்திகளைச் சேர்ந்தாற்போல் தட்டுங்கள்; அப்போது புறப்படும் இரட்டை நாதம் செவி படைத்தவர்களையெல்லாம் பரவசப் படுத்தும் அல்லவா?

"அத்தகைய இரட்டை நாத சாரீரச் செல்வத்தைச் செம்மங்குடி சீனிவாசய்யருக்குக் கலைவாணி அருளியிருக்கிறாளே! அந்தச் சம்பத்தைப் பெறுவதற்கு இவர் முற்பிறப்பில் என்ன தவம் செய்தாரோ? அல்லது இசைக்கலை தேவிதான் என்ன தவம் செய்து இவரைப் பெற்றாளோ!"

இத்தகைய எண்ணங்கள் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் செம்மங்குடி சீனிவாசய்யரின் சங்கீதக் கச்சேரியை

முதன்முதலாகக் கேட்டபோது என் மனதில் எழுந்தன.

அந்தக் கச்சேரியில் அவர் அன்று ஆலாபனம் செய்த கரகரப்ரியா, ஷண்முகப்ரியா, நாட்டக் குறிஞ்சி ராகங்களும், 'பக்கலநிலபடி,' 'மரிவேர' 'மானஸ ஸஞ்சரரே' கீர்த்தனங்களும் இன்னும் என் ஞாபகத்தில் இருக்கின்றன.

"செவிகளில் ரீங்காரம் செய்து வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றன" என்று கூறுவது இப்பொழுதெல்லாம் விமர்சன பாஷையின் வெறும் சம்பிரதாயமாகி விட்டது. ஆனால்



பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு முற்றும் உண்மையான அநுபவமாயிருந்தது.

அதற்குப் பிறகு செம்மங்குடியின் பூர்வமான இரட்டைநாதக் குரலுக்கு ஏதேனும் அபாயம் நேரக்கூடுமோ என்ற கவலையைச் சங்கீத ரஸிகர்கள் பலமுறை அநுபவிக்க நேர்ந்தது. ஆனால் ரஸிகர்களைக் காட்டிலும் கலைத்தேவியே அதிக கவலை கொண்டு அவருடைய இனிய சாரீர சம்பத்தை நமக்குக் காப்பாற்றிக் கொடுத்திருக்கிறாள். இது கர்நாடக சங்கீதமும் சங்கீத ரஸிகர்களும் செய்த பாக்கியமாகும்.

செம்மங்குடி சீனிவாசய்யர் கச்சேரி செய்யத் தொடங்கி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. இந்தக் காலத்திலும் அவர் எவ்வளவோ மேன்மைகளை அடைந்து விட்டார். திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் ஆனார்; சங்கீத வித்வத் சபைக்குத் தலைமை வகித்துச் சங்கீத கலாநிதி ஆனார்; சுவாதித் திருநாள் சங்கீத கலாசாலையின் தலைமைப் பேராசிரியர் பதவியைத் திறமையாக வகித்துப் பெயரும் புகழும் பெற்றார்.

இவ்வளவு மேன்மைகளுக்கும் சிகரம் வைத்தது போன்ற மேன்மையை இப்போது இந்தியாவின் சுதந்தர அரசாங்கத்தார் செம்மங்குடி சீனிவாசய்யருக்கு அளித்திருக்கிறார்கள்.

நாளது மார்ச்சு மாதம் 15-ந் தேதி ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத்தின் முன்னிலையில் செம்மங்குடி கச்சேரி செய்து, முப்பத்தைந்து கோடி இந்திய மக்களின் சார்பில் கௌரவிக்கப்படப் போகிறார். அவர் கச்சேரி செய்யத் தொடங்கி இருபத்தைந்து வருஷம் பூர்த்தியானதற்காக நடத்த வேண்டிய வெள்ளி விழாக் கொண்டாட்டம் அகில இந்தியக் கொண்டாட்டமாகவே நடைபெறப் போகிறது.

இத்தகைய அருமையான சந்தர்ப்பத்தில் "கல்கி" நேயர்களின் சார்பில் நமது மனமார்ந்த வாழ்த்துக்களைச் செம்மங்குடி சீனிவாசய்யருக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சங்கீதக் கலையை நாதோபாஸனையாகக் கொண்டு வழிபடும் கலைஞர்களில் செம்மங்குடி சீனிவாசய்யரும் ஒருவர். சோழ நாட்டில்

அமரர் கல்கி

பல நூறு ஆண்டுகளாகவும் பரம்பரையாகவும் வளர்ந்து வந்த கர்நாடக சங்கீதத்துக்கு இன்று செம்மங்குடி சீனிவாசய்யர் தலைசிறந்த வாரிசு உரிமை பெற்று விளங்குகிறார். பழைமையிலிருந்து மாறுபடாத புதிய சங்கீத பாணியைத் தமக்கென்று வகுத்துக் கொண்டார். அவருடைய சங்கீதத்தில் முக்கியமான அம்சம் ராக ஆலாபன முறையாகும். முன்னோர்கள் பழைமையாகக் கையாண்டு போஷித்த கன ராகங்களைச் செம்மங்குடி சீனிவாசய்யர் ஆலாபனம் செய்யத் தொடங்கி விட்டாரானால், ஆயிரம் பதினாயிரம் ஜனங்களுக்கு மத்தியில் இருந்தபோதிலும், தாமும் நாதமும் தம்புராவுமாகத் தனித்த ஏகாந்த நிலைக்குப் போய் விடுகிறார். வானத்தில் பறந்து வட்டமிடுகிறார்; வையத்தில் இறங்கியும் சஞ்சரிக்கிறார். கைதேர்ந்த ஆகாச விமானி மேக மண்டலங்களுக்கு மேலே சென்றாலும் கீழே குதித்து இறங்கி வந்தாலும் குறிப்பிட்ட திசையிலே சென்று கொண்டிருப்பது போல், செம்மங்குடி சீனிவாசய்யரும் ராக ஆலாபனங்களில் எப்படி எப்படியெல்லாம் மனோதர்மத்துக்கு இடங் கொடுத்துச் சஞ்சாரம் செய்தாலும் முன்னோர் வகுத்த பாட்டையிலிருந்து எள்ளளவும் அப்பால் இப்பால் செல்வதில்லை.

காயக சிகாமணி ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களுக்கு உதவியாயிருந்தும் பின்னர் தாமாகவும் சுவாதித் திருநாள் கீர்த்தனங்கள் பலவற்றைப் பிரபலப்படுத்திச் செம்மங்குடி சங்கீதத்துக்குச் செய்திருக்கும் தொண்டு அனைவரும் அறிந்தது.

சங்கீத வட்டாரங்களில் சௌலப்ய குணத்துக்கும் சிநேக தர்மத்துக்கும் பெயர் போனவர் செம்மங்குடி சீனிவாசய்யர். சந்தர்ப்பம் நேரும்போதெல்லாம் தமது குருவாகிய மகாராஜபுரம் விசுவநாதய்யரைப் பாராட்டிப் பேசாமலிருப்பதில்லை. அரியக்குடி ராமானுஜ அய்யங்காரிடம் விசேஷ பக்தி கொண்டவர். முசிரி அண்ணாவிடம் சகோதர வாத்ஸல்யம் கொண்டவர்.

ஆரம்ப நாட்களில் கும்பகோணம் ஸ்ரீராஜமாணிக்கம் பிள்ளை தமக்குப் பக்க வாத்தியம் வாசிக்க முன் வந்ததினால் தாம் அடைந்த நன்மையை அடிக்கடி நன்றியுடன் சொல்லிக் கொள்வார். சங்கீத உலகத்தைச் சேர்ந்த எவருக்கும் தம்மால் இயன்ற உதவியைச் செய்ய அவர் தவறுவதில்லை.

சுதந்தர பாரத சர்க்கார் இரண்டாவது ஆண்டிலேயே செம்மங்குடியைக் கௌரவிக்கத் தீர்மானித்ததில் ஒரு விசேஷப் பொருத்தம் இருக்கிறது. இந்தியா தேசம் சுதந்தரம் அடையும் முயற்சியில் செம்மங்குடியும் அவருடைய சகோதரர்களும் ஈடுபட்டவர்கள். மகாத்மாவினிடம் பரம பக்தி கொண்டவர்கள். கதர் இயக்கம் ஆரம்பமான நாள் முதல், தாங்களே கையினால் நூற்ற நூலைக் கொண்டு நெய்த கதாரடை தரித்து வருகிறார்கள்.

ஸாஹித்யங்களின் பொருளில் விசேஷ கவனம் செலுத்தாத நாட்களிலே கூடச் செம்மங்குடி சீனிவாசய்யர்,

**"என்று தணியுமிந்தச் சுதந்தர**
**தாகம்?**
**என்று மடியும் எங்கள் அடிமையின்**
**மோகம்!"**

என்ற பாரதியார் பாடலை மனமுருகிப் பாடிக் கேட்பவர்களின் மனத்தையும் உருக்கி விடுவார். அப்படிப் பாடிய காலத்திலே, பாரத நாடு சுதந்தரம் அடைந்ததும் ஏற்படும் அரசாங்கத்தார் தம்முடைய சங்கீதத்துக்குக் கௌரவம் அளித்துச் சன்மானம் செய்யப் போகிறார்கள் என்று அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார். பலனை எதிர்பாராது செய்த நல்ல காரியங்கள்தான் என்றைக்கும் நிரந்தரமான பலனை அளிக்கும் என்பது நாம் கண்கூடாகக் காணும் உண்மை அன்றோ! ●

**(கல்கி, மார்ச் 15, 1953)**

# இந்த வார இளைஞர் :

**டி. குருபிரசாத் – பேட்மிண்டன் விளையாட்டில் புதிய நட்சத்திரம். பிரகாஷ் படுகோனுக்குப் பிறகு இந்தியாவின் பெயரை உலக அளவில் நிறுத்துவார் என பத்திரிகையாளர்களால் அடையாளம் காட்டப்படுபவர். இவரை அண்மையில் பெங்களூரில் சந்தித்தோம்.**



# பூப்பந்துக்கு ஒரு புதிய நம்பிக்கை!

“நான் எனது பத்தாவது வயதிலிருந்து பேட்மிண்டன் விளையாட ஆரம்பித்தேன். பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட மாநில அளவிலான போட்டியில் கலந்து கொண்டு இரு முறை சாம்பியன் ஆனேன். ஆனால் அதன் பிறகு எனது முட்டியில் அடிபட்டதால் ஒரு வருடம் விளையாடவே இல்லை. மறுபடியும் நான் விளையாட முடியுமா என்று என் வாழ்க்கையே கேள்விக்குறியாக இருந்த நிலையில் பத்திரிகை நண்பர்களும், பெற்றோர்களும் கொடுத்த ஆர்வத்திலேயே பயிற்சியை மேற்கொண்டு, பதினாறு வயதுக்கு உட்பட்ட சாம்பியன்ஷிப் போட்டியில் நான் அடைந்த வெற்றியே என் வாழ்க்கையின் திருப்புமுனையாக அமைந்தது.

"பின்பு 1996-ல் நடைபெற்ற பத்தொன்பது வயதுக்கு உட்பட்ட – மாநில அளவில் நடைபெற்ற போட்டியில் கலந்து கொண்டு மூன்றாவது இடத்தை அடைந்தேன். ஆனால் அதே சமயம் நடைபெற்ற அரவிந்தபட் என்ற மற்றொரு இளைஞருடன் ஜோடியாக இணைந்து இரட்டையர் பட்டத்தை அடைந்தேன்."

**"அதன் பிறகுதான் தேசிய அளவில் பெயர் பெற்றீர்களா?"**

"ஆமாம். 97ல் நடைபெற்ற தேசிய போட்டியில் கர்நாடகத்தின் சார்பில் ஒற்றையர் ஆட்டத்திலும், இரட்டையர் ஆட்டத்திலும் கலந்து கொண்டேன். ஒற்றையர் ஆட்டத்தில் நான் சரியாக ஆடவில்லை. ஆனால் இரட்டையர் ஆட்டத்தில் அரவிந்த பட்டுடன் இணைந்து தேசிய அளவில் சாம்பியன் ஆனேன். அதன் பிறகு எங்கள் ஜோடி அனைத்துப் போட்டிகளிலும் வெற்றி பெற்றது. மலேசியாவில் நடைபெற்ற போட்டியில் இறுதி ஆட்டத்தில் தோற்றுப் போனேன். என் விளையாட்டில் சில அடிப்படைத் தவறுகள் இருப்பதை அப்போதுதான் உணர்ந்தேன். பிரகாஷ் படுகோனால் என் பயிற்சியில் முழு கவனம் செலுத்த முடியாத அளவுக்கு அவர் மிகவும் பிஸியாக இருந்ததாலும் எனக்கும் ஸ்டீல் அதாரிடி ஆப் இந்தியாவில் வேலை கிடைத்தபடியாலும் நான் கங்குலி பிரசாத் என்ற கோச்சிடம் பயிற்சி பெற ஆரம்பித்தேன். இந்திய விளையாட்டு மையமும் என்னை தத்து எடுத்துக் கொண்டது. கடந்த எட்டு மாதமாகக் கற்றுக் கொண்ட பயிற்சியின் காரணமாக எனது விளையாட்டில் நல்ல முன்னேற்றம் தெரிகிறது. இந்த பயிற்சி காரணமாகவே இந்த வருடம் பிப்ரவரி மாதம் நடைபெற்ற போட்டியில் (ஐதராபாத்தில் நடந்தது) ஜூனியர் தேசிய சாம்பியன் ஆக வெற்றி பெற்றேன். சீனியர் அளவில் மூன்றாவது இடத்தை அடைய முடிந்தது. இரட்டையர் ஆட்டத்தில் ஜூனியர், சீனியர் என்ற இரு நிலைகளிலும் சாம்பியன் ஆனேன்.

"இனி இந்தியா சார்பில் எல்லா மேட்சுகளிலும் கலந்து கொள்ள இந்திய பேட்மிண்டன் சங்கம் எனக்கு அனுமதி அளித்து உள்ளது. சர்வதேச அரங்கிலும் இந்தியாவின் புகழை நிலை நாட்ட வேண்டும் என்பதே என் லட்சியம்!" என்கிறார் இந்த பத்தொன்பது வயது கர்நாடக இளைஞரான குருபிரசாத்.

சந்திப்பு: **நந்தினி**

## பூ... கம்பம்தானா?

சென்ற வாரத்தில் ஒரு நாள், மாலை ஏழு மணி அளவில் தடா லென்று ஓர் அதிர்வு, கதவுகள் ஜன்னல்களெல்லாம் தடதடக்க, பாத்திரங்கள் டண் டணாலென்று உருள, ஷோகேஸ் பொம்மைகள் நர்த்தனமாட, காலுக்கடியில் தரை நழுவ... நிமிட நேரத்துக்கு ஒரே ஆரவாரம்! "பாகிஸ்தான்காரன் பாம் போட்டு விட்டான்" என்று ஆளாளுக்கு குண்டைத் தூக்கிப் போட்டார்கள். எதிர்ப்பட்டவர்களெல்லாம் "மும்பை தான் அவர்களின் முதல் இலக்கு" என்றார்கள். போர் துவங்கிய விட்டதாகப் பலர் பேச ஆரம்பித்து விட்டார்கள். கடைசியில் பார்த்தால் ...ப்பூ...பூகம்பமாம்! நிலநடுக்கம் அளக்கும் கருவியில் 3.6 காட்டிய மிதவாத பூகம்பமாம்! தாணாவில் மையமிட்டிருந்ததால் மும்பையில் நன்றாக உணர முடிந்ததாம். இன்னும் நிறைய பூகம்பங்கள் ஏற்பட வாய்ப்பிருக்கிறதாம்...(சுவையான வதந்திகளுக்குமா?)

## உப்புக் காரமான சண்டை!

அயோடின் சத்து பற்றாக்குறையால் ஏற்படும் நோய்களைத் தடுக்கு முகமாக, அயோடினற்ற உப்பை அரசு தடை செய்தாலும் செய்தது, குய்யோ முறையோ என்று அடித்துக் கொள்ளத் துவங்கி விட்டார்கள். "இரண்டு ரூபாய்க்கு விற்கும் சாதாரண உப்பெங்கே? எட்டு ரூபாயில் எட்டாத உயரத்திலிருக்கும் அயோடைஸ்ட் ஸால்ட் எங்கே? மல்டி நேஷனல்களுக்கு மண்டியிடும் வேலைதானிது! இவர்களும் அயோடைஸ்ட் ஸால்ட் விற்பதாக ஊரை ஏமாற்றுகிறார்கள் - உப்பை 'பாக்' செய்யும்போதே முக்கால்வாசி அயோடினும், சமைக்கும் போது முழுவதுமே போய்விடுகிறது'' என்று சர்ச்கேட் எதிரே கூக்குரலெழுப்பி, சாதா உப்பை விற்று, வாதாடிப் பார்த்தார்கள்.

ஆனால் ஸால்ட் டிபார்ட்மெண்ட் என்ன சொல்கிறது? "டாடா, கார்டன் குக் ரகங்கள்தான் எட்டு ரூபாய்! சின்ன உற்பத்தியாளர்களின் அயோடைஸ்ட் கெடாமல், 18 மாதங்களுக்கு நீடிக்கக் கூடியது. 'பாக்'கிங், சமையல் வாதமெல்லாம் கட்டுக்கதை! அயோடைஸேஷன் ப்ளாண்டை நிறுவ இவர்களுக்கு சோம்பேறித்தனம், அயோடின் சத்து குறைவால் குழந்தைகளின் IQ, சுறுசுறுப்பு இவை கூட குறைந்து விடும்...'' என்று உப்புக் காரமாக பதிலடி கொடுக்கிறது!

## பட்ஜெட் பல்டி

யஷ்வந்த் சிங், பெட்ரோல் விலை நான்கு ரூபாய் கூடியிருப்பதாக அறிவித்த மாத்திரத்திலேயே, மும்பையில் டாக்ஸி, ஆட்டோக்கள் பயணிகளைச் சூறையாடின. பல பெட்ரோல் பங்குகள் படு சிரத்தையாக விலையை ஏற்றின. விதியை நொந்து கொண்டு டாங்கியை நிரப்பியவர்கள், மறுநாளே, 'விலை ஏற்றம் ஒரு ரூபாய் தான்' என்ற செய்தி கேட்டு, விழுந்தடித்துக் கொண்டு அதே பெட்ரோல் 'பங்க்'குகளுக்குச் சென்று, முந்தைய நாள் ரசீதைக் காட்டி கூடுதல் பணத்தைத் திரும்பக் கேட்டார்கள். அவர்களா ஏமாறுவார்கள்? "கூடுதல் விலையில் தானே எங்களுக்கு கம்பெனி சப்ளை செய்திருக்கிறது? இந்த விலைச் சரிவால் எங்களுக்கு ஏற்பட இருக்கும் நஷ்டத்தை யார் ஈடு செய்வதாம்?'' என்கிறார்கள்! டாக்ஸி ஆட்டோக்களுக்கு அழுத

# போரா? பூகம்பமா?

— தவித்துப்

தண்டத்தை யாரிடம் வசூலிப்பது என்பதும் புரியவில்லை! அமைச்சர் அடித்த வரலாறு காணாத 'பல்டி'க்கு, மண்டையை உடைத்துக் கொண்டவர்கள் பாவம்... பொது மக்கள்.

## ராஜாவின் பார்வை

ரயில்வே ஸ்டேஷனை விட்டு வெளியே வரும்போது, எந்தக் காய்கறியை நகக்கப் போகிறோமோ, எந்தப் பழத்தை ஜூஸாக்கப் போகிறோமோ என்ற கிலியுடனேயே ஒவ்வொரு அடியையும் எடுத்து வைக்கும் மும்பைக்காரர்களுக்கு ஒரு விடியல்! மேயர்-இன்-கவுன்சில் வந்த பிறகு BMC அறிவித்திருக்கும் முதல் உருப்படியான திட்டம்- இனி மும்பையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன்களைச் சுற்றி 250 மீட்டர் தூரத்திற்கு நடைபாதைக் கடைகளே இருக்காதாம்! இந்தத் தடையை எதிர்த்துப் பாதையோர


* குழப்பிய நிதியமைச்சர்

## போன மும்பைவாசிகள்

கடைக்காரர்களெல்லாம் பேரணி நடத்தப் போவதாக அறிவித்துள்ளார்கள். இந்த பயமுறுத்தல்களுக்கு மிரளாமல், முதல் கட்ட நடவடிக்கையாய், ஒன்பது ரயில்வே ஸ்டேஷன்களைத் தேர்ந்தெடுத்து, ரயில்வே போலீஸ் உதவியுடன், கடும் நடவடிக்கை எடுக்கப் போகிறார்களாம். வரவேற்கத்தக்கதுதான். ஆனால் இந்த ஒன்பதில், நடைபாதைக் கடைகளின் சாம்ராஜ்யமான 'தாதர்' இல்லையே! ஒரு வேளை இது முதல்வரின் ராஜ்யமென்பதாலிருக்குமோ?

## அன்பே வா!

வெட்டுக் குத்து, பழி கொலை என்று கறுவிக் கொண்டிருந்த ஸ்வாபிமான் (சுயமரியாதை) காரெக்டர்களெல்லாம் திடீரென்று பாச வெள்ளத்தில் மிதந்து, நேச மழை பொழிந்து, அன்பே வா பாடிக் கொண்டிருப்பதன் மர்மமென்ன? அதன் பிராந்திய ஒலிபரப்பை நிறுத்தி விட்டார்களாம்; அதனால் ஸ்பான்ஸர்ஷிப் சரிந்து, ஸீரியலை மடமடவென்று முடிக்க வேண்டிய நிர்ப்பந்தம்! இதே நிலையில் இன்னும் சில பல தொடர்கள். ஹூம்! இதை முன்னமேயே செய்திருந்தால், எத்தனை கள்ளக் காதல்கள், கன்னியர் கருவுறுதல், பேரன் பேத்தி எடுத்தவர்கள் மறுமணம் செய்து கொள்ளுதல் போன்ற கண்றாவிகளைத் தவிர்த்திருக்கலாம்...?

## காசியா? கைலாசமா?

கல்யாண் டோம்பிவிலி கார்ப்பொரேஷன்காரர்கள், மழைவிடுமுன் விழுந்து விடக் கூடிய அபாயகரமான நிலையிலிருக்கும் 319 பில்டிங்குகளை இடிக்கப் போகிறார்களாம்-நல்ல காரியம்தான்! ஆனால் இதனால் வீடிழக்கப் போகும் கிட்டத்தட்ட 15,000 பேரை என்ன செய்யப்போகிறார்களாம்- 150 பேருக்கு மட்டுமே இடம் தரக்கூடிய 'ட்ரான்ஸிட் காம்ப்'களை வைத்துக் கொண்டு? இருக்குமிடங்களில், அதிக பட்சம் நூறு ரூபாய் வாடகையிலிருப்பவர்கள், புதிய இடங்களைத் தேடினால், குறைந்த பட்சம் ஆயிரம் ரூபாய் (டெபாஸிட் 20,000 தனிக் கணக்கு) கொடுக்க வேண்டி வருமே? கூரை சரிந்து பரலோகம் போவதா, கூரை இல்லாமல் பரதேசிக் கோலம் பூணுவதா என்று தெரியாமல் தத்தளிக்கிறார்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்



# செவ்வந்தி

**பாரதிபாலன்**

நீங்களா என்று அவள் கண்கள் அகல விரிந்தன. முகத்தில் பயமும் பூரிப்பும் சேர்ந்தே நெளிந்தன. செவ்வந்தியின் இடுப்பில் இருந்த குடம் இறங்கிற்று! சக்திவேல் அவளை நெருங்கினான். அவள் முகத்தில் வெட்கம். கண்ணிலும் முகத்திலும் பொங்குகின்ற பரவசம். அவனைப் பார்க்கும்போதே அருகில் நெருங்கும்போதே ஏதோ ஓர் ஆவல் அவளை அள்ளிக் கொள்கிறது. அதில் அலுங்காமல் இருக்க முடியவில்லை. முகமே காட்டிக் கொடுத்து விடுகிறது. உன்னைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும் என்ற திருப்தி மிதக்கின்ற பார்வையும், அந்தப் பார்வையில் படிந்துள்ள பதுங்கலும் காட்டிக் கொடுத்து விடும். அவன் அவளுக்குக் கண்களால் ஜாடை காட்டி உட்காரச் சொன்னான். அவள் உதடு லேசாய்ச் சுழியிட்டது!

"என்ன பேசுறே? உனக்கு மட்டும் கேக்குற மாதிரி அது என்ன பேச்சு?"

''ஒண்ணுமில்லையே...?'' என்று குழறினாள்.

"சரி. உட்கார்."

அவள் தயங்கினாள்.

"சும்மா உட்கார்."

அவள் தயங்கித் தயங்கி படித்துறையில் உட்கார்ந்தாள்.

"சரியாக, சௌகரியமாக உட்கார்."

கற்பனையும் ஓர் அனுபவம்தான். கால் பாவாத அனுபவம். பறக்கின்ற அனுபவம். தன்னை ஏதோ ஒன்றோடு சம்பந்தப்படுத்திக்கொண்டு அதிலே கரைகின்ற அனுபவம். அப்படிக் கரைந்து கொண்டிருந்தபோது இருந்த படபடப்பு இப்போது இல்லை. தரையில் கால் வைப்பதும் ஓர் அனுபவம்தான். செவ்வந்தியின் அருகாமை கனவாக இல்லாது இருப்பது அவனுக்குப் புது அனுபவம். இதுதான் எத்தனை அனுபவங்களைத் தருகிறது. அவன் செவ்வந்தியைக் கூர்ந்து பார்த்தான். அவள் கண்களுக்குள் புதைந்திருந்த அவன் மனம் விழித்துக் கொண்டது. முகத்தில் வெட்கச் சிவப்பு கூடிற்று. கன்னத்தை விரலால் வருடிக் கொண்டே இருந்தாள்.

"ஏதாவது பேசேன்?"– என்றான்.

"நான் என்ன பேசட்டும்?"

"பேச ஒண்ணுமே இல்லையா?"

''அதெல்லாம் இல்லை.''

"பின்னே?"

"என்னவோ போல இருக்கு!"

"பயமா?"

''சந்தோஷமாக இருந்தாலும் பேச முடியாது.''

தண்ணீர் தாவித் தாவி படித்துறையில் தடுக்கி விழுந்து கொண்டிருந்தது. வாய்க்கால் ஓரங்களில் வாத்து தத்தித் தத்தி ஊர்ந்தது. செவ்வந்தியின் தலை லேசாய் அசைந்தது. எதையோ ரசிக்கிறாள். கண்களை மூடி மூடித் திறந்தாள். பார்வையும் வாத்து



"செவ்வந்தி!"

'ம்' என்று அவள் காதில் விழாதது மாதிரி முனகினாள்.

''பார்த்துக் கொண்டே இருந்தால் போதுமா?''

"பிறகு?"

"உன்னிடம் ஒன்று கேட்க வேண்டும். கேட்டால் தருவியா?"

அவள் அவனைப் பார்த்தாள்.

''பரவாயில்லை. இன்னொரு சமயம் நானே கேட்டு வாங்கிக்கிறேன்."

"நான் என்ன தரணும்?"

"உன் இஷ்டம்."

அவள் பேசாமல் உட்கார்ந்து இருந்தாள். அவனும் பேசாமல் உட்கார்ந்து இருந்தான். அவள் அவனைப் பார்த்தாள். அது ஏதோ சொன்னது. ரகசியக் குரல். நான் உன்னுடையவள். ''நீங்கள் என்னை எப்போது ஏற்றுக் கொள்ளப் போகிறீர்கள்?''

11

தாவுகிற திசையில் தாவிற்று. கபடமில்லாத கண்கள்.

''தினம் தினம் ஏமாற்றத்தை விழுங்கிக்கிட்டு எத்தனை நாளைக்கு? அதான் உருட்டித் திரட்டி ஒருநாள் விஷத்தை விழுங்கலாம்னு குறிச்சு வச்சிருந்தேன்."

"பைத்தியமா?"

"அப்படித்தானே இருந்தேன்."

''நான் உங்களைப் பார்த்திருக்கவே கூடாது."

"ஏன்?"

"கடிபட்டது என் மனசுதானே?"

"புரியுது நீ சொல்றது."

"நான் உங்களைக் குறை சொல்லலை."

"குறை சொன்னா என்ன? சொல்லேன்."

"குறை சொல்லவா, மூச்சு முட்டச் சுமந்துக்கிட்டிருந்தேன்."

படம்: **யோகா**

**"திலோத்தமைக்கு என்ன வருத்தம், இந்திரா?"**



**"அவளுடைய பெயரில் மட்டும் சினிமா நடிகை இல்லையேங்கற வருத்தம்தான் நாரதரே!"**

**— ஞா. ஞானமுத்து**

அவள் பார்வை கெஞ்சியது. அவனுக்கு அவளை அப்படியே அள்ளிக் கொள்ள வேண்டும் போல் ஒரு பரபரப்பு. என்றுமில்லாத பரபரப்பு. இன்று அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அடிக்கடி அவள் கண்கள் மூடி மூடித் திறந்தது. அவள் விரல்கள். பாதம். தெளிந்த உடல். செவ்வந்தி இத்தனை அழகா? அவள் பேச்சில்தான் எத்தனை பொருள். இதெல்லாம் எங்கு படித்தான்?

முத்துப்பிள்ளையின் கண்கள் விருட்டென்று மேலே எழுந்து ஒருகணம் உருண்டது. அப்படி ஓர் வியப்பு! அந்த வியப்பு அவரை விட்டு விலகுவதாய் இல்லை. நேற்று வெயில் தாழ்ந்தவுடன் வேலுப்பிள்ளை வீட்டிற்கு வந்தார். அவர் வருகின்றபோதே அவர் நடையில் ஓர் தளர்வு. எதையோ சுமக்க முடியாமல் சுமந்து வருபவரைப் போலத்தான் வந்தார். எங்கும் சுற்றாமல் நேராகவே விஷயத்தைத் தொட்டார். சக்திவேலின் காதலைச் சொன்னார். செவ்வந்தியின் தவிப்பைச் சொன்னார். இதைச் சொல்லும்போது அவரின் கண்ணீர்தான் சாட்சியாய் நின்றது. பதினைந்து நிமிடம்தான் பேசினார். முத்துப்பிள்ளைக்குத் தன் நாக்கைத் தானே கடித்துக் கொண்டாற் போல் ஒரு சுளீர்! அதன் பின் அவர் நாக்கு வளையவே இல்லை. கடிபட்டு விட்ட கலக்கம். அதன் பின் அவர் கண்ணும் மனசும் எங்கோ தாவிற்று!

வேலுப்பிள்ளை ஏதேதோ பேசினார். மனசில் குமுறல் ஒலி உயர்ந்தது. இருப்பினும் அவர் முகத்தை முறிக்கவில்லை. அதற்கு அவர் சின்ன இடைவெளி கூடத் தரவில்லை. வேலுப்பிள்ளையின் வார்த்தை ஒரு இடத்தில்கூட ஓங்கவில்லை. குனிந்து காலைப் பிடிப்பது போலவே விழுந்தது. அதில்தான் விழுந்து விட்டார் முத்துப்பிள்ளை. அவர் கிளம்பி வெகு நேரத்திற்குப் பின்புதான் அவர் மனம் எழுந்தது. கோபமும் பொருமலும் உள்ளுக்குள் புகைந்தது.

"என்ன இப்படிப் பண்ணிட்டார் முத்துப்பிள்ளை?" என்று அவர் முன் வந்து முகத்தைத் துடைத்துக் கொண்டே நின்றாள் அவர் மனைவி.

"தண்ணீர்னு நினைச்சுத்தேன் கால் வச்சது. இப்படிச் சேறா மிதக்கும்னு யார் கண்டா?"

"நிஜந்தேன் சொல்றாரா?"

"யார் கண்டா?"

"அந்தத் தம்பியைப் பார்த்தா அப்படித் தெரியலையே!"

"இதெல்லாம் பார்த்துத் தெரியுற விசயமா?"

"செவ்வந்தி பண்டாரம்தானே?"

"ம்."

"அவருக்கு என்ன கண் அவிஞ்சு போயிட்டதா?"

"நமக்குத்தான் கண் அவிஞ்சுட்டது."

"நீங்க நல்லா விசாரிக்கலையா?"

"நிறமெல்லாம் நிஜமுன்னு நினைச்சுட்டா நம்ம தப்புதானே?"

"சரி இந்த மட்டுலெ முன்னாடியே தெரிஞ்சுன்னு சமாதானம் ஆக வேண்டியதுதான்."

"ஊர் சமாதானம் ஆயிடுமா?"

"அசிங்கம்தேன்."

"வேலுப்பிள்ளை வந்து ஒரு சொட்டுக் கண்ணீர்லே எல்லாம் கழுவிவிட்டுட்டுக் கிளம்பிட்டார். நான் ஆயிசுக்கும் கண்ணீர் விட்டாலும் இதைக் கழுவ முடியுமா?"

"ப்ச! மனசை விட வேண்டாம்."

முத்துப்பிள்ளை மனசை விடவில்லை. ஆனால் அவர் மனசு அவரை விடுவதாக இல்லை. குளித்து உடை மாற்றினார். மாலைக் குளியல் அவர் வழக்கம். மஞ்சள் ஜிப்பாவும் பச்சைக் கரை வேஷ்டியுமாய் அவர் தந்தையார் போட்டோ முன் வந்து

நின்றார். கண்மூடி, கைமலர்த்தி எதையோ கேட்டார். சிறிது நேரம் அந்தக் கண்மூடல் நீடித்தது. பின் இமைகளைப் பிரித்தார். வீடு முழுக்க ஒரு பார்வை. படியிறங்கி விட்டார். அவர் இரண்டு நாளாய் வெளியில் எங்கும் போகவில்லை. ஹோட்டல் கல்லாவில் குரச் செட்டியார்தான் இருக்கிறார்.

இன்றுதான் வெளியில் வருகிறார். சற்று இறுக்கமாகத்தான் இருந்தது. நடையில் தளர்வு. வயிற்றில் பயம் நெளிகிறது. இது பயமா? பயமில்லை. மனக்குரல். மனம் சாட்சி சொல்ல கூண்டுக்குள் நின்று குடைகின்றது. சட்டென்று பயம் 'கவலையாக மாறியது. இது சரியா? சரியா தவறா என்று பார்க்கின்ற நேரமில்லை இது என்று ஒரு மனம் மிரட்டியது. மனசை சாமாதானம் செய்ய வேண்டும், இல்லாவிட்டால் மனசை விட்டு இறங்காது. கைக்குழந்தையாய் அழும். அதற்கு ஏதாவது காவு கொடுத்துத்தான் அதன் கண்ணைக் கட்டிப் போட வேண்டும்!"

மாலை மயங்கி இருள் இறங்கியது. முத்துப்பிள்ளை ஊர்க் கோடியில் இருக்கும் காலனிக்குள் சென்றார். நாலு தெருவைத் தாண்டி மெயின் ரோட்டைத் தொடும்வரை அவருக்குப் பிரச்னை இல்லை. காலனிக்குள் இரண்டு தெருவைத் தாண்டி காயாம்பு வீட்டிற்குள் செல்வதற்குள்தான் நடுங்கி விட்டார். நடுங்கினாலும் அவர் சாமர்த்தியம் தான். கண் இடறாமல் கை நலுங்காமல் ஊசிக்குள் நூலைச் சொருகிற சாமர்த்தியம் ஒருவருக்கும் தெரியாமல் காயாம்பு வீட்டைத் தொட்டார்.

"சாமி வாங்க. ஆள் அனுப்பினா வர மாட்டனா?"

"பின்ன நானெல்லாம் உன் வீட்டிற்கு எப்ப வர்றதாம்?"

"வரணும்... வரணும்" என்று வீட்டிற்குள் ஓடினான் காயாம்பு. அந்த வேகத்தில் நிலையில் மோதிக் கொண்டான். உள்ளே கிடந்த கயிற்றுக்கட்டிலை அலாக்காகத் தூக்கிக் கொண்டு வந்து வாசலில் போட்டான்.

"உக்கார முடியாது காயாம்பு!"

"கலர் வாங்கியாரட்டுமா சாமி."

"வேண்டாம். நம்ம கடையிலெ உன் கணக்கு எவ்வளவு?"

"நாற்பது ரூபா சாமி!"

"நாற்பதுதானா?"

"சாமி, இந்தப் பம்பல்லெ நேர் பண்ணிடுறேன்."

"நேர் பண்ண வேண்டாம். இந்தா" என்று ஒரு நூறு ரூபாயை நீட்டினார்.

அந்தப் புதிர் அவனுக்குப் புரியவில்லை. சாமி... சாமி என்று அவன் உடல் உதறியதே தவிர அவன் புத்தியை எதுவும் தொடவில்லை. இங்கும் அங்குமாய் பார்வை ஓடியது.

"ம். பிடி" - என்றார் முத்துப்பிள்ளை.

"சாமீ..."

"வாங்கிக்க காயாம்பு. பயப்பட வேண்டாம்."

"வீட்டுல என் மனைவியும் அம்மாவும் ரொம்ப சண்டை போட்டுக்கறாங்கன்னு தலைவர்கிட்ட சொன்னது தப்பாப் போச்சு..."




"'என் தொண்டர் வீட்டில் நடக்கும் மாமியார் மருமகள் சண்டைக்கு ஆளும் கட்சியின் தூண்டுதலே காரணம்'னு அறிக்கை விட்டிருக்காரு!"

— தே. கண்ணன்

"புரியலீங்களே சாமி."

"எனக்கு ஒரு காரியம் பண்ணணும். பண்ணுவியா?"

"உத்தரவு போடுங்க சாமி."

"நம்ம ஹோட்டலுக்குப் போ. நான் சொன்னேன்னு சாப்பிடு. மசால் தோசை சாப்பிட்டிருக்கியா?"

"தெரியாது, சாமி!"

"சாப்பிடு. தோசைக்குள்ளே ஒரு சமாச்சாரம் வச்சுப் போடுவான். அந்த ருசி உன் நாக்கை இதுவரை தொட்டிருக்காது! சாப்பிட்டு நேரா கரட்டுக்குப் போ. ஓடை வழியாப் போ. தோட்டத்துப் பக்கம் போக வேண்டாம். போனா மல்லன் கரடு வரும். அதை ஒட்டி கிழக்குப் பக்கம். ஒரு



''... சரிய்யா. கம்ப்ளைண்டை வாங்கிக்கிறேன்... ஆனா பிக்பாக்கட்காரன், இவ்வளவு தூரம் 'கட்' பண்றவரைக்கும் நீ என்னய்யா பண்ணிட்டு இருந்தே?''

— கிறிஸ்டி

வாய்க்கால் மாதிரி போகும் தெரியுமா?"

"தெரியும் சாமி."

"அங்குன, கிரைக்கட்டு மாதிரி பெரிசா ஒரு கட்டுக் கட்டித் தருவான் மல்லன். அதைச் சுமந்து கொண்டாந்து, நம்ம வேலுப்பிள்ளை வயல் புதருக்குள்ளே போட்டுட்டுப் போயிடு."

"அங்குன ஏதுங்க சாமீ கரை?"

"அது வேற. உடைச்சுச் சொல்றேன். உன் வாய் ஒழுகிடப்படாது."

"மாட்டேன்."

"கஞ்சா!"

"சாமீ, எதுக்கு சாமீ அதை வேலுப்பிள்ளை வயல்லே போடணும்?"

"விடிஞ்சுட்டா எல்லாம் வெளிச்சத்துக்கு வரத்தானே போவுது. போ. சொன்னபடி நடக்கணும். ராவோடு ராவா நடக்கணும். விடிஞ்சதும் எங்கனா ஓடிப்போயிடு. மற்றதை நான் பார்த்துக்கறேன்."

அவன் 'சரி' என்று தலையாட்டினான்.

முத்துப்பிள்ளைக்கு போலீஸ் ஸ்டேஷனில் நிறைய நண்பர்கள் உண்டு. சப்-இன்ஸ்பெக்டர், ரைட்டர், ஏட்டு எல்லோருமே பழக்கம். ஒரு சிகரெட் அட்டைக் காகிதத்தில் எழுதிக் கொடுத்து விட்டாலே காரியம் நடந்து விடும். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. ஒரு போன் போட்டுப் பேசினார். போனை கீழே வைத்ததும் உடல் வேர்த்தது. ஜிப்பா நனைந்த உடலோடு ஒட்டிக் கொண்டது. அவர் மனம் சிலுப்பிக் கொண்டு ஓடியது. அதைத் துரத்திக் கொண்டே சமாதானத்திற்கு இன்னொரு மனம்!

போலீஸ் வந்து விட்டது. நான்கைந்து போலீஸ். வேலிக்கதவை உதறி இழுத்து விட்டு உள்ளே நுழைந்தது. அப்பா பிரமித்துப் போய் பார்த்தார். இது, இதுநாள் வரை கண்டறியாத அதிசயம். அந்தப் பிரமிப்பு உள்ளுக்குள் பயத்தைக் கொடுத்தது." அப்பாவால் பொறுக்க முடியவில்லை. பயத்தில் சற்று ஒதுங்கி நின்று கொண்டு "யார் வேணும்?'' என்று அலறல் குரலில் கேட்டார்.

"வேலுப்பிள்ளை யாரு?"

"என்ன? நான்தான்!"

''ஸ்டேஷன்வரை வந்திட்டுப் போகணும்."

"ஏன்! ஏன்?" என்று பதறினார்.

"வடக்கு மடைப்பக்கம் உள்ளது, உங்கள் வயல்தானே?"

"ஆமா."

"ஒட்டி இருக்கிற தாழம்புதர்."

"நம்மதுதான்."

"அங்க ஒரு கட்டு கஞ்சா செடி இருந்தது."

"கஞ்சாவா?"

''ஆமாம். நீங்க அதை கேரளாவுக்குக் கடத்துறதா ஒரு புகார்."

"யார் சொன்னா?" அப்பாவின் குரல் பீதியில் குலைந்து விட்டது.

"ஸ்டேஷனுக்கு வாங்க பேசலாம்."

அப்பா முகம் விழுந்து விட்டது. அம்மா அலறி விட்டாள். சக்தி வீட்டில் இல்லை. அம்மா இறைக்க இறைக்க தெருவிற்கு ஓடினாள். யாரையோ தேடுகின்ற பார்வை. ஆனாலும் போலீஸ் விடவில்லை.

"இது என்ன அநியாயம்!"

"அமைதியா இருங்கம்மா."

அம்மா கூச்சல் போட்டு ஏதோ சொன்னாள்.

"கூச்சல் போட்டுச் சொன்னா அது சரியாகிடுமா?"

"சரஸ்வதி நீ வீட்டுக்குள்ள போ" என்று அப்பா அம்மாவை ஒரு அதட்டுப் போட்டார். அம்மா படபடப்புடன் செவ்வந்தியின் வீட்டிற்குள் ஓடினாள். அதன்பின் அப்பா ஒரு வார்த்தைகூடப் பேசவே இல்லை. அத்தனை இரைச்சலையும் மோதலையும் பார்த்துக் கொண்டேதான் இருந்தார். ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அமைதியாக நடந்தார். போலீஸ் முன்னே நடந்தது.

(தொடரும்)

# தமிழ் பேசும் ஆங்கிலப் படங்கள்!

ஸ்ரீ பிரகலாத சரித்திரத்திலிருந்து ஸ்ட்ரீட் பைட்டர் வரை பல தெலுங்கு டப்பிங் படங்களை தமிழக மக்கள் கண்டுகளித்ததுண்டு. தலையில் பாகையும், வரிந்து கட்டிய கொகவ வேட்டியுமாக தெலுங்கு மணம் கமழத் தோற்றமளிக்கும் நாயகன், ''இந்த திருநெல்வேலிக்காரனையா ஏமாத்த நினைக்கிறே?'' என்று உறுமுவான். (தெலுங்கில் அது ''தெலுங்கானாவாடு''வாக இருந்திருக்கும்.)

ஆனால் ஆங்கிலப் படத்தில் வரும் அமெரிக்க மகா ஜனங்கள் தமிழில் பேசிய அதிசயம் முதலில் ''ஜுராசிக் பார்க்''இல்தான் அரங்கேறியது.

டைனோசரைத் தொடர்ந்து தமிழில் பேசியது(!) மலைப் பாம்பு. ''அனகோண்டா'' திரைப்படத்தைக் குறிப்பிடுகிறோம். இந்தப் பட்டியல் இதோடு முடிவதாக இல்லை. பாரமவுண்ட், ட்வென்டியத் செஞ்சுரி பாக்ஸ், கொலம்பியா என்று பல பிரபல ஹாலிவுட் தயாரிப்பாளர்களின் படங்களில், கணிசமானவை தமிழ்ப் படுத்தப்படுகின்றன. இப்படிப் "படுத்துவதால்" என்ன லாபம்?

விவரங்களை அறிய செலிப்ரேட் பிலிம்ஸ் இன்டர்நேஷனல் நிறுவனத்தை அணுகினோம். கன்னி முயற்சியாக சுறாமீனை தமிழ் பேச வைக்க இருக்கிறார்கள் இவர்கள். அதாவது முப்பது வருடங்களுக்கு முன் இந்தியா உட்பட உலகெங்கும் அதிர்ச்சி அலைகளைப் பரப்பிய, ஸ்டீபன் ஸ்பீல்பெர்க்கின் ''ஜாஸ்'' திரைப்படம் தமிழ் வடிவம் எடுத்துக் கொண்டிருக்கிறது. (படத்தின் பெரும் பகுதியில் ஒரு அமெரிக்க சுற்றுலா மையத்தில் வந்து குவியும் பயணிகளில் சிலருக்கு சுறாமீனால் ஏற்படும் ஆபத்துகளைக் காட்டி கிலிப்படுத்தியிருப்பார்கள். கிளைமாக்ஸில்தான் அந்த ராட்சத சுறா திரையில் தோன்றி கதிகலங்க வைக்கும்.)

பொதுவாக Horror Movies எனப்படும் திகில் படங்கள்தான் இப்படித் தமிழ் வடிவம் எடுக்க, தேர்வுசெய்யப்படுகின்றன.

பெருநகரங்களையும் தாண்டி கொஞ்சம் உள்பகுதிகளை எல்லாம் அடைய இந்த மொழி மாற்றம் உதவியாக இருக்கிறதாம்.

ஜுராசிக் பார்க் அதன் தமிழ் வடிவத்திலும் வெற்றி கண்டது என்றாலும் அதன் தொடர்ச்சியான "லாஸ்ட் வேர்ல்டு" மற்றும் "அனகோண்டா" ஆகியவற்றின் தமிழ் வடிவம் எதிர்பார்த்த வெற்றியைப் பெறவில்லையாம்.

இருக்கட்டுமே, ஸ்ரீபெரும்புதூர், வேலூர், சமயநல்லூர் போன்ற ஊர் தியேட்டர்களில் கூட இந்தப் படங்கள் ரிலீஸ் ஆயின என்றால் அது தமிழ் தந்த தைரியம்தான்.

தமிழில் வசனங்களை மொழிபெயர்த்து பொருத்தமாகப் பேச வைக்க சுமார் ஒரு மாத காலம் ஆகிறது. இந்த வசனங்களைப் படத்தில் ஏற்கெனவே உள்ள பின்னணி இசையோடு மிக்ஸிங் செய்ய லண்டன் அல்லது ஹாலிவுட்டிற்கு அனுப்பப்படுகிறது. "ஜாஸ்" படத்தின் மிக்ஸிங் ஸ்பீல்பர்க்கின் ஹாலிவுட் ஸ்டுடியோவில் நடக்க உள்ளதாம்.

இனி என்ன? "சைக்கோ" படம் தமிழ் வடிவம் பெற்று பிரபல குளியல் அறைக் காட்சியில் கொலைகாரன் நெருங்கும் போது நடிகை ஜெனட் லீ தமிழில் அலறலாம்! எதற்கும் தயாராகுங்கள்.

— குல்லு





• மலைவாழ் மக்கள்...

# மலைவாழ் மக்களிடம் காலரா! மழுப்புகிறதா அரசு?

**கடந்த வாரம் கோவை பூண்டி பக்கம் மலைவாழ் மக்கள் அதிகம் காணப்படும் தாணிக்கண்டி, முட்டத்துவயல், மடக்காடு கிராமங்களில் ஒரே அல்லோல கல்லோலம். காரணம், அந்தப் பகுதியில் ஓடும் நீலி வாய்க்கால் தண்ணீரைக் குடித்ததனால் வாந்தி, பேதியினால் மரணமடைந்தவர்களின் எண்ணிக்கை ஏறிக்கொண்டே போனதுதான்... நேரில் சென்று பார்த்தோம்.**

"நாலு சலக்கா (தடவை) வாயிலயும் வயித்துலயும் போச்சு. பட்டு பட்டுன்னு நாலு உயிர் காலி. எங்கே பார்த்தாலும் எங்க ஆளுக வாந்தி பேதி மயக்கத்துல துடிச்ச துடி.... கலெக்டர் வந்தாரோ... காப்பாத்தினாரோ... ஏழு பேரோட போச்சு...!"

– நம்மிடம் 'செம்மேடு' தாண்டினதும் எதிர்கொண்டு பேசினவர் துரைசாமி என்கிற ஐம்பது வயதுப் பெரியவர்.

அவர் பின்னால் தன் தந்தையை, தன் குழந்தையை, தன் மனைவியை, தன் அத்தையை தூக்கிக் கொண்டு போய் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்ற அவஸ்தையைக் கூறும் ஆண்களும், பெண்களும் நிறைய்ய... அனைவரின் கண்களிலும் மிரட்சி.

"என் அத்தையை ஆசுபத்திரியில சேர்த்தி இப்ப ஒரு வாரத்துக்கு மேல ஆச்சு... எல்லாருமே அங்கே (நர்ஸ்க உட்பட) காலரான்னுதான் பேசிக்கிறாங்க... அதுக்காக மருந்து மாத்திரை தடுப்பூசியெல்லாம் கூடப் போட்டிருக்காங்க. ஆனா டாக்டர்கிட்ட கேட்டா மட்டும் காலரா இல்லே பயப்படாதீங்கன்னு சொல்றார்... எங்களுக்கு ஒண்ணுமே புரியலைங்க சாமீ...!" என்றார் வெள்ளச்சி என்றொரு ஆதிவாசிப் பெண்.

பொது மக்கள் தரப்பில், வந்திருப்பது காலராதான் என நம்பப்பட்டாலும் அதை சுகாதார மையத்தின் (பூலுவபட்டி) டாக்டர் குழு அறவே மறுக்கிறது. இந்நோய் தாக்கியதும் உடனடியாக இயங்கி இதற்கு துரிதமாய்த் தடுப்பு நடவடிக்கையை ஏற்படுத்தியிருந்த அவர்கள் இதை 'டையரியா' நோய் என்றும் ஒருவித பாக்டீரியாவினால் ஏற்படும் நோய் என்றும் கூறுகின்றனர். இதன் பின்னணியில் சுமார் 1700 பேருக்கு உடனடி தடுப்பு நடவடிக்கையாக 'காலரா

தடுப்பு ஊசி'யும் போடப்பட்டிருக்கிறது.

நீலிவாய்க்கால் தண்ணீரைக் குடித்ததனால்தான் இந்நோய் தாக்கியது என்பதில் அனைவரும் உடன்பட்டாலும், அந்நீரில் இந்நோய்க் கிருமி கலந்த விதம் குறித்து பலரிடமும் பலவித சர்ச்சை – நெருடல்!

● வெள்ளியங்கிரி மலையிலிருந்து ஓடிவரும் அந்நீரில் மிருகங்கள் ஏதும் செத்துக் கிடக்கலாம் என்றும் அது நாள்பட்டு தொற்றுநோய்க் கிருமிகள் வெளியேறி இந்நீரை அன்றாடம் குடிக்கும் மலைவாழ் மக்களை இந்நோய் பீடித்திருக்கலாம் என்றும் ஒரு யூகம்...

● சுமார் ஒன்றரை லட்சம் பக்தர்கள் கூடி சமீபத்தில் பூண்டிகோயிலில் 'சித்ரா பௌர்ணமி' விழா படு அமர்க்களமாய் கொண்டாடியதில், கலந்து கொண்ட வெளியூர்வாசிகள் தொற்றுநோய்க் கிருமிக்கு அடிக்கல் நாட்டி விட்டுச் சென்றிருக்கலாம் என்றொரு பேச்சு...

● நீலிவாய்க்காலைத் தொட்ட மாதிரி உள்ள 'ஈசா யோகா மையத்தில்' அடிக்கடி வெளிநாட்டவர் வந்து தங்குவதால், அவர்களும் நீலிவாய்க்கால் தண்ணீரை உபயோகப்படுத்தி கிருமிகளைப் பரப்பி விட்டிருக்கலாம் என்றும் ஒரு வதந்தி...

● எல்லாவற்றுக்கும் மேலாக இப்பகுதி மக்கள் மலைப்பாதை வழியாகவே மலைக் கொம்பு, தேன் போன்ற பொருட்களை விற்க ஆனைகட்டி (கேரளா பார்டர்) சென்று வருவதாகவும் அங்கிருந்து நோயை இங்கே கொண்டு வந்து இறக்குமதி செய்து விட்டதாகவும் (கேரளாவில் காலரா உண்டாம்) ஒரு கூடுதல் தகவல்.

• நீலிவாய்க்கால்....



ஏது எப்படியிருந்தாலும் இந்த இடத்தையும் நோயையும் சூழலையும் பொறுத்தவரை இந்நோய் தாக்கினவர்கள் பெரும்பாலும் (99 சதம்) மலைவாழ், மற்றும் ஆதி திராவிட மக்களே. அவர்கள் வாழ்நிலை, குடியிருப்பு, உணவுப் பழக்க வழக்கங்களைக் கணக்கிடும்போது இதற்கு முழு முதற்காரணம் அவர்களின் சுகாதாரக் கேடே என்பதை அனைவருமே ஒப்புக் கொள்ள வேண்டியுள்ளது.

இந்த பாதிப்பிற்குப் பின் 'நீலிவாய்க்கால் நீரை குடிக்கக் கூடாது... நீரை காய்ச்சித்தான் குடிக்க வேண்டும்.... போர்வெல் தண்ணீரைத்தான் குடிக்க வேண்டும்...' என்றெல்லாம் தொடர்ந்து அறிவுறுத்தப்படுகிறது. ஒரு டாக்டர் குழு நிரந்தரமாய் அங்கேயே தங்கி (நாம் சென்ற போதும் கூட) தடுப்பூசி, மருந்து மாத்திரைகள் அனைத்தையும் கொடுத்து வருகிறது. இதை இவர்கள் முதலிலேயே செய்திருக்கலாமே...? ஏன் செய்யவில்லை? என கோவை சுகாதாரத் துறை டெபுடி டைரக்டரைத் தொடர்பு கொண்டு கேட்டோம்.

''அவர்களுக்கு ஆரம்பம் முதலே அறிவுறுத்தி வந்திருக்கிறோம். போர்வெல் தண்ணீரை உபயோகப்படுத்த வேண்டும் என கட்டாயப்படுத்தியும் உள்ளோம். ஆனால் அவர்கள் நல்ல (குளிர்ச்சி விரும்பி) 'ஜில்' நாடி வாய்க்கால் நீரையே அருந்தி வந்திருக்கின்றனர். இது காலரா என்பது கூட தேவையில்லாத பீதி. டையரியா டிஸீஸ்தான். இதுல இறந்தவங்களையும் துல்லியமா விசாரிச்சுட்டோம். மூன்று பேர் தான். ஏழு பேர்ங்கறது வேறு நோயில ஒரு மாதம் முன்னாடி இறந்தவங்களைக் கூட தப்பாகக் கணக்குல கொண்டு வந்ததால கிடைச்ச எண்ணிக்கை! ஆனைகட்டி, பூண்டி விழா, யோகா மையத்திலிருந்தெல்லாம் இந்நோய் பரவ சாத்தியமேயில்லை...! உள்ளூர் தண்ணி மூலமாகப் பரவும் இந்நோய் இப்போது சுத்தமாய்த் தடுக்கப்பட்டு விட்டது....''

நாம் போன இடங்களில் புதிதாக முளைத்த போர்வெல்கள் காணப்பட்டன. இச் சம்பவம் நடந்ததும் கோவை ஆட்சித் தலைவர் எடுத்த அவசர நடவடிக்கை இந்த போர்வெல்கள் என்கின்றனர் பலரும். நிவாரண உதவிகளும் வழங்கப்பட்டுள்ளன.

என்றாலும் பொது ஜனங்கள் மத்தியில் உள்ள காலரா பீதி குறையவில்லை! ○

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**

● கே. கே. வெங்கடேசன்,
சென்னை – 58.

**? இன்லண்ட் லெட்டர் மற்றும் கவர்களின் விலைகள் மறுபடியும் உயர்த்தப்பட்டுள்ளதே?**

! தபால்துறையை நம்பியிருக்கும் மத்தியதர வர்க்கத்தினருக்குப் பெரிய அடி; அலுவலகங்களுக்கும் தபால் செலவு எகிறி கையைக் கடிக்கும். சேவை மேம்பட்டதாக மாறினாலாவது சந்தோஷப்படலாம்... ஆனால், 'லோகல்' தபாலுக்கே 2 – 3 நாளாகிறது! பத்திரிகை சந்தாதாரர்களிடமிருந்து வரும் புகார்களுக்கு அளவே இல்லை!



• நம்பிக்கை!

● ராஜி, கமுதி.

**? பா.ஜ.க. எந்தக் காலத்திலும் யாருடனும் கள்ள உறவு வைத்துக் கொள்ளாது என்று அதன் மாநில பொதுச் செயலாளர் ராஜா சொல்கிறாரே...?**

! வாட் அபௌட் நாயுடு...? அது நேரடி உறவுமில்லை; நேர்மையான உறவுமில்லையே!

● ஜி. கிருஷ்ணமூர்த்தி, தஞ்சாவூர்.

**? 'ஜெ'வுடைய அசையும் சொத்துக்களைப் பறிமுதல் செய்ய வேண்டும் என்று ஒரு நீதிபதி உத்தரவிட்ட ஒரு சில மணி நேரத்துக்குள் அதற்கு இடைக்காலத் தடை கிடைத்திருப்பது பற்றி...?**

! சட்டம் தன் கடமையைச் செய்ய, சிறப்பு நீதிமன்றம் அதற்குத் துணை நின்றது. உயர்நீதி மன்றம் விதித்த இடைக்காலத் தடை, சட்டமும் நீதியும் துஷ்பிரயோகமாகவில்லை என்பதை உலகுக்கு உறுதி செய்யத்தான். விடுமுறைக்குப் பிறகு உயர்நீதி மன்றம் 'ஜெ'யின் மேல்முறையீட்டை விசாரிக்கலாம் என்பது கருத்து. மேல் முறையீடு, அதற்கும் மேல் முறையீடு என்பன ஜெயலலிதாவுக்கு வாடிக்கையாகிவிட்டன. விசாரணையின்றி மேல் முறையீடுகள் நிராகரிக்கப்பட்டால் நீதிமன்றங்கள் பாரபட்சமாக நடந்து கொள்வதாகப் புகார் எழும்! ஆனால் ஜெ இதையெல்லாம் மறைத்து விட்டு, 'கருணாநிதி பழிவாங்குகிறார்' என்ற பல்லவியையே திரும்பத் திரும்பப் பாடுவது அரசியல் ஆதாயத்துக்காகத்தான்; பிரச்னையை திசை திருப்பி மக்களின் அனுதாபத்தைப் பெறத்தான்...

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

**? கலைஞரின் பவள விழா நிகழ்ச்சிகளில் உங்களை வசீகரித்தது எது? வருத்தப்பட வைத்தது எது?**

! வசீகரித்தது – அந்த முத்துச்சிப்பி செட். வருந்த வைத்தது – அவரே கட்டிக் காட்டி கண்டித்தும் உள்ள வீண் செலவுகள்; மின்சார விரயம்.

• புது பட்டம்?

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

**? 'ஹிந்து ஹிந்து' என நான் பைத்தியம் பிடித்து அலைவது போன்று ஹிந்துக்கள் அனைவருக்கும் பைத்தியம் ஏற்பட வேண்டும்' என இராமகோபாலன் கூறியுள்ளாரே?**

! இராம கோபாலன் குறிப்பிடுவது ஹிந்து தர்மத்தில் பக்தியின் மிக உயர்ந்த நிலை. அந்த அளவுக்கு மகான்களால்தான் உயர முடியும். இராமகோபாலனால் அந்த நிலையை அடைய முடியாது. அரைவேக்காட்டுத்தனமாக ஹிந்து ஹிந்து என்று பைத்தியம் பிடித்து அலைவது தவறு மட்டுமல்ல; ஆபத்தானது; சமுதாயத்துக்குத் தீங்கு விளைவிப்பது.

● இரா. திலீப், திருச்சி – 14.

**? ஜெ.வுக்குப் புதுப் பட்டம் கொடுக்க விரும்புகிறேன். என்ன பட்டம் கொடுக்கலாம்...?**

! ஏற்கெனவே நாம் கொடுத்த மேடம் 356 என்ற



• உஷார்!

# பவள விழாவிலும் வசூலை விடவில்லையே...?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
இரா. கமலக்கண்ணன்,
23, பிரதான சாலை,
நாமகிரிப்பேட்டை - 637 406.

பட்டம் 'டைம்ஸ் ஆப் இந்தியா' போன்ற பத்திரிகைகளிலெல்லாம் எடுத்துப் போட்டு எழுதப்பட்டிருக்கிறதே!

● மல்லிகை மன்னன், மதுரை - 17.

*? அண்மையில் மறைந்த மினு மசானி குறித்து...?*

! ராஜாஜி, என்.ஜி. ரங்கா, வி.பி. மேனன் ஆகியோருடன் இணைந்து சுதந்திரா கட்சியை நிறுவியவர் மசானி. அதன் செயலாளராக இருந்து, கட்சி தொடங்கிய பிறகு நடந்த முதல் பொதுத் தேர்தலிலேயே மக்களவையில் 25 இடங்களைப் பிடித்து. எதிர்க்கட்சிகளில் இரண்டாம் இடத்தைக் கைப்பற்றியவர். அடுத்த தேர்தலிலேயே இது இரட்டிப்பாகியது மட்டுமல்ல, சுதந்தரா கட்சி ஒரிஸ்ஸாவில் ஆட்சியையும் அமைத்தது. பெர்மிட் - லைசன்ஸ் - கோட்டா ஆட்சிக்குச் சமாதி கட்டி, இன்று புதிய பொருளாதாரக் கொள்கை அமல் படுத்தப்படுகிறது என்றால் அதற்கு வித்திட்டது சுதந்திரா கட்சியே. மசானி தொடக்க காலத்தில் தீவிர சோஷலிஸ்ட்டாக இருந்தவர். பின்னர் மனம் மாறி ராஜாஜியின் சுதந்தரப் பொருளாதாரக் கொள்கையை ஏற்றவர். அதனாலேயே பெர்மிட் லைசன்ஸ் ஆட்சியை தீவிரமாக எதிர்க்கவும் சுதந்தரப் பொருளாதாரத்தை ஆதரிக்கவும் முழுத் தகுதி பெற்றவராக விளங்குகிறார்.


* 'சுதந்தரா' சிந்தனை!

● இராம. கமலக்கண்ணன், நாமகிரிப்பேட்டை. ❑

*? சட்டசபை கூட்டத் தொடரில் எல்லா நாட்களும் வந்த எம்.எல்.ஏக்கள் 25 பேர் மட்டும் தானாமே...?*

! எல்லா நாளும் வந்து விட்டு ஏதுமே பேசாதிருப்பதில் பயனில்லை. சில நாட்கள் வராதிருந்தாலும் பயனுள்ளது பேசி, காரியங்கள் முன்னேற உதவினால் பாராட்டலாம்.

● ஆர். சுப்பராவ், சென்னை - 61.

*? 'ஐந்தாயிரம் பேரை பலிகொண்ட ஆப்கானிஸ்தான் நிலநடுக்கத்துக்கு, பாகிஸ்தான் நடத்திய அணுகுண்டு வெடிப்புத்தான் காரணம்' என்று இந்திய விஞ்ஞானி கூறுகிறாரே... அது சரி, நம்ம ஊர் சங்கதி என்ன...?*

! கிட்டத்தட்ட அதே சமயத்தில் மஹாராஷ்டிராவில் நிலநடுக்கம் ஏற்பட்டுள்ளது. அணுகுண்டு சோதனைதான் இதற்குக் காரணம் என்றோ, காரணமல்ல என்றோ திட்டவட்டமாகக் கூற முடியாது. ஆனால் ஒரு பட்டாம்பூச்சியின் சிறகு அசைவு கூட பிரபஞ்சத்தில் தொடர் விளைவுகளை ஏற்படுத்தும் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை. அப்படியிருக்கையில் அணுகுண்டுச் சோதனையால் பாதிப்பு இருக்காதா...?

● ஆர். சரோஜா, நாட்டரசன்கோட்டை.

*? தமிழ்நாட்டில் பி.ஜே.பி. கூட்டணியை யாராலும் உடைக்க முடியாது என இல. கணேசன் கூறியுள்ளாரே...?*

! ஜெயலலிதாவால் கூடவா?

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்.

*? எதில் சிக்கனம் தேவை, எதில் தாராளம் தேவை...?*

! இது கூடத் தெரியாதா? கோபத்தில் சிக்கனம்; அன்பில் தாராளம்!

● வி. சிவா, மதுரை.

*? பவள விழாவிலும் தன் உண்டியல் வசூலை விடவில்லையே கலைஞர்?*

! வசூல் மொத்தமும் முதலமைச்சர் நிவாரண நிதிக்கல்லவா போயிருக்கிறது! பரிசுகளெல்லாம் அறிவாலயத்தில் காட்சிப் பொருள்களாகியிருக்கின்றன. கலைஞர் இதில் உஷாராக இல்லையெனில் புதிய பட்ஜெட்படி எக்கச்சக்கமாக வருமான வரி கட்ட வேண்டியிருக்கும்...!


• வேகாத பேச்சு!

● எம். ராஜலட்சுமி, மதுரை - 10.

*? மன உறுதி மட்டும் வெற்றியைத் தேடித் தருமா...?*

! விடாமுயற்சி என்று அதுக்கு ஒரு தம்பி இருக்குங்க... அதுவும் கூட வேணும்!

● கே. எம். சுப்ரமணியன், பூனாம்பாளையம்.

*? இந்தோனேஷிய மாணவர்கள் - 'ஜெ' - ஒப்பிடுக...?*

! அது போராட்டம்; இது பித்தலாட்டம்!

நான் ஒரு விற்பனையாளன். என் உள்ளமோ என்னை வெறும் விற்பனையாளனாக நிறுத்திக் கொள்ளவில்லை. அமெரிக்காவில் சிறிய நிறுவனங்கள், பெரிய நிறுவனங்கள், என்று ஆச்சரியமான பொருட்களை விற்பனை செய்து கொண்டிருந்தார்கள். உற்பத்தி செய்து கொண்டிருந்தார்கள்.

எப்படி இந்த எண்ணம் இவர்களுக்குத் தோன்றியது? ஒரு சிறு எண்ணம் – சாதாரண எண்ணம் – எப்படி ஒரு மிகப் பெருந்தொழிலாக மலர்ந்தது என்று வியப்பேன். அவர்களது பொருள் பற்றியும் அவர்களது போட்டி நிறுவனங்கள் பற்றியும் எனக்கு நன்கு தெரியும். எனவே அங்கே செல்வேன், விற்பனைக்காக.

அங்கே எனது பொருட்களைப் பற்றிப் பேச மாட்டேன். அவர்களது கம்பெனியைப் பார்த்து என் ஆச்சரியத்தை எடுத்து வைப்பேன். அவர்களது பொருட்களைப் பற்றிப் பேசுவேன். போட்டி நிறுவனங்களின் பொருட்களைப் பற்றியும் அவர்களின் அணுகுமுறை பற்றியும் பேசுவேன்.



ஒரு விற்பனையாளரான நீங்கள் உங்கள் பொருளைப் பற்றிப் பேசும்போது நீங்கள் தற்காப்புடன் பேச வேண்டும்; அவர்களுக்குப் பதில் சொல்லும் நிலையில் (Defence) நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் அவர்கள் நிறுவனத்தைப் பற்றியோ அல்லது அவர்களது பொருட்களைப் பற்றியோ அர்த்தத்துடன் பேசும்போது நீங்கள் சம நிலையில் பேசுகிறீர்கள்; உறவாடுகிறீர்கள்.

அவர்களது நிறுவனம் பற்றி உங்கள் சந்தேகங்களையோ அல்லது அவர்களது வெற்றிக்கான காரணங்களையோ நாம் கேட்கத் துவங்கும்போது அவர்கள் ஆர்வத்துடன் பேசுவார்கள். விற்பனையில், முதலில் மனித உறவுகளை நேர்மையுடன், மரியாதையுடன், அக்கறையுடன் பலப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அதற்குப் பின் அவர்களே நமது நிறுவனத்தைப் பற்றியும் நமது பொருளைப் பற்றியும் கேட்பார்கள். இதனால் என்ன ஏற்பட்டது?

நான் பொருளை மட்டும் விற்கவில்லை; என்னையும் – என்னை அறியாமல் விற்றுக் கொண்டிருந்தேன் போலும்! பல இடங்களில் என்னை அவர்களது நிறுவனத்தின் வளர்ச்சிக்கு என்ன செய்யலாம், என்று யோசனை கேட்டார்கள். சிறு குறிப்பாக எழுதித்தரச் சொன்னார்கள். முடிவில் அங்கே ஆலோசகராக இருந்து உதவ முடியுமா என்று கேட்டார்கள்.

அது ஒரு சிறிய நிறுவனம். நல்ல நிறுவனம். அசாதரண

**"எனக்கு வியப்பு ஒரு பக்கம்; மலைப்பு ஒரு பக்கம். இப்படி இந்த நிறுவனத்தின் மூலதனமான ரகசிய செய்முறைகளை எல்லாம் நம்மிடம் ஒப்படைக்கிறார்களே என்ற எண்ணத்திலிருந்து என்னால் நெடுநேரம் மீள முடியவில்லை."**

மான பொருளைத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். அதாவது தீப்பிடிக்காத கூரைக்கான பலகைகளை, மரத்தின் துருவல்களிலிருந்து செய்து விற்றார்கள்.

இரண்டு மூன்று முறை அங்கே சென்று வந்தபோது, அவர்களது தொழிற்சாலையைச் சென்று பார்வையிட என்னை அழைத்துச் சென்றார்கள்; காட்டினார்கள்.

மரங்கள் மெலிதாக கூரான உளியினால் இழைப்பதன் மூலம், தேங்காய்த் துருவல் போல – சுருள் கம்பி போல – நெருப்புக் குச்சி அளவில் மரத் துருவல்கள் கிடைக்கின்றன. அதற்குப் பிறகு ஒரு ஏழெட்டு கட்டங்களைக் கடந்து ஈரமான அந்த துருவலை சிமெண்ட் கலந்த தண்ணீரில் நனைக்கிறார்கள். பின், பதப்படுத்துகிறார்கள். கூடு பாய்ந்த மரத்துருவல்களான – சப்தத்தை வாங்கிக் கொள்ளும் – தீப்பிடிக்காத சிமெண்ட் பலகைகள் உருவாயின.

நிர்வாகி வந்தார். "நான் ஒரு பொறியியல் படித்த நிர்வாகி. இந்தச் செய்முறை இருக்கிறதே இதை ஒரு ஜெர்மன் பேராசிரியர் கொடுத்தார். 17 ஆண்டுகளாக இதைத்தான் உபயோகிக்கிறோம். ஏன் இந்த ஏழெட்டு கட்டங்கள் என்றோ, மற்ற எதுவுமோ சொல்ல மறுக்கிறார். நாங்கள் அவருக்கு ராயல்டி தொகை மாதா மாதம் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். இந்த செய்முறையை சுருக்கலாம் என்று நான் நினைக்கிறேன். இதை எல்லாம் படித்துப் பார். பிறகு நான் உன்னுடன் பேசுகிறேன்" என்று சொல்லி ரகசியமான செய்முறை ஒப்பந்தங்களை எல்லாம் எடுத்துப் போட்டார்!

எனக்கு வியப்பு ஒரு பக்கம்; மலைப்பு ஒரு பக்கம். இப்படி இந்த நிறுவனத்தின் மூலதனமான ரகசிய செய்முறைகளை எல்லாம் நம்மிடம் ஒப்படைக்கிறார்களே என்ற எண்ணத்திலிருந்து என்னால் நெடு நேரம் மீள முடியவில்லை. அந்த மலைப்பு நீங்காமல் அவர்கள் கொடுத்த தாள்களை எடுத்துக் கொண்டு எழுந்தேன்.

வீட்டிற்குச் சென்று படித்துப் பார்த்தேன். அவர்களது தொழிற்சாலையைப் பார்வையிட்டபோதே ஒவ்வொரு கட்டத்திலும் அந்த மரத் துருவல்களுக்கு என்ன நேர்கிறது, என்ன செய்கிறார்கள், ஏன் செய்கிறார்கள் என்பது எனக்குப் புரிந்தது. அந்தச் செய்முறையில் சூட்சுமமான முக்கிய கட்டம் எது என்பதும், அங்கே என்ன செய்ய வேண்டும் என்பதும் எனக்குப் புரிந்தது.

பிரச்னையை மனத்தில் ஊறப் போட்டேன். இரண்டு மூன்று வாரம் கழித்து 'டியு பாண்ட்' என்ற பிரபல ரசாயன நிறுவனத்தின் மாதாந்திர வெளியீடு வந்தது. தற்செயலாக அதைப் புரட்டிக் கொண்டிருந்தேன். எனக்குப் பொறியில் தட்டினாற்போல ஓர் உணர்வு. ஒரு புதிய கண்டுபிடிப்பை அவர்கள் வெளியிட்டிருந்தார்கள். தண்ணீரின் தன்மையை மாற்றும் ஒரு பொருளை அறிமுகப்படுத்தி எழுதியிருந்தார்கள்.

அதை வாங்கினேன். புதிய பொருளை உபயோகித்து ஏழெட்டுக் கட்டங்கள் உதறித் தள்ளி ஒரே கட்டத்தில் அந்த மரத் துருவல்களைப் பதப்படுத்தும் முறையைச் செய்தேன்; அது சரியாக வேலை செய்தது! அந்தப் பொறியியல் நிர்வாகி என்னைப் பாராட்டினர்; 'செக்'கையும் கொடுத்தார்!

அதன் பின் பல நிறுவனங்களில் எனது வேலையுடனேயே பல ஆலோசனைகளைக் கூறினேன். ஒரு சமயம், நான் தயாரித்திருந்த ஓர் உணவுப் பொருளைக் கண்ட, ருசி பார்த்த, அதன் தன்மைகளை அறிந்த ஒரு நிர்வாகி என்னை ஒரு பில்லியன் டாலர் கம்பெனிக்கு ஆலோசனை கூறி ஒரு புதிய நிறுவனத்தை உருவாக்கும் பணிக்கு அழைத்தார். அது பெரிய கதை. நானும் என் மனைவியும் சில மாதங்கள் அவர்களுக்கான பொருளை உருவாக்கிக் கொடுத்தோம்.

# எண்ணங்கள் உருவாக்கிய சூழ்நிலை!

**நா**ன் விற்பனையாளன் என்ற நிலையிலிருந்து எப்படி ஒரு நடுத்தர வருமானம் (medium sized industry) கொண்ட ஒரு பெரிய நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாகப் பதவி ஏற்றேன் என்பதைச் சொல்ல வேண்டும்.

ஒரு இத்தாலிய உணவுப் பொருளை – 'பிட்சா' எனப்படும் 'ரெடிமேடு' உணவுப் பொருளை – உறைந்த குளிர் நிலையில் (frozen) பெரும் பெரும் கடைகளுக்கு விற்கும் ஓர் நிறுவனம், அது.

இத்தாலிய உணவுப் பொருட்கள் எனக்கு மிகவும் பிடிக்கும். நமது ஊர் உணவின் ருசி போல, அதை ஒத்ததாக இத்தாலிய உணவு இருக்கும். 'நூடுல்ஸ்' எனப்படும் சேமியாவில் செய்யும் உணவு வகைகள், 'பிட்சா' எனப்படும் ஒரு வகை ரொட்டியில் தக்காளிப் பழ காரக் கலவையையும் 'சீஸ்' எனப்படும் பால்கட்டியையும் சேர்த்து செய்யப்படும் பல்வகை பிட்சா உணவுப் பொருட்கள், மற்றும் நமது ஊர் சமோசா போன்ற இத்தாலிய உணவுப் பொருட்கள் – இவை எல்லாம் மிகவும் பிரபலமானவை.

வெள்ளிக்கிழமை மாலை வீடு திரும்பும்

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

போது அங்குள்ள இந்த இத்தாலிய உணவுக் கம்பெனியின் தொழிற்சாலைக்குச் செல்வேன். தொழிற்சாலையில் நேரடி விற்பனை உண்டு. அங்கு சென்று எனக்குப் பிடித்த உணவுப் பொருட்களை, உறைந்த குளிர் நிலையில் இருப்பவற்றை வாங்கிச் செல்வேன். வீட்டில் அதை சூடுபடுத்திச் சாப்பிட வேண்டியதுதான்; அவ்வளவு எளிது.

வாங்கிப் போய் சாப்பிட்ட போதுதான் ஒரு விஷயம் எனக்குப் புரிந்தது. அது புகழ்பெற்ற நிறுவனம்; எனினும் பொருளின் தரம் மிக மோசமாய் இருந்தது. இது என்னை மிகவும் பாதித்தது; கோபமூட்டியது.

இரண்டு மாதம் கழித்து, ரசாயனப் பொருளின் விற்பனையாளனாக, அந்த நிறுவனத்தின் தலைமையகத்திற்குச் சென்றேன். தட்ப வெப்ப நிலையைப் பற்றி விசாரித்த பின் விஷயத்திற்கு வந்தோம். அந்த நிர்வாகி உற்சாகமான மனிதர்; சகஜமாகப் பழகினார். நான் கேட்டேன்.

"உங்கள் நிறுவனத்தின் பொருள்களின் விற்பனை வெகு வேகமாக இறங்கிக் கொண்டு வருமே?" என்றேன்.

"ஆம்! உனக்கெப்படித் தெரியும்?" என்றார்.

"பொருளை வாங்கினேன். தரம் மிக மோசமாய் இருந்தது. ஒவ்வொரு வாரமும் நீங்கள் உற்பத்தி செய்யும் ஒரு லட்சம் பொருளை வாங்குபவர்களும் தங்களுக்குத் தெரிந்த எட்டு பேரிடம் சொன்னால் எட்டு லட்சம் வாடிக்கையாளர்களை நீங்கள் வாரந்தோறும் இழப்பீர்கள்!" என்றேன்.

"ஆம்!" என்றார்.

"இவ்வளவு புகழ்பெற்ற கம்பெனி, இப்படியா செய்வது?" என்று கேட்டேன்.

"முதலில் பொருளின் தரத்தை சரிப்படுத்துங்கள். பின் பிற துறைகளில் குறிப்பாக மெக்சிகன் உணவுப் பொருட்களை கூடவே உற்பத்தி செய்வதில் இறங்குங்கள். அதற்கு மார்க்கெட் வளர்ந்து வருகிறது" என்றேன்.

மனிதர் என்னை இரண்டு மணி நேரம் விடவில்லை. நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

"இந்த நிறுவனத்தின் சொந்தக்காரர் பெரிய சந்தேகம் கொண்ட மனிதர். நீ யோசனை சொன்னால், 'ஏன் இவன் யோசனை சொல்கிறான்?' என்று சந்தேகிப்பார். எதற்கும் உன் எண்ணங்களை எழுதிக் கொடுத்துவிட்டுப் போ! அவர் மேஜை மீது வைக்கிறேன்" என்றார்.

நான் இதை 'சீரியசாக' - மிக முக்கியமானதாக - எடுத்துக் கொள்ளவில்லை. "நல்லது சொல்லலாம். ஆனால் அதை எடுத்துக் கொள்வதும், எடுத்துக் கொள்ளாததும் நம் கையில் இல்லை. அவர்கள் இஷ்டம்" என்ற ஒரு அசிரத்தையுடன் எடுத்துக் கொண்டேன்.

"எனினும் ஊதுகிற சங்கை ஊதி வைப்போம்." என்று நான்கு பக்கத்திற்குச் சில யோசனைகளை எழுதி - பொருளின் தரத்தை உயர்த்தவும், பிற துறைகளில் இறங்கவும் - என் கருத்துக்களைத் தெரிவித்து தபாலில் அனுப்பிவிட்டு, மறந்து விட்டேன் அது பற்றி.

"டாக்டர் முத்து!" என்றொரு குரல், ஒரு நாள் போனில். முத்து எனது தாத்தா பெயர்! அமெரிக்காவில் முத்து என்பது எனது முதல் பெயராகவும், உதயமூர்த்தி என்பது குடும்பப் பெயராகவும் மாறியது! சாதிப் பெயர்தான் கடைசிப் பெயராக - குடும்பப் பெயராக இருக்க வேண்டும்; ஆனால் சாதிப் பெயரைத்தான் துறந்து விட்டோமே!

"உன் யோசனைகளைப் படித்துப் பார்த்தேன். மிக நல்ல யோசனைகள். என்னை வந்து சந்திக்க முடியுமா?" என்று கேட்டார்.

அவரை சந்தித்தேன். பேசினோம். அவருக்கு என் மீது நம்பிக்கை ஏற்பட்டது. சொன்னார்; எங்கள் பொருளின் தரம் மிக மோசமாய்த்தான் இருக்கிறது. இதை நீ மாற்றித்தர இயலுமா?" என்றார். "நிச்சயமாக!" என்றேன். பிறகு ஒரு நான்கு மாதங்கள்.

முதலில் அவர்கள் தொழிற்சாலையைப் பார்வையிட்டேன். அவர்கள் செய்முறையை அக்கு வேறு ஆணி வேறாகப் புரிந்து கொண்டேன். கோதுமை மாவுப் பொருளின் குணங்கள் பற்றிய ஆராய்ச்சி நூல்களை - நூல் ஒன்று 200 டாலர் - வாங்கினேன். எதைச் சேர்த்தால் முறுமுறுப்பாக அதே சமயம் மிருதுவாக அவர்களது அடித்தள ரொட்டி மாவு வரும் என்பதைப் புரிந்து கொண்டேன். பின்னால் தக்காளிப் பழக் கலவையை மாற்றினேன்.

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் ஒருமுறை அவர்கள் பிசையும் மாவு 400 பவுண்டு. மிஷினில் அதற்கேற்ற தண்ணீர், வெண்ணெய், புளிக்க வைக்கும் ஈஸ்ட், சர்க்கரை என்று பல பொருட்கள்.

ஒரு தவணையில் நமது கலவை சரியில்லை என்றால் நஷ்டம் 500 டாலர்

அது மட்டுமல்ல அந்த அளவு உற்பத்தி நேரம் வீணாகும்; வேலை நடக்காது. இது அதிகம் பரீட்சை செய்கிற விஷயமல்ல; பரீட்சை செய்யா மலும் இருக்க முடியாது!

சிறிய அளவில் குடும்பத் தலைவி ரொட்டி செய்கின்ற அளவுகளை அப்படியே பெரிய அள வில் எடுத்துச் செய்ய முடியாது; செய் தால் சரியாக வராது.

நான்கு மாதம் கஷ்டப்பட்டேன். யோசித் தேன் - ஆராய்ந்தேன். பல புதிய பொருட் களுடன் பரீட்சை செய்தேன். ஒரு நாள் சோதனைக்குத் தயாரானேன்.

இடம் - நிர்வாகத் தலைமையகம். அங்கே சோதனைக்கான சமையலறை - அங்கே (oven) எனப்படும் ரொட்டி சுடும் அடுப்பு. தொழிற்சாலையிலிருந்து நானூறு பவுண்டு கலவையிலிருந்து வெளிவந்த முடிவான உணவுப் பொருள்கள், விற்பனைக்கேற்ற வகையில் 'பாக்' செய்யப்பட்டு எல்லோர் கண் முன்னும் அடுக்கப்பட்டிருந்தது.

ஒருகணம் யோசனை. தவிப்பு. என்ன ஆகுமோ? எப்படி இருக்குமோ?" என்ற சந்தே கங்கள். நிறுவனத்தின் தலைவர், தேசிய தலைமை விற்பனையாளர், (ஆறடி உயரம்) நிறு வனத்தின் தலைமை கணக்காளர். நிறுவனத் தலைவரின் காரியதரிசிப் பெண்மணி. இப்படி பெரிய மனித கும்பல். அந்தப் பெண்மணி அட்டைப் பெட்டியைப் பிரித்தார். அடுப்பில் வைத்தார். 12 நிமிடங்களில் எடுத்தார்.

அண்ணாந்து பார்த்து, ஆயிரம் கடவுள் களை வேண்டிக் கொண்டிருந்தேன்!

தலைவர் உணவுப் பொருளை உருளும் கத்தியால் வெட்டினார். 'கரகர'வென்ற ஒலி எழுந்தது. "ஆவி!" என்றார்! வாயில் போட் டார், "அற்புதம்!" என்றார். ஏக காலத்தில் நிர்வாகிகளிடமிருந்து அற்புதக் குரல்கள் கேட்டன!

என் கையைப் பிடித்துக் கொண்டார். "வா என் அறைக்கு" என்றார். நான் வாங்கிக் கொண்டிருந்த சம்பளத்தைப் போல் 2½ பங்கு சம்பளம் அதிகமாக - தலைமை நிர் வாக அதிகாரியாக - 30 ஆயிரம் டாலர் சம்பளத்தில் எனக்கு ஒரு ஒப்பந்தத்தை டைப் செய்து கையில் கொடுத்தார். வீட்டிற்கு எடுத்துச் சென்றேன்.

என் மகளும் மனைவியும் இந்த ஒப்பந் தத்தைப் படித்துப் பார்த்துவிட்டு நம்ப வில்லை! நானும் ஆச்சரியத்தில் மிதந்து



"அடிச்சாலும் ஆட்டோக்காரங்க புத்தி மாறாதுன்னு எதை வெச்சி சொல்றே?"

"நேத்து ஆட்டோவைக் கொண்டு மோதிட்டான்'னு பிளாட்பார சனங்க தர்ம அடி கொடுத்ததும் 'மேலே போட்டு'க் கொடுங்கறான்...!"

— ஜூனியர் தேஜ்

கொண்டிருந்தேன்.

மூன்றாண்டுகள் அதை நிர்வகித்தேன். நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருந்த நிறுவனத்தை ஓராண்டு காலத்தில் தூக்கி நிறுத்தி, லாபத்தில் ஓடச் செய்தேன். உணவுத் தொழில் பற்றிய பத்திரிகைகளில் என்னைப் பற்றிக் கட்டுரைகள் வெளி வந் தன. அமெரிக்காவில் தொழில் துறையிலும் தொழிலின் நிதித்துறையிலும் 'யார் யார்' என்ற புகழ் மிக்க டைரக்டரியில் என் பெயர் வெளி வந்தது. (Directory of Who is who in Industry & Finance in USA).

இதைப் படிக்கும் பலரும் அதிர்ஷ்டம் என்று கூறக் கூடும்.

ஆனால் இது நான் பல நாட்களாக - தொழில் துறையில் இறங்கியதிலிருந்து கண்டு வந்த கனவு. தீர்க்க தரிசனம் என்பார்களே (vision) அப்படி மனத்தில் படமாகக் கண்ட - நிகழ்வதாகக் கண்ட - கனவு. அதன் பின் தேடல், உழைப்பு, சிந்தனை, இடைவிடா முயற்சி என்று சளைக்காத மனத்துடன் பாடு பட்டதன் விளைவு. அப்போது அந்த நிலையில்தான் 'நாம்' வருகிறோம்; 'நம்மால் முடியும்' என்ற நம்பிக்கை வருகிறது. நம்மைப் பற்றிய பெருமை நமக்கே ஏற்பட்டு, நம்மை மேலும் உந்தித் தள்ளுகிறது.

"சூழ்நிலையைக் குற்றம் சாட்டும் ஏழை மனிதனைக் கண்டு ஆத்மா பரிகசிக்கிறது. உயர் லட்சியங்களை மனத்தில் விதையுங் கள். தன் எண்ண விதைகளைக் கொண்டு சூழ்நிலையைக் கட்டுப்படுத்தலாம் என்பதை உணரும் போது மனிதன் தன்னையே உரு வாக்கிக் கொள்கிறான்" என்கிறார் ஜேம்ஸ் ஆலன் என்ற தத்துவ ஞானி.

(தொடரும்)

# யார் குற்றவாளி?

## சிவமாலன்

"இங்க பாரு பொன்னா! நீ புது ஆளு; சொல்றதெல்லாம் நியாயமாவே இருக்கலாம்! ஆனா, கணக்குப்படி குறைவுதானே? அதற்கு நீதானே பொறுப்பு? நீ எழுதிய இருப்புப்படி வரும் குறைவை யார் ஏத்துப்பாங்க! எனக்கு மற்றதெல்லாம் தெரியாது. கணக்கை மீண்டும் சரியாப் பார்! நாளை, அல்லது மறுநாள் வருவேன். என்ன செய்வியோ, ஏது செய்வியோ தெரியாது. கணக்கும், இருப்பும் சரியா இருக்கணும்! இல்லாட்டி ரிப்போர்ட் பண்ணிடுவேன். பிறகு சீரியஸாயிடும்! பீ கேர் புல்!" என்று கடிந்து சொல்லி விட்டு, மதுரை வந்து சேர்ந்தேன்.

எனவே, ஞாயிற்றுக்கிழமை விடுமுறையானாலும், மாதம்பட்டி ரேஷன் கடைக்குச் சென்று, பொன்னன் பிரச்னைக்கு ஒரு முடிவு கட்ட வேண்டுமென்று நினைத்தேன். நினைத்துப் பார்க்கவே, என் மனம் சங்கடப்பட்டது. இந்த ஆண்டுதான் ப்ளஸ் டூ படித்து விட்டு, மேல்படிப்புக்கோ வேறு வேலைக்கோ போக முடியாத ஏழை விவசாயியின் மகனான பொன்னன், எப்படியோ, இந்த நியாய விலைக்கடையில் விற்பனையாளனாக வந்து சேர்ந்து விட்டிருந்தான். அதே ஊர்க்காரன்தான் என்றாலும், ஐநூறு ரூபாய்ச் சம்பளம் வாங்கும் அவன், கணக்கில் குறையும் தொகை ஆயிரம் ரூபாய்க்கு மேல் கட்ட என்ன செய்வான்?... பாவம்! என்ற இரக்கம் ஏற்படவே, இன்று அங்கு செல்லும் எண்ணம் தடைப்பட்டது. இன்று ஒருநாள் விட்டு விடலாம். எப்படியும் அவன் கணக்கு வழக்குகளைச் சரிபார்த்தோ, பணம் தயார் செய்தோ முடிக்கட்டும். நாளை, திங்கட்கிழமை சென்று பார்த்துக் கொள்ளலாம், என்று நினைத்துப் பயணத்தை நிறுத்தி விட்டேன். கட்டிலில் படுத்தபடியே பேப்பரைப் பார்த்துக் கொண்டிருந்தவன், சற்று நேரத்தில் தூங்கி விட்டிருந்தேன்.

அன்று மாலை ஐந்து மணியளவில் நூலகம் சென்று வர நினைத்துப் புறப்படும்போது, காக்கிச் சட்டை அணிந்த காவலர்கள் இருவர், என் பெயர் சொல்லி விசாரித்தபடி அங்கு வந்தனர். வந்தவர்களை, உள்ளே அழைத்து உட்கார வைத்துவிட்டு, "என்ன சார் விசேஷம்? என்ன காரியமா என்னைத் தேடி வந்திருக்கிங்க?" என்று விசாரித்தேன்.

அவ்விருவரில், ஹெட் கான்ஸ்டபிள், "சார்!... மாதம்பட்டி ரேசன் கடை சேல்ஸ்மேன் பொன்னுச்சாமி, நேத்து இரவு வீட்டுல தூக்குப் போட்டுத் தற்கொலை செஞ்சுக்கிட்டிருக்கான். தகவல் கிடைச்சு நாங்க போறதுக்குள்ள, அவன் உசிர் போயிருச்சு. அவன் சட்டைப் பையிலிருந்த கடிதத்துல தூக்குப் போட்டுக்கிட்டுச் சாகறதுக்கான காரணம் எழுதி வச்சிருக்கான். நேத்து நீங்க அந்தக் கடைக்குப் போயிக் கணக்கெல்லாம் பாத்திட்டு வந்திருக்கிங்க! அதான் உங்கள நேர்ல விசாரிக்கலாம்னு வந்தோம்" என்றார்.

அதிர்ச்சியடைந்தேன். என்ன பேசுவதென்றே எனக்குப் புரியவில்லை. தயக்கமாகவும், திடுக்கிடலாகவும் இருந்தது. என்றாலும், எதையும் மறைக்காமல் சொல்லி விட வேண்டுமென்று நினைத்து, "அரிசி சீனி மற்றும் சில பொருட்களில் இருப்புக் குறைவு இருந்ததையும், அதற்கு அவனே பொறுப்பேற்று, ஓரிரு நாட்களுக்குள் பணமாகக் கட்டி, இருப்புக் குறைவைச் சரிப்படுத்த வேண்டுமென்றும், தவறினால், சட்டப்படியான நடவடிக்கை எடுப்பதாகவும் கூறி வந்தேன்" என்று தெரிவித்தேன்.

"அதான் காரணம் போலிருக்கு! பணம் புரட்ட முடியலை. நாளைக்கு நீங்க வந்து பார்த்து, குறைவுபடிக்கு பணம் கட்டலேன்னா, ரிப்போர்ட் பண்ணிடுவீங்கன்னு பயந்து, எல்லோரும் படுத்துத் தூங்கினதுக்கப்புறம், வீட்டு உத்தரத்துல கயிற்றைக் கட்டித் தூக்குப் போட்டுக்கிட்டான். இத வெவரமா ஒரு தாள்ளயும் எழுதிச் சட்

டைப் பாக்கெட்ல வச்சிருக்கான்!'' என்று தெரிவித்தார் அந்த ஹெட் கான்ஸ்டபிள்.

"கொறைவு ஏற்பட்டிருப்பது உண்மைதான். புதுசா இப்பத்தான் ரெண்டு மாசத்துக்கு முன்னால, வேலைக்குச் சேர்ந்திருக்கான். நல்ல சுபாவமானவன்தான். எப்படியோ குறைவு ஏற்பட விட்டுட்டான். தப்புத் தவறு பண்றவனாத் தெரியல!'' என்று வருத்தத்துடன் கூறினேன்.

என்னிடமிருந்து, முதல் நாள் நடந்தவைகளை விவரமாக எழுதி வாங்கிக் கொண்டனர். பிறகு, "எஸ்.ஐ. உங்கள நேர்ல கூப்பிட்டு விசாரிப்பார். அப்ப வந்து, அவரிடமும் விவரம் சொல்லுங்க'' என்றனர்.

"சரி சார்! வேணுங்கறப்ப வர்றேன்! இந்த வியசத்துல, எனக்கெதுவும் சங்கடமோ பிரச்சனையோ வருங்களா?'' என்று கவலையுடன் விசாரித்தேன்.

''அப்படியெல்லாம் வராதுங்க! அவன் பண்ண தவறுக்கு, நீங்க என்ன செய்வீங்க?

உங்க டி.ஆருக்கு நாங்க விவரம் தெரிவிப்போம். அதன் பிறகு, அவங்க என்ன பண்ணுவாங்களோ ஏது செய்வாங்களோ தெரியாது! எதுக்கும் நீங்க உங்க 'பாஸ்'கிட்ட முன்னெச்சரிக்கையா, விவரம் தெரிவிச்சிடுங்க!'' என்றார் அந்தத் தலைமைக் காவலர்.



குடிமைப் பொருள் துறை துணைப் பதிவாளரைப் பார்த்து விவரம் தெரிவித்தேன். எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்ட அவர், என் மீதே குறைகூறினார். "நீங்கதான் மிஸ்டர், அடிக்கடி சென்று, கடையைப் பார்த்திருக்கணும். பார்த்திருந்தா ஆரம்ப ஸ்டேஜ்லயே குறைவுபடியானதைக் கண்டுபிடித்து, எளிதில் நிவர்த்தி பண்ணியிருக்கலாம். புது விற்பனையாளர். அந்தப் பையன். தெரிஞ்சோ தெரியாமலோ தப்புப் பண்ணியிருக்கலாம்! கொடவுன்ல கொடுக்குறதே கொறைவாயிருக்கு. திரும்ப அளந்தா மேலுங்குறையுதுங்கிறதெல்லாம் ஏற்றுக் கொள்ள முடியாது. நீங்க 'அலர்ட்'டா இருந்திருந்தா இந்த அளவு இருப்புக் குறைவு ஏற்பட்டிருக்காது! இன்று ஓர் உயிரும் பலியாகியிருக்காது!''

மறுநாள் காலை, அலுவலகம் சென்றபோது, அங்கு வந்திருந்த ஆய்வாளர்கள் அனைவரும் அனுதாபத்தோடு என்னைப் பார்த்தனர். சிலர் விசாரித்தனர். சிலர் ஏளனமாகச் சிரித்தனர். என்னையே ஒரு கொலைக் குற்றவாளி போலப் பார்த்தனர். நடந்தவைகளை விளக்கிக் கூறியும், என்னையே சிலர் குறைகூறினர். எச்சரிக்கையுடன் இல்லாதிருந்தது என் குறைதான் என்றே, பலரும் தெரிவித்தனர். அங்கிருந்து வெளியே வரும்போது, என் மனத்தில் ஓர் முடிவு, உறுதியாகியிருந்தது. கூடிய சீக்கிரமே, இத்துறையிலிருந்து மாற்றல் பெற்று, வேறு எதற்காவது சென்று விடவேண்டுமென்று முடிவு செய்து விட்டேன். ●

வட்டமேஜை

✉ அத்தனை ஜோக்குகளையும் 'ஒரே முட்டாக', இரண்டு பக்கத்தில் வெளியிட்டிருந்தது கடுமையான வெயில் சமயத்தில் 'ஜோரான திடீர்த் தென்றல்' வீசியது போலிருந்தது.
நெய்வேலி - 3, ப. உத்தண்டராமன்.

✉ உலக கால்பந்து அணியினருக்குச் செய்யப்படும் 'டோப் டெஸ்ட்' பற்றி விளக்கம் 'டாப் டேஸ்ட்!'
கோவை - 14, ஏ.எஸ். இராமசாமி.

✉ முன்னாள் அ.இ.அ.தி.மு.க. அமைச்சர் ஒருவருக்கோ, கட்சிப் பொறுப்பில் உள்ள மூத்த தலைவருக்கோ வராத தைரியம் தாமரைக்கனிக்கு வந்துள்ளது அவர் இயல்பை உணர்த்தியது.
திருவரங்கம் - 6, அ. சம்பத்.

## இன்ப அவஸ்தையில் ஒரு வாரம்!

✉ சுகன்தோவைப் பதவி இறக்கியதே சுப்பிரமணிய சுவாமிதானாக்கும்! அபிப்ராய சிகாமணிகளில் இவரை மட்டும் விட்டுட்டீங்களே!
கமுதி - 3, ராஜி.

✉ "கலைஞரை வாழ்த்தினால் எங்கள் கட்சிக்குள் பிரச்னையாகிவிடும்" என்று அம்மாவுக்கு அஞ்சிக்கிடக்கும் அடிமைக் கழகமாக மாறிவிட்டதா அ.தி.மு.க? பண்பாடு மிக்க தமிழகத்தில், 'எது எதெற்கு வாழ்த்துக் கூறலாம் கூறக்கூடாது' என்று பகுத்துணர முடியாதவரா ஜெயலலிதா? மத்தியில் ஆட்சியாளரும் கட்சியில் தொண்டனும் அஞ்சும்படி ஏன் 'ஜெ' நடந்து கொள்கிறார்?
மதுரை-9, இரா. கல்யாண சுந்தரம்.

✉ போக்ரானின் எதிரொலி பாகிஸ்தானில்! தலையங்கம் அருமை. வாஜ்பேயும் நவாஸும் சந்தித்துப் பேசி நல்ல முடிவுக்கு வர வேண்டும்.
தூத்துக்குடி - 1, சிவராம சுப்பிரமணியன்.

✉ கருத்து வேறுபாடுகள் பல இருப்பினும், அவை எல்லாம் மறந்து, வாழ்த்துத் தெரிவித்த அத்தனை வி.ஐ.பி.க்களையும் நீர் தேடிக் கண்டு பிடித்து, பேட்டி கண்ட விதந்தான் எங்களை அசர வைக்கிறது.
கும்பகோணம் - 1, எஸ்.கே. மூர்த்தி

✉ 'வாழ நினைத்தால் வாழலாம் வழியா இல்லை பூமியில்' - என்ற இந்தப் பாடலுக்குச் சிறந்த எடுத்துக் காட்டு, கானான் கனவுகளில் மிதக்கும் இளைஞர் சண்முகம்தான்!
சென்னை - 72, க. கலைச்செல்வன்.

✉ உலக அழகி என்ற பந்தா இல்லாமல், யாரையும் போட்டியாகக் கருதாத் பெருந்தன்மையுடன் கீதை படிக்கும் ஐஸ்வர்யா ராயைக் கண்டு என் ஐஸ்(eyes) ஆச்சர்யத்தால் விரிந்தன!
அரவக்குறிச்சிப்பட்டி, எம்.அசோக்ராஜா.

✉ அரசியலுக்கு அப்பாற்பட்டு, கடந்த கால பகைமையான நினைவுகளை பவள விழா நாளில் கலைஞரின் பேட்டியென படித்தபோது சற்றே...ம்கூம், முற்றிலும் வித்தியாசமான புத்துணர்ச்சியைப் பெற்றது போல் உணர்ந்தேன். அரசியல்வாதி ஜெயலலிதாவிடம் அவருக்குப் பிடித்த விஷயம் என்ன என்பதனை அறிய சஸ்பென்ஸோடு ஒரு வாரம் காத்திருந்தது கூட இன்ப அவஸ்தைதான்!
கும்பகோணம், ஆர். ஷண்முகம்.

✉ கலைஞர் பற்றிய 75 பேரின் கருத்துகளில் "அரசியல் ஃபீனிக்ஸ் அவர்" என்ற ராஜேஷ்குமாரின் கமெண்ட் நச்!
போடிநாயக்கனூர், எஸ். சையது முகமது.

✉ கல்கி 31.5.98 வார இதழில் 'சமரசம் உலாவும் இடம்' என்ற தலைப்பில் கண்ணம்மாப் பேட்டை சுடுகாட்டை நந்தவனமாக மாற்றிய செய்தியைச் சிறந்த முறையில் வெளியிட்டிருந்தீர்கள். மகிழ்ச்சி! செய்தியின் முடிவில் என்னை ஒரு ஜெயின் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு இந்து அதுவும் தமிழனாகிய நான் சாதி, மதம், இனம், மொழி, அரசியல் சார்பற்று சமுதாயப்பணிகளை ஆற்றிவருகிறேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.
சென்னை - 17, ம.பா. நிர்மல்,
நிறுவனர்/தலைவர்
எக்ஸ்னோரா இண்டர்நேஷனல்.

சுமி குப்பர் மார்க்கெட்

இலக்கியம் மூலம் இந்திய இணைப்பு - சிவசங்கரியோட இந்தப் புஸ்தகம் ரிலீஸாகி மூணு நாலு மாசம் ஆகியிருக்கும்னு நினைக்கறேன். பட், இப்பதான் எனக்குப் படிக்கக் கிடைச்சுது. துக்ளக் ஸைஸ்ல 550 பக்கம்! பட், ப்ரொடக்ஷன் பிரமாதம்! அட்டை லே-அவுட்லேருந்து கடைசிப் பக்கம் வரைக்கும் ரொம்ப கவனமா தயாரிச்சிருக்காங்க. விமர்சகர்களெல்லாம் பயந்துட்டாங்களோ என்னவோ? பட், என்ன மாதிரி ஓர்க் தெரியுமா? முதல்ல பாராட்டிடறேன். Well done Sivasankari!

முழுக்கப் படிச்சி முடிக்க ஒரு வாரம் ஆச்சு எனக்கு. சிவசங்கரி ஃபாலோ பண்ணியிருக்கறது, பாரதியார் போட்டுக் குடுத்த 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்'ரூட்டைத்தான். தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா, கர்நாடகா - இந்த நாலு ஸ்டேட் முழுக்க ட்ராவல் பண்ணி அந்தந்த ஊர் இலக்கிய இமயமலைங்களையெல்லாம் சந்திச்சி, பேட்டி கண்டு, அவங்கவங்க மாஸ்டர் பீஸ் கதையோ, கவிதையோ சேர்த்து மொழி பெயர்த்து, பேட்டி + கதை, பேட்டி+கவிதை தென், ஒட்டு மொத்த இலக்கிய வளர்ச்சி பத்தி ஒரு பிரபல விமர்சகரோட கட்டுரை, இப்படி நாலு பாகமா (நாலு ஸ்டேட்டுக்கு) பிரிச்சி, தொகுத்திருக்காங்க. இந்த ப்ராஜெக்ட் இதோட முடிஞ்சுடலை... வட மாநிலங்கள்ல இலக்கிய யாத்திரை தொடரும். அடுத்த வால்யூம் சீக்கிரம் வரும்.

ஷேக்ஸ்பியர்ங்கறோம். ஜேம்ஸ் ஜாய்ஸ்ங்கறோம், ஹெமிங்வேங்கறோம். பக்கத்து ஸ்டேட்டுங்கள்ல இருக்கற தகழியையும் பைரப்பாவையும் நாராயண ரெட்டியையும் ராவூரி பரத்வாஜாவையும் இங்க எத்தனை பேருக்குத் தெரியும்?

குண்டூர் விபசார விடுதிகள்ல எடுபிடியா வேலை பார்த்து, 'அவங்களையே தாயா பாவிச்சுப் பேசறார் பரத்வாஜா.

கன்னட ரைட்டர் பைரப்பா, சாப்பாட்டுக்குப் பிச்சை எடுத்திருக்கார். மும்பைல ஒரு ஹிப்பி சாமியார் கூட்டத்தோட தானும் சாமியாரா சுத்திட்டு, அலுத்துப் போய் திரும்பி வந்து, படிச்ச பெரியானா ஆகியிருக்கார்!

என்னென்ன மாதிரியான எக்ஸ்பீரியன்ஸஸ் தெரியுமா?

அதிர்ச்சி தரும் பாலுணர்வுக் கதைகள் மூலம் புரட்சிகரமான ரைட்டர்னு பேர் வாங்கின கமலாதாஸ் (மலையாளம்) "இப்ப என் நேரம் முழுக்க அழுவதற்கு மட்டும்தான்"னு (கணவர் மறைவு) சொல்றது, பேங்க் ஆபீஸரா வேலை பார்க்கும் சேது, "மலையாள எழுத்துலகத்துல ஒரு வயலன்ட் சேஞ்ச் வேணும்னு ஆசைப்பட்டேன்"னு நிஜத்தைப் போட்டு உடைக்கறது. நம்ம பிரபஞ்சன், "உலகா





திரும்பிப் பார்க்கறாப்பல ஒரு நாவல் எழுதப் போறேன்"னு சொல்லியிருக்கறது – வெரி இன்ட்ரஸ்டிங்!

இந்திரா பார்த்தசாரதி வீட்டுக்கு ஒரு சர்குலேடிங் லைப்ரரி ஆள் வந்தானாம். "சந்தா எவ்ளோ?"ன்னு கேட்டப்ப "ஹை கிளாஸா லோ கிளாஸா?"னு அவன் பதிலுக்குக் கேட்டிருக்கான்.

"அப்படீன்னா?"

"இங்கிலீஷ் பத்திரிகைகள்னா ஹை கிளாஸ். தமிழ்னா லோ கிளாஸ்!"னானாம் கூலா.

இவர் சும்மா விடுவாரா?

"அப்ப இந்தியா டுடே?"

"இங்கிலீஷ் இந்தியா டுடே ஹை கிளாஸ். தமிழ்னா லோ கிளாஸ்"னு பதில் சொன்னானாம்! (தமிழ்நாட்டுல தமிழோட நிலைமை பத்திப் பேசறப்ப இதைச் சொல்றார்)

பெண் எழுத்தாளர்கள் அதிகம் இல்லாம இருக்கறது, பெண் விடுதலை, இலக்கியத்துல முற்போக்கு, பிற்போக்கு, தலித் அது இதுன்னு இருக்கற பிரிவுகள் – இது பத்தியெல்லாம் பல எழுத்தாளர்கள் சொல்லியிருக்கற கருத்துகளைத் தொகுத்து ஒரு விவாதமே கூட வெக்கலாம்.

அத்தனை ரைட்டர்ஸோட பேட்டிகளிலேயும் (மொத்தம் 27) எனக்கு ரொம்பப் பிடிச்சது பஷீரோடது. என்ன ஹ்யூமர்! என்ன ஸ்பான்டேனிடி! எத்தனை ஆழமான ஆப்ஸர்வேஷன்!

அத்தனை கதைகள்லேயும் 'தி பெஸ்ட்'னு தோணினது இந்திரா பார்த்தசாரதியோடது. (பயணம்)

இந்த கலெக்‌ஷன்லயே சிறந்த அம்சம் என்னன்னா, எந்த ஒரு ரைட்டருமே தப்ஸா விடலைங்கறதுதான். எழுத்து வேற; எழுத்தாளன் வேறங்கறமாதிரி நடந்துக்கற யாரையுமே சிவசங்கரி தன் கணக்குல சேர்த்துக்கலை! ரொம்ப ஆத்மார்த்தமான தயாரிப்பு.

ஒரே ஒரு குறை. அத்தனை ரைட்டர்ஸோடவும் சிவசங்கரி 'சம்பாஷித்து, சந்தோஷித்து, ஆச்சர்யித்திருப்பதை' அடிக்கடி விசேஷித்துச் சொல்லிட்டே இருந்திருக்க வேணாம். மத்தபடி, **a book for ever.** *(வெளியீடு: திருமகள் நிலையம், 55. வெங்கட் நாராயணா சாலை, தி.நகர், சென்னை-17, விலை. ரூ.475/-)*

**ஸா**ரி. பெரிய புஸ்தகம் நிறைய இடத்தை சாப்ட்டுடுச்சு. ஸோ, ஒரு குட்டி கடி ஜோக்கோட இந்த வாரம் முடிச்சுக்கறேன்.

**"ஒரு டீச்சர் எப்பவும் க்ளாஸுக்கு கூலிங் க்ளாஸ் போட்டுக்கிட்டுத்தான் வருவாங்க."**

**"ஏன் அப்படி?"**

**"பசங்க ரொம்ப ப்ரைட்!"**

**— சுபி**

---




**அ**ண்மையில் கல்கத்தாவின் பாராநகர் இராமகிருஷ்ணா மிஷின் அணிக்கும், போர்ன்விடா கிரிக்கெட் அணிக்கும் இடையே கிரிக்கெட் போட்டி நடந்தது.

பாராநகர் இராம கிருஷ்ணாமிஷின் அணி ஒரு ரன் கூட எடுக்காமல் எல்லா விக்கெட்களையும் இழந்தது. வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த ஆட்டம் கல்கத்தாவின் கீர் மைதானத்தில், 18 நிமிடங்களில் 4 ஓவர்களில் முடிந்தது!

கிரிக்கெட் வரலாற்றில் இதுவரை இது மாதிரி நடந்ததேயில்லையாம். இதற்கு முன் 1877 ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக எம்.சி.சி அணியை எதிர்த்து 12 ரன்கள் எடுத்ததுதான் ரிக்கார்டாக இருந்தது!

ஆதாரம்: ஹிந்து.

தகவல்: கோ.வீ. இராஜேந்திரன்

**1997**ம் ஆண்டு தமிழகம் முழுவதும் 3 லட்சத்து 5,000 வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. 2,96, 653 பேர் கைது செய்யப்பட்டனர். 3127 வாகனங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. இத்தனையும் கள்ளச் சாராயம் சம்பந்தமானவையாகும்.

**ஆதாரம்: தினமலர்**

**— ஏ.எஸ். இராமசாமி**

# இதயத்தைக் கேட்டுப் பார் எல்லாமே தெரிந்து விடும்!

இ.சி.ஜி. வரைபடங்கள் உணர்த்தும் ஆழமான விஷயங்களை உணர்ந்து கொண்டு சிகிச்சை அளிப்பது டாக்டரின் பாடுதான். என்றாலும் அந்தக் கோடுகள் அறிவிக்கும் சில அடிப்படை விஷயங்களை இங்கே அறிந்து கொள்வோம்.

ஆரோக்கியமான இதயம் வெளிப்படுத்தும் மின் அதிர்வுகளைப் பதிவு செய்த இ.சி.ஜி. படம் ஒன்றை இங்கே காணலாம். இது P, Q, R, S, T, என்று பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.



• நார்மலான இ.சி.ஜி.

இதயத்தில் மேலே இரண்டு, கீழே இரண்டு என்று மொத்தம் நான்கு அறைகள் உண்டு. இதில் மேல் இரண்டு அறைகள் சுருங்குவதால் உண்டாவதுதான் 'P' என்ற வளைவு.

இதைத் தொடர்ந்து கூர்மையாக 'Q', 'R', 'S' ஆகிய மூன்று ஏற்ற இறக்கங்கள் தென்படுகின்றன அல்லவா? அவை இதயத்தின் கீழ் உள்ள இரு அறைகளான வெண்ட்ரிக்கிள்கள் சுருங்கி விரியும்போது உருவானவை.

'T' என்கிற அலை உண்டாவது இரு இதயத் துடிப்புகளுக்கு இடையே உள்ள நேரத்தில். அதாவது இதயம் தன்னை சுதாரித்துக் கொண்டு அடுத்த துடிப்புக்குத் தயாராகும் போது 'T' வகை மின்னதிர்வு ஏற்படுகிறது.

• பல்வேறு வகை நோய்களுள்ள போது பல்வேறு வகை இ.சி.ஜி.




பொது விதிகள் என்று வரையறுத்து விடமுடியாது என்றாலும் தோராயமாக இப்படிச் சொல்லலாம். இதயத்தின் மேல் இரண்டு அறைகளும் வெகு வேகமாக, எந்த வித ஒழுங்கு முறையும் இல்லாமல் இயங்குகின்றன என்றால் 'P' அலையே இருக்காது. அதே போல் இதயத்தில் எங்காவது அடைப்பு ஏற்பட்டிருந்தால் 'P'க்கும் 'QRS'க்கும் இடையே உள்ள தூரம் அதிகரித்துவிடும்.

மாரடைப்பின் காரணமாக இதயத்தில் ஏதாவது குறிப்பிட்ட தசை இறந்து விட்டிருந்தால் (அதாவது செயலற்றுப் போய்விட்டால்) அந்த பாதிப்பை வழக்கத்தை விட மிக ஆழமான 'T' வடிவத்தின் மூலம் கண்டு பிடித்து விடலாம்.

சிலருக்கு இ.சி.ஜி.யை மட்டும் கொண்டு இதய நோய் பாதிப்பை கண்டு பிடித்து விடமுடியாது. அதாவது நார்மலாக இருக்கும் போது அவர்கள் உடலில் எந்தவித




**அட இதுல இவ்ளோ விஷயம் இருக்கா?**

அடுத்த இதழுடன்

# இலவச இணைப்பு

கல்கியுடன்

தமிழ்நாடு மருத்துவமனை

இணைந்து வழங்கும்

# வீட்டுக்குள் ஒரு 'டாக்டர்!'

**– உபயோகமான, எளிய, வீட்டு மருத்துவக் குறிப்புகள்**

அன்புடன் கல்கி வழங்கும்
இலவச இணைப்பு அடுத்த வாரமும் உண்டு!

சிக்கலும் ஏற்படாது. இதயம் வழக்கமான வேகத்தில் இயங்கிக் கொண்டிருக்கும். ஆனால் வேகமாக நடந்து கொண்டிருக்கும் போதோ, தோட்டவேலை போன்ற கடின மான வேலைகளைச் செய்யும் போதோதான் தன் இதயம் பாதிக்கப்பட்டிருப்பதை அவராலேயே உணர முடியும் – நெஞ்சு வலி, தோள் அல்லது கால் பகுதியில் சுரீர் சுரீர் என்ற உணர்வு போன்றவற்றின் மூலம்.

அதாவது நாம் அதிக ஓய்வில் இருக்கும் போது நமக்கு ஓரளவு உணவு போதும். அதிகம் உழைக்கும் போது உடலுக்கு அதிக சக்தி, அதாவது அதிக உணவு தேவை. இது போலத்தான் நாம் அதிகம் உழைக்கும் போது உடலில் பாயும் ரத்தத்தின் வேகமும் அதிகரிக்க வேண்டும் (அப்போதுதான் அதிக ரத்தத்திலிருந்து அதிக ஆக்ஸிஜனை உடல் திசுக்கள் உறிஞ்சிக் கொள்ள முடியும்.)

இப்படி இல்லாமல் உடலோ, மனமோ அதிகமான வேலை செய்யும் போது, வழக்கமான அளவு ரத்தத்தையே இதயம் செலுத்துகிறது என்றால், உடலுக்குக் கோளாறு. அதே சமயம் அந்த இதயத்திலும் ஏதோ குறைபாடு என்றுதான் அர்த்தம்.

இதற்காகத்தான், இதய நோயின் அடையாளங்களையும் ஒரு நபர் தான் அனுபவிப்பதாகக் கூறுகிறார். அதே சமயம் இ.சி.ஜி பரிசோதனையில் எந்த இதயக் குறைபாடும் வெளிப்படவில்லை எனும் நிலை ஏற்படும் போது, 'ஸ்ட்ரெஸ் இ.சி.ஜி.' என்கிற சோதனையை டாக்டர் செய்து கொள்ளச் சொல்வார்.

அதாவது செயற்கையான முறையில் இதயத்துக்கு ஒருவித டென்ஷனை உருவாக்கும் முயற்சி இது. குறிப்பிட்ட கருவியின் மீது ஏறி நின்று கொள்ள வேண்டும். வழக்கமான இ.சி.ஜி.க்கு உள்ளது போன்றே, உடலின் குறிப்பிட்ட பல்வேறு இடங்களில் மின்கடத்திகள் பொருத்தப்பட்டு, வரைபடத்தான் உள்ள ஓர் கருவியோடு அவை இணைக்கப்பட்டிருக்கும்.

இப்படி இதயத்துக்கு திடீர் அதிர்ச்சியைச் செயற்கையான முறையில் கொடுப்பதால், இதயத்தின் மறைக்கப்பட்ட சில குறைபாடுகள் தெரியவரும். அதே சமயம் இந்தச் சோதனையில் ஓரளவு ரிஸ்க்கும் உண்டு. என்றாலும் மருத்துவரின் கண்காணிப்பிலேயே இந்தச் சோதனை நடைபெறுவதால் ஆபத்துக்கள் பெருமளவில் தவிர்க்கப்பட்டு விடுகின்றன.

(தொடரும்)

— ஜி.எஸ்.எஸ்.

- BUSINESS MANAGEMENT
- BUSINESS ADMINISTRATION
- OFFICE ADMINISTRATION
- SALES & MARKETING
- FINANCIAL MANAGEMENT
- INDUSTRIAL RELATIONS & PERSONNEL MANAGEMENT
- HUMAN RESOURCES DEVELOPMENT
- LABOUR LAWS
- EXPORT & IMPORT MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- PRODUCTION MANAGEMENT
- TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000
- QUALITY CONTROL & ISO 9000
- QUALITY ASSURANCE & Qs 9000/ISO 9000
- ENVIRONMENTAL MANAGEMENT & ISO 14000/14001
- INDUSTRIAL SAFETY
- RESEARCH & DEVELOPMENT
- ADVERTISING & PUBLIC RELATIONS

**ICOLAM offers SIX MONTHS**

DIPLOMA Courses by Correspondence (Distance Education Programme.) Each Diploma Course has 4 written papers.



**INDIAN COUNCIL FOR LABOUR MANAGEMENT (ICOLAM)**

25, Mada Church Rd.,
IInd Floor, Mandaveli, Chennai - 28.
Ph : 044-4952719/4852572
Fax : 044-4933259/4940066

ELIGIBILITY : No formal qualification is required. (Open Education System) Course fee Rs. 700/- only. Examination will be held in all major centres in India. For application and Prospectus send Rs. 6/- postal stamp to the above address.



ஸ்ரீ ராமஜெயம்

*வடமாநில புனித யாத்திரை*

27.8.98. இது 8 நாட்கள் கொண்ட கர்நாடக யாத்திரை ஸ்ரீரங்க பட்டினம். மைசூர்-சிருங்கேரி-அன்னபூர்ணா-சுப்ரமண்யம்-தர்மஸ்தலம்-கொல்லூர் மூகாம்பிகை-உடுப்பி-கோமடேஸ்வரர்-ஸ்ரவணபெலகுலா-பேலூர் ஹலபேடு-முருடீஸ்வரர்-கோகர்ணம்-ஜோக் பால்ஸ்-பெங்களூர். நேரம் இருப்பின் மற்றும் பல இடங்கள். நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய். 2100/-

7.9.98. இது 21 நாட்கள் கொண்டது. பூரி ஜெகன்னாத்-கோனாரக்-புவனேஸ்வர்-கயா-புத்தகயா-அலகாபாத்-அயோத்தியா-காசி-சாரநாத்-ஹரித்துவார்-ரிஷிகேஷம்-கேதார்நாத்-பத்ரிநாத்-நியூடெல்லி-ஆக்ரா-மதுராபிருந்தாவன். நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய். 5000/-

ஆங்காங்கு தங்கும் அறைகள், ஊர் சுற்றிப் பார்க்க பஸ் கட்டணம், தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம், கைதேர்ந்த தென்னிந்திய பிராமணர்களைக் கொண்டு காலை காப்பி டிபன், மதியம் இரவு நல்ல உணவு பரிமாறுவதுடன், இங்கு குறிப்பிட்ட அனைத்துச் செலவுகளும் எங்களைச் சேர்ந்தவை.

வடமாநில யாத்திரையில் 25 ஆண்டுகளுக்கும் மேலாக பெற்ற அனுபவத்துடன் மிக சிறப்பான முறையில் நடத்தி வருகின்றோம்.



மேலும் விவரங்களுக்கு

**ஸ்ரீ விஜயலட்சுமி டிராவல் சர்வீஸ்**

எண்:4, வெங்கடாசல செட்டித் தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005. போன்: 8572144

ஜூன் 17 முதல் 23 வரை

அக்னி சர்மா பக்கம்

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கடின உழைப்பு. உடல் அசதி. வீட்டுல சிறுசிறு சலசலப்புகள். அலைச்சல், மனக் கஷ்டம். இதானே? கொஞ்சம் பொறுத்துக்கங்க. இப்ப கிரகங்கள் சாதகமா இல்லை. கவனமா பழகி, பேசி, கூடிய வரைக்கும் எல்லாரையும் அனுசரிச்சி நடங்க. உத்தியோகஸ்தர்கள், மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகலாம். பெண்களுக்கு உடம்பு கொஞ்சம் படுத்தும். தினசரி பிள்ளையாரை வழிபட்டுட்டு வாங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கஷ்டங்களுக்கு நடுவுல சின்ன ரிலீஃப் கிடைச்சாப்பால இந்த வாரம் உங்க தினசரி அலுவல்கள் சுமுகமா நடக்கும். நீண்ட நாள் பிரார்த்தனை ஒண்ணு நிறைவேறும். மனசுல நிம்மதி தங்கும். வெளியூர்ப் பயணங்கள் இருக்கும். பண கையிருப்பு திருப்தியா இருக்கும். பெண்களுக்கு திருமணப் பேச்சு ஆரம்பமாகும். எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவாங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

அசத்தலான சாதனை ஒண்ணு செய்யப் போறீங்க. பேரும் புகழும் கூடும். வீட்டுல சுப காரியங்கள் நடக்கும். பணவரவு பிரமாதமா இருக்கும். வியாபாரிகளுக்கு எதிர்பார்த்ததுக்கு மேல லாபம் வரும். பெண்களுக்குப் புடவை யோகம் உண்டு. வயசானவங்களுக்கு, அவங்க பையன்கள் மூலமா மனமகிழ்ச்சிக்கான சம்பவம் ஒண்ணு நடக்கும். அரசியல்வாதிகளுக்கு இது புகழ் கூடும் வாரம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

ஸ்மூத்தான வாரம். பிரச்னைகள் இல்லாம, நினைச்ச காரியத்தை சாதிப்பீங்க. நண்பர்கள் உதவுவாங்க. நீண்ட நாள் பாக்கிகள் வந்து சேரும். சமூக சேவகர்களும் அரசியல்வாதிகளும் அதிகம் அலைச்சல் படவேண்டி வரும்னாலும் கூடவே நல்ல பேரும் வருதே? போதாதா? உடல் நலத்துல கவனமா இருங்க. கூடிய மட்டும் இரவில் பயணத்தைத் தவிர்த்துடுங்க. வீடு, மனை வாங்க இது உகந்த வாரம். ஷேர் மாதிரி முதலீடுகளும் செய்யலாம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பொருளாதார ரீதில லேசான நெருக்கடி இருக்கும்னாலும், அது உங்க அன்றாட வாழ்க்கையை பாதிக்காது. அநாவசிய செலவுகளை மட்டும் தவிர்த்துடுங்க. உங்க மனைவி உடல் நலத்துல கவனமா இருங்க. வீட்டு உபயோகப் பொருட்கள் சிலது வாங்க வேண்டி வரும். பயணங்கள் லாபகரமா இருக்காது. பிக்பாக்கெட்காரங்க கிட்ட உஷாரா இருங்க. ராத்திரி ரொம்ப நேரம் கண்விழிக்காதீங்க.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

வசீகரமா பேசறது மூலம் சில முக்கியமான காரியங்களை சாதிச்சிப்பீங்க. ஆனா உங்க எதிரிகள் உங்களை விட விழிப்பா இருக்காங்க. எதையும் தீர யோசிச்சிச் செய்யுங்க. வீட்டுல ஒரு முக்கியமான விசேஷம் நடக்கப் போவுது. அது, உங்க மகன்/மகள் திருமணமா இருக்கலாம். பணப் பிரச்னை இருக்காது. ஆனா மருத்துவச் செலவுகள் ஏதாவது வரலாம்.

**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*



காரியங்கள் எல்லாம் தள்ளிப் போவுதேன்னு கவலைப்படாதிங்க. கொஞ்சம் நிதானமா யோசிச்சிச் செயல்பட வேண்டியது முக்கியம். இந்த வாரம், முக்கியமான உயரதிகாரி ஒருத்தரோட அறிமுகம் கிடைக்கும். அவர் மூலம் உங்க நீண்ட நாள் பிரச்னை ஒண்ணைத் தீக்கலாம். வீட்டுல சின்ன மனஸ்தாபங்கள் வந்தா அதைப் பெரிசு படுத்தாதிங்க. உங்க சகோதரர்களை கன்ஸல்ட் பண்ணிட்டுத் தொடங்கற காரியங்கள் இந்த வாரம் வெற்றி பெறும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4 – ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

சொகுசான வாழ்க்கைங்க உங்களுக்கு. உங்க கவலையையெல்லாம் மத்தவங்க தலைல தூக்கிவெச்சிட்டுத் தீர்த்துடுவாங்க. தென் வாட்? பணப் பிரச்னையோ, மனக்கஷ்டமோ இருக்காது. மனைவி உடல் நலத்துல மட்டும் அக்கறை செலுத்துங்க. இந்த வாரம் புண்ணியத்தல யாத்திரைகள் சிலருக்கு அமையும்.

**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



வெற்றிக்கு ரொம்பப் பக்கத்துல இருக்கீங்க. டயமும் நல்லா இருக்குது. தயங்காம உங்க எதிர்காலத் திட்டங்களை இப்பவே செயல்படுத்தத் தொடங்கிடுங்க. வாலிப வயசுப் பசங்களுக்குக் கல்யாணப் பேச்சு தொடங்கும். அலுவலக ரீதில சில முக்கியமான பொறுப்புகள் உங்களுக்குத் தரப்படலாம். பணப் பிரச்னையே கிடையாது. விருந்து, கேளிக்கைன்னு உற்சாகமான தினங்களா இந்த வாரம் அமையும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

கிரகங்கள் அனுகூலமா இல்லை. எதையும் ஒருதடவைக்கு ரெண்டு தடவை யோசிச்சிச் செய்யுங்க. முதலீடுகளோ, வெளியூர்ப் பயணமோ இப்ப வேணாம். வீட்டுல கணவன் மனைவி உறவுல ஊடல்கள் வரலாம். விட்டுக் கொடுத்துப் போங்க. பெற்றோர் உடல் நலத்துல அக்கறை செலுத்துங்க. டூவீலர்ல போறவங்க ரொம்ப கவனமா இருக்கணும். விபத்துகளுக்கு வாய்ப்பு உண்டு.

**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



உங்களுக்கு என்னங்க? பட்ட கஷ்டமெல்லாம் தீர்ந்து போற நேரம் இது! உடல் நலம் சரியா இல்லாதவங்க மட்டும் தினமும் பிள்ளையாரை வணங்கிட்டு வாங்க. மற்றபடி வீட்டுலயும் அலுவலகத்திலும் உங்க பேரும் புகழும் உயரும் நேரம் இது. வீட்டுல ஏதாவது சுப காரியங்கள் நடக்கும். விருந்தினர் வருகை மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு எதிர் பாராத மகிழ்ச்சி ஒண்ணு அவங்க பையன்கள் மூலமோ, சகோதரி மகன்/மகள் மூலமோ வந்து சேரும்.

**மீனம்** : *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



கிரகங்கள் உங்களை இப்ப சரியா கவனிக்கலை. ஸோ, எதிலும் விழிப்பா இருங்க. யாரையும் பகைச்சிக்காதிங்க. முக்கிய முடிவுகளை நாலு பேரை கன்ஸல்ட் பண்ணிட்டு எடுங்க. இந்த வாரம் விருப்பமில்லாத காரியத்தை செய்யச் சொல்லி மேலதிகாரிகள் கட்டாயப்படுத்தலாம். வாக்குவாதம் பண்ணாதிங்க. அநாவசிய செலவுகள் வேணாம். உடல் நலத்துல எச்சரிக்கையா இருங்க. பெற்றோர் உடல் நலம் தொடர்பா சில மருத்துவ செலவுகள் வரலாம்.



விருச்சிக ராசிக்காரரான சிவசங்கரியின் கவலைகளை மத்தவங்க ஓடி வந்து தீர்ப்பாங்களாம். புண்ணியத் தல யாத்திரைக்கும் வாய்ப்பு இருக்காம்!



**காதல் டைரிக்குறிப்பு**

**உன்னைக் காதலிப்பதைத் தவிர வேறெந்த வேலையையும் செய்ய விடாமல் சோம்பேறியாக்கும் இந்தக் காதலை கோபித்துக் கொள்ள மனம் வரவில்லை.**

# நான் உன்னை

அவசரமாக ஓடி வந்து இயந்திரத்தைப் பார்த்தான் அரவிந்த். இம்ப்ரஷன் சிலிண்டரின் நடுப்பகுதியில் இரண்டு மூன்று இடங்களில் டேமேஜ் ஆகியிருந்தது. வியர்த்துப் போனான் அரவிந்த்.

"எப்படி? எப்படி இது ஆச்சி?"

மெஷின்மேன் சுட்டிக்காட்டி, "இதோ பாருங்க, இந்தச் சக்கர யூனிட்ல ஒரு நட் லூசா இருந்திருக்கு. அது கழண்டு விழுந்து இப்படி சேதம் பண்ணிடுச்சி" என்றான்.

"நட் எப்படி கழண்டு விழும்?"

"சரியா டைட் பண்ணாம இருந்திருப்பாங்க. இல்லைன்னா டைட் செஞ்சப்போ மறை ஸ்லிப்பாகியிருக்கும். வேற நட் போடாம அலட்சியமா விட்ருக்காங்க."

"இப்ப இந்த சிலிண்டரை பேட்ச் வொர்க் ஏதாச்சும் பண்ணி ரிப்பேர் செய்ய முடியாதா கண்ணன்?"

"சரியா வராது சார். மூணு இடத்தில சேதமாகியிருக்கு. அதுவும் பெருசு பெருசா இருக்கு. பேட்ச் வொர்க் செஞ்சா இம்ப்ரஷன்ல ப்ராப்ளம் வரும். கஸ்டமர்ஸ் கம்ப்ளெய்ண்ட் செய்வாங்க."

"இப்ப என்ன செய்யணும்?"

"கம்ப்ளீட்டா மிஷினைப் பிரிச்சிட்டு வேற புது சிலிண்டர் போடணும் சார். கியாரண்டி பீரியட் முடியலைன்னா

கம்பெனிக்காரனே செலவை ஏத்துக்குவான் சார்.''

கொஞ்சம் தெம்பு வந்தது அரவிந்திற்கு.

''கியாரண்டி பிரியட் முடியலைங்க.''

அரவிந்த் ஃபைலைப் புரட்டி சரி பார்த்துக் கொண்டு, இயந்திர நிறுவனத்தின் சென்னை கிளைக்கு உடனே போன் செய்து தகவல் சொல்ல, அரை மணி நேரத்தில் கம்பெனி மெக்கானிக் ஒருவரும், சூபர்வைஸர் ஒருவரும் வந்தார்கள்.

"ஷிஃப்ட் பண்ணிருக்கிங்களா சார்?"

''ஆமாம். நான் ஒரு மாசம் முன்னாடிதான் வாங்கினேன்.''

''பிரிச்சி ரீ அசெம்ப்பிள் செஞ்சது யாரு?''

"அது பிரைவேட் ஆளுங்களை வெச்சி செஞ்சேன்."

''தப்பு செஞ்சிட்டீங்களே... அந்தப் பொறுப்பையும் எங்ககிட்டதான் நீங்க கொடுத்திருக்கணும். இப்ப சிலிண்டருக்கு ஆயிருக்கிற டேமேஜ் ரீ அசெம்ப்ளிங்

# 24

சொல்லலையே. ஃப்ரீயா சிலிண்டர் மாத்த முடியாது. சிலிண்டர் காஸ்ட்டும் சர்விஸ் சார்ஜும் ஏத்துக்கறதா இருந்தா ட்வெல் ஹவர்ஸ்ல மாத்தித் தர்றோம்...''

"எவ்வளவு வரும்?" என்றான் பலவீனமாக.

"ஒண்ணேகால் லட்சம் வந்துடும் சார்."

தளர்ந்து போய் நாற்காலியில் அமர்ந்தான் அரவிந்த்.

மகேந்திரனின் அலுவலகத்தில் பொறுமையில்லாமல் காத்திருந்தான் அரவிந்த். ஏழெட்டுப் பேர் இவனுக்கு முன்னால் காத்திருந்தார்கள்.

பியூன் ஒவ்வொரு முறை அறைக்குள் சென்று திரும்பும் போதெல்லாம் மகேந்திரன் தன்னை அழைப்பதாகச் சொல்வான் என்று எதிர்பார்த்து ஏமாந்து கொண்டிருந்தான்.

# சுவாசிக்கிறேன்



ப்ராப்ளத்தால ஏற்பட்டிருக்கு. இதை எங்க கம்பெனி செய்யாததால இந்த டேமேஜுக்கு நாங்க பொறுப்பு ஏற்க முடியாது சார்.''

"கியாரண்டி இருக்கே..."

"ரூல்சை நல்லாப் படிச்சிப் பாருங்க. ஸ்டரக்ச்சரல் டிஃபெக்ட் இல்லை இது. ஆபரேஷனல் டிஃபெக்ட்டுக்கு கம்பெனி பொறுப்பெடுத்துக்காது. ரீஅசெம்பின் செஞ்சதும் நாங்க இல்லை."

"இப்ப மெஷின் ஓடியாகணும் சார். அதுக்கு என்ன செய்யணும்?''

''சர்வீஸ் பண்ண மாட்டோம்னு நாங்க

உள்ளே செல்லும் ஒவ்வொரு ஆசாமியும் வெளியே வர பத்து நிமிடங்களுக்கு மேலாயின.

ஸ்டூலில் அமர்ந்திருந்த பியூனிடம் வந்தான் அரவிந்த்.

"ரொம்ப அர்ஜெண்ட்னு என் விசிட்டிங் கார்டுல எழுதியிருந்தேன். சார் அதைப் பார்த்தாரா? இன்னொரு தடவை எடுத்துச் சொல்லுங்களேன், ப்ளீஸ்..."

''யாருக்குத்தான் சார் அர்ஜெண்ட் இல்லை? உங்க கார்டைக் கொடுத்தாச்சு. அவர் எப்ப கூப்புடறாரோ அப்பத்தான் உள்ளே விட முடியும். நடுவில ஏதாச்சும் சொன்னா கடுப்படிப்பாரு சார். அப்படிப்

பட்டுக்கோட்டை பிரபாகர்

## பட்டுப்புடைவை பரிசுப் போட்டி – 8; முடிவு

**பா**க். அணு ஆயுதத் திட்டங்களின் தந்தை, டாக்டர் அப்துல் காதிர்கான் என்கிற சரியான விடையை எழுதி பட்டுப்புடைவை பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி வாசகர்:

எஸ். பாலகிருஷ்ணன்,
69, ஆரிய கௌடர் சாலை,
மேற்கு மாம்பலம்,
சென்னை– 600 033

போய் உக்காருங்க.''

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு கிட்டத் தட்ட காத்திருந்த எல்லோரும் போன பிறகு இவன் உள்ளே அனுமதிக்கப்பட்டான்.

''வா அரவிந்த். ஸாரிப்பா. காக்க வெச்சிட்டேனா? உக்காரு. சிகரெட்?'' என்று பற்ற வைத்துக் கொண்டான் மகேந்திரன்.

''வேணாம்'' என்று அமர்ந்தான் அரவிந்த்.

''காபி?''

''அதெல்லாம் வேணாம்.''

''அந்த அப்ளிகேஷன் ஆர்டர்தானே? இன்னிக்குக் காலைலகூட பேசினேன். மேட்டர் இன்னும் ஒரு வாரத்தில ஃபைனலைஸ் ஆயிடுமாம். அந்த ஆர்டர் கண்டிப்பா உனக்குத்தான். கவலையே வேணாம். அப்புறம்?''

''மகேந்திரா, திடீர்னு மெஷின்ல இம்ப்ரஷன் சிலிண்டர் டேமேஜாயிடுச்சி. புதுசு மாத்தியாகணும்.''

''ஒரே ஒரு மிஷின்தானே வைச்சிருக்கே நீ? அது பிரேக்டவுன் ஆகி நின்னுடுச்சின்னா கஷ்டமாச்சே! மாத்திடு! உடனே மாத்திடு.''

''ஒண்ணே கால் ஆகுது. பிரைவேட் ஆர்டர்ஸ் நாலஞ்சு வாங்கினேன். எல்லாம் புது கஸ்டமர்ஸ். நேரத்துக்கு டெலிவரி கொடுத்தாத்தான் தொடர்ந்து அவங்க ஆர்டர்ஸ் கிடைக்கும். ரெண்டு நாளா இந்தப் பணத்தைப் புரட்டறதுக்கு நிறைய முயற்சி செஞ்சிப் பார்த்துட்டுதான் உங்கிட்ட வந்திருக்கேன்.''

''தொழில் ஆரம்பிச்ச நீ நல்லா மிஷினா வாங்கியிருக்கக் கூடாது? எடுத்ததுமே இவ்வளவு பெரிய செலவு வைக்கிற ஓட்டை மிஷினை வாங்கிருக்கியே...''

''மெஷின் நல்ல மெஷின்தான். ரீ அசெம்ப்பிள் பண்றப்போ தப்பு நடந்து இப்படி ஆயிடுச்சி. அந்த அப்ளிகேஷன் ஆர்டர் அப்புறம் பார்த்துக்கலாம் மகேந்திரா. நான் கொடுத்த ஒரு ரூபாயை வாங்கிக் கொடுத்துடறியா?''

''எல்லாம் பேசி கன்ஃபர்ம் பண்ணிட்டு இப்ப இப்படிச் சொல்றியே...''

''மெஷினை சரி செய்யறதுதானே மகேந்திரா இப்ப முக்கியம்!''

''அடுத்த வாரம் உனக்கு ஆர்டர் கிடைச்சிடும்.''

''மெஷினைப் பிரிச்சிப் போட்டு வெச்சிருக்கேன். இப்ப எந்த ஆர்டரை வாங்கினாலும் எப்படி வொர்க் பண்ணித் தர முடியும்?''

''வேற எப்படியாச்சும் அட்ஜஸ்ட் பண்ண முடியாதா?''

''வாய்ப்பில்லை மகேந்திரா. உங்கிட்ட கொடுத்த ஒரு லட்சத்தையே சிரமப்பட்டு ஏற்பாடு செஞ்சிதான் கொடுத்தேன். இப்பக்கூட என் மோட்டார்பைக்கை முப்பத்திரெண்டு ரூபாய்க்கு விலை பேசிருக்கேன்.''

''அப்ப அந்த ஆர்டர் வேணாமா?''

''அது அப்புறம் பார்த்துக்கலாம்.''

''நீ நினைக்கிறப்ப ஆர்டர் கிடைக்காதுப்பா. உனக்கு முதன்முதலா உதவி செய்ய நினைச்சேன். இதிலயே இப்படி சொதப்பினா எப்படி?''

''என் நிலைமையைப் புரிஞ்சுக்க மாட்டேங்கறியே நீ!''

''என்னப்பா சவுண்டு பெரிசாகுது? இது என் ஆபீஸ்! கொஞ்சம் மெதுவாப் பேசு அரவிந்த்.''

''ரெண்டு மணி நேரம் என்னை வெய்ட் பண்ண வெச்சே. மெஷின் ரிப்பேராகிக் கிடக்குன்னு சொல்றேன். புரிஞ்சுக்காம பேசினா டென்ஷன் வராதா?''

''இப்ப என்னங்கறே?''

''அந்த ஆர்டர் வேணாம். நான் கொடுத்த ஒரு லட்சத்தைக் கொடுத்துடு.''

''நான் என்ன பாக்கெட்லியா வெச்சிருக்கேன்? அந்த அதிகாரிகிட்ட அன்னைக்கே ஒப்படைச்சிட்டேன்.''

''நான் கொடுத்தது உன்கிட்டதான். எனக்கு நீ கொடுத்துட்டு அவர்கிட்ட வாங்கிக்கோ மகேந்திரா.''

''புரியாம பேசறியே! இந்த மாதிரி விவகாரத்தில எவனாச்சும் வாங்கின காசைத் திருப்பிக் கொடுப்பானா? இப்ப அந்த ஆர்டரை வேற பிரஸ்சுக்கு பேசிவிட்டு புது ஆள்கிட்ட பணம் வாங்கி உன்கிட்ட கொடுக்க ஏற்பாடு பண்றேன். போதுமா?''

''எனக்கு இன்னிக்கு பணம் வேணும் மகேந்திரா.''

"நினைச்சதுமே முடியுமா?"

"மெஷின் நிக்கிதுப்பா."

"அதுக்கு நான் என்ன செய்ய முடியும்?"

"உன்கிட்ட இல்லாத பணமா? ஒரு லட்சம் பெரிய விஷயம் இல்லை உனக்கு. எனக்கு செட்டில் பண்ணிட்டு அப்புறம் நீ கரெக்ட் பண்ணிக்கோ. ரெண்டு நாளா ஸ்டாஃப் சும்மா இருக்காங்க. நேரத்துக்கு ஆர்டர்ஸ் டெலிவரி கொடுக்கலைன்னா பேரு போய்டும். என்மேல நம்பிக்கை போய்டும்."

"என்ன நீ சொன்னதையே சொல்லிட்டு இருக்கே! இத பாரு, ஒரு வாரம் டைம் கொடு. உன் பணத்தைக் கொடுத்துடறேன். இப்ப எனக்கு நிறைய வேலை இருக்கு. புறப்படறியா?" என்று ஒரு ஃபைலைப் புரட்டிக் கொண்டான் மகேந்திரன்.

ஆத்திரமாக அவனைப் பார்த்தான் அரவிந்த்.

"என்ன முறைக்கிறே? நீயாத்தான் வந்து கவர்ன்மெண்ட் ஆர்டர்ஸ் வாங்கிக் கொடுத்து உதவி செய்யின்னு கெஞ்சினே. சரின்னு இரக்கப்பட்டு இறங்கினதுக்கு இப்படி முறைக்கறியே."

"மகேந்திரா? நீ என் ஃப்ரெண்டா? ஏன் இப்படிப் பேசறே? என்னை மட்டும் நீ ஏமாத்த நினைச்சா... கண்டிப்பா உருப்பட மாட்டே!"

"போதும்! என் ஆபீசுக்கு வந்து என்னையே ஏமாத்தறவன்னு சொல்றியா? என் ஆத்திரத்தைக் கிளப்பாம முதல்ல வெளில போய்டு! அப்புறம் ஏதாச்சும் சொல்லிடுவேன்."

"என்ன? என்ன சொல்லுவே?"

"அடுத்த வாரம் உன் பணத்தைத் தர்றேன்னு இப்ப சொன்னேன். நீ எரிச்சலூட்டிக்கிட்டே இருந்தா உன்னால முடிஞ்சா வாங்கிக்கோன்னு சொல்லிடுவேன்.

"அடப்பாவி! அப்படிச் சொல்லுவியா நீ?"

"வெளில போறியா அரவிந்த்? பியூனைக் கூப்புடணுமா?"

கன்னத்தில் அறையப் பட்டதைப் போல உணர்ந்தான் அரவிந்த்.

அமைதியாக அறையை விட்டு வெளியே வந்தான்.

"அப்ப மகேந்திரன்கிட்ட கொடுத்த பணம் கண்டிப்பா வராதா?" என்றான் சந்துரு கவலையுடன்.

"எனக்கு நம்பிக்கை இல்லை" என்றான் அரவிந்த்.


# கோகுலம்

## ஜூலை '98 இதழில்...



- தீரசேனன் வென்ற திகில் மலை!
  – சித்திரத் தொடர்கதை
- கோலப் போட்டி அறிவிப்பு
- சினக்கரடிக்கு எத்தனை விரல்கள்?
- கிரஹபதி
  – புராணக்கதை
- கிரிக்கெட் பயிற்சி பெறுவது எப்படி?
- சீனப் பெருஞ்சுவர்

வண்ண லேபில்கள் இலவசம்!

விலை ரூ. 6/- மட்டுமே

47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

"என்னடா இப்படிச் சொல்றே?"

"அவன் பேச்சு மாறிடுச்சி சந்துரு."

"ஒரு லட்சம்டா!"

"ரொம்ப நம்பிக்கையாப் போனேன் சந்துரு."

"இப்பக்கூட ஏமாந்துட்டேன்னு உனக்கு சொல்ல வாய் வரலை பாரு!"

"இப்ப நிலமையை சமாளிக்கிறதுக்கு யோசனை சொல்லு சந்துரு."

"கண்டிப்பா அந்த சிலிண்டரை மாத்தியாகணுமா?"

"ஆமாம். வேற வழியில்லை."

"ஆரம்பிச்சி கொஞ்ச நாள்லயே இப்படி ஒரு பிரச்னையா?

"மகேந்திரன்கிட்ட அந்தப் பணத்தைக் கொடுக்காம இருந்திருந்தா பிரச்னையே இல்லாம இதை சமாளிச்சிருப்பேன்."

"என்கிட்ட ஒரு இருபத்தஞ்சாயிரம் வரைக்கும் இருக்கு அரவிந்த்."

"உன்னை நான் கேக்கலை."

"வேற எப்படி சமாளிப்பே?"

"சேட்டுகிட்ட மறுபடி போயி நிலைமைச் சொல்லி..."

"வேணாம் அரவிந்த். ஏற்கெனவே அரை மனசோடதான் இந்த ப்ராஜக்ட்டுக்கு ஃபைனான்ஸ் பண்ணிருக்கார். இன்னும் ஒரு தவணைகூடத் திருப்பிக் கட்டாத சூழ்நிலைல மறுபடி கடன் வேணும்னு போய் நின்னா அவருக்கு உன்மேல நம்பிக்கை போயிடும்டா."

"புரியுது. ஆனா வேற யோசனை தோணலை."

சந்துரு மௌனமாக யோசித்தான்.

"ஒரு யோசனை சொல்லட்டுமா?"

"என்ன?"

"நீ கௌரவம் பார்க்கக் கூடாது..."

"முதல்ல யோசனையைச் சொல்லு!"

"உன் சிஸ்டர் யாமினியைப் பார்த்து..."

"வேணாம்!"

"நான் சொல்லி முடிச்சிடறேன். அவங்களுக்கு உன்மேல அக்கறை இருக்கு. நீ நேர்ல போயி நிலைமையை எடுத்துச் சொன்னா கண்டிப்பா உதவி செய்வாங்க."

"ஆரம்பத்திலேயே அவகிட்ட போயிருப்பேனே சந்துரு. என் பலவீனத்தை அவகிட்ட காட்டிக்க விரும்பலை. ஊர் பூரா டண் டோரா அடிச்சிடுவா. என்னைக் கூனிக் குறுக வைச்சிடுவா, வேற யோசனை சொல்லு" என்ற அரவிந்தை வெறுப்புடன் பார்த்தான் சந்துரு.

(தொடரும்)

"இந்தப் பிசாசை தூக்கி எறியப் போறேன்... கடல்ல தூக்கி எறியப் போறேன்... வேற வழியே இல்லை..."

"அவசரப்படாதே சசி..."

"உனக்கு என்ன தெரியும் அதப் பத்தி... நீ ஒரு படிச்ச முட்டாள்... அது என்ன சொல்ல வந்ததைப் பார்க்கலை?... உனக்கு அதுகூட புரியலையா..."

ஹேமா ராஜ் எழுதும்
மினி தொடர் - மெகா த்ரில்

குதிரை சக்தி

கல்கி

ஜூலை 5 இதழில்
ஆரம்பம்!

## திருமண ஏற்பாடுகளை எங்களிடம் விட்டு விடுங்கள்!

சாப்பாடு, டிபன், காபி, சீர்வரிசைகள், பக்ஷண வகைகள், புஷ்பம், மேளம், இன்னிசை மற்றும் சகல விதமான திருமண ஏற்பாடுகளையும் காண்ட்ராக்ட் முறையில் சிக்கனமாகவும் சிறப்பாகவும் செய்து தர காத்திருக்கிறோம்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**JEEKAY CATERING CONTRACTORS**

G. கிட்டப்பா
(தஞ்சை ஆனந்தா லாட்ஜ்)
**Flat No.3 "RAM"**
33. வெங்கட்ராமன் தெரு,
தி. நகர், சென்னை – 17.
போன் 8240276

## மணமக்கள் தேவை கம்ப்யூட்டர் ஜாதகம்

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

**கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்**

| | | |
|---|---|---|
| ஆங்கிலம், தமிழ் | : | ரூ. 50/- |
| எதிர்கால கணிப்புடன் | : | ரூ. 150/- |
| கல்யாண பொருத்தம் | : | ரூ. 50/- |

**TO SOLVE ALL YOUR PROBLEMS CONSULT DIVINE ASTROLOGER THETIYUR V. MAHADEVAN WITH PRIOR APPOINTMENT.**

## ஸ்வயம்வராலயா

(GOVT REGD)

37, லேக்வியூ ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.
போன் : 4846427/4842756
7A, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ் வஸ், சென்னை - 4
போன் : 4984278
88/1, 16th Cross, 6th Main, Malleswaram,
Bangalore - 55 போன் : 3340146

**ALL POOJA ENTHRA/RAKSHA AVAILABLE RATES ON REQUEST**

## அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

### குணு கூந்தல் தைலம்

குணு உபயோகிப்பதன் மூலம்

- தலைமயிர் நீண்டு, கறுத்து, அடர்த்தியாய் வளரும்
- தலைமயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், இளம் பித்த நரை, தலை அரிப்பு, பொடுகு, சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும்.
- ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் ஏற்றது

இயற்கை தரும் அதி உன்னத மூலிகைகளால் சித்த மருத்துவ முறையில் தயாரிக்கப்பட்டது.

இப்பொழுது 100 ml, 200 ml Packing-களில் கிடைக்கின்றது.

வியாபார விசாரணைகளுக்கு கீழ்காணும் முகவரிக்கு தொடர்பு கொள்ளவும்

விபரங்களுக்கு



*Agasthiar Pharmaceuticals*
P.B.No. 588, Salem - 636 005.

இப்போது எல்லா மளிகை, மருந்து மற்றும் ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது

# “எங்கள் குழந்தைகள் ரகளை பண்ணவில்லையே!”

“என் பதினாறு வயதுப் பையன் பரம சாதுவாக இருக்கிறான். புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு நல்லவனாக இருக்கிறான்!” என்று வருத்தப்படுகிறார் ஜப்பானிய அப்பா ஒருவர். “அவன் ஆசிரியருடன் பேசிப் பார்த்து விட்டேன். இந்த வயதில் இப்படியா இருப் பார்கள் பசங்கள்? என்னமாய் ரகளை பண்ணு வார்கள்!” என்று பெருமூச்சு விடுகிறார் அப்பா ஒகூரா.

“இந்தக் காலத்துப் பசங்களே ரொம்ப அமைதி. இதில் கொஞ்சம் பெண்மையாக வேறு இருக்கிறார்கள். நாங்கள் எங்கள் காலத் தில் இப்படியா இருந்தோம்? கொட்ட மடித்து ரகளை பண்ணவில்லையா?” என்று அங்க லாய்க்கிறார் ஒகூரா.

ஜப்பானிய நகரங் களில் வாழும் பிள்ளைகள் எல்லாம் படு சமர்த்தாக, ரக ளையே பண்ணாமல் இருப்பது, இப் போது பெற்றோர்களுக்குக் கவலை தரும் விஷயமாகிவிட்டது. சின்னச் சின்ன ஜப பானிய நகரங்களில், பெற்றோர் கூடிப் பேசும் இடங்களில் எல்லாம் இப்போது இதுதான் டாபிக்! “இந்தக் காலத்துப் பையன்கள் எல்லாம் ஏன் இப்படிப் படிப்பு, படிப்பு என்று பிராணனை விடுகிறார்களோ, தெரியவில்லை ரொம்பவும் கட்டுப் பெட்டியாக அடங்கிப் போய்விட்டார்களே!” என்று வருத்தப்படு கிறார்கள் ஜப்பானிய அப்பாக்கள்.

நாகோ ஒகூரா ஒரு டிபார்ட்மெண்டல் ஸ்டோர் கிளார்க். “நீ எப்போது கடைசியாக விஷமம் செய்தாய்?” என்று கேட்டபோது “அது ரொம்ப வருஷம் ஆச்சு. என் அக்கா வுடன் ஷாப்பிங் போனபோது நடந்தது. 11 வருஷம் முன்னால! ஒரு ‘கேண்டி’யை (மிட்டாய்) எடுத்துட்டு வந்துட்டேன்; யாருக் கும் தெரியாம!”

ஷாப்-லிஃப்டிங் கூட ஒரு பெரிய திருட்டு என்கிற அளவுக்கு உருவாகவில்லை. பெற்றோர் கள் கண்டிப்பு இருப்பதால் பசங்கள் எதையும் ஸ்டோர்களில் இருந்து திருடுவதில்லை

காஷிவாகி ஒரு டிபார்ட்மெண்ட்டல் ஸ்டோர் முதலாளி. “என் கடையில் ஷாப்-லிஃப்டிங் செய்கிற பையனை முன்பு போல் நான் போலீசில் பிடித்துக் கொடுப்பதில்லை. அதுவே ரொம்ப அபூர்வம். அபூர்வமாக யாரும் செய்யும்போது அவனைக் கூப்பிட்டு, ‘மறுபடி வந்து உன்னிடம் பணம் இருக்கும்போது வாங்கிக் கொண்டு போ!’ என்று சொல்லி விடுவேன்” என்கிறார் காஷிவாகி.

பரபரப்பே இல்லாத நகரம் என்றால் ஒமியா என்கிற ஊரைத்தான் சொல்ல வேண் டும். வீட்டுக் கதவைக் கூடப் பூட்டிக் கொண்டு போவதில்லையாம் பெற்றோர்! இந்த ஊர் போலீஸ்காரர் மொடானி,



''இங்கே ஒரு க்ரைம் நடந்து வருஷக் கணக்காச்சு!" என்று அலுத்துக் கொள்கிறார். ஒரு கிழவரை ஒயின் ஷாப் எதிரே ஒரு கார் அடித்துப் போட்டுவிட்டுப் போனது ஒன்று தான் அவருக்குத் தெரிந்து நடந்த ஒரே ஒரு குற்றம்!

ஏன் இந்த ஊரில் எல்லாரும் இப்படி ரொம்ப 'நல்ல பிள்ளை'களாக இருக்கிறார்கள் என்று கேட்டதற்கு, ஜெனிஜி பஞ்ச் என்ற அமெரிக்கர் சொன்னார். (இவர் ஓமியா ஜூனியர் ஸ்கூலில் ஆங்கில ஆசிரியர்): "அமெரிக்காவில் கெட்ட பையனாக இருந்தால் ரெஸ்பெக்ட் கிடைக்கும். ஜப்பானில் அப்படி அல்ல. உங்கள் தலைமுடிக்குச் சாயம் பூசிக் கொண்டால் அது சாதாரண விஷயம். ஆனால், பள்ளிக்கூடத்தை நொறுக்கிச் சேதப்படுத்துவதோ, மக்களை இம்சிப்பதோ சாதாரணமே அல்ல! இதனாலும் இங்குள்ள குழந்தைகள் இப்படி சாதுவாக இருக்கலாம்!"

"ரகளை பண்ணப் பசங்களுக்கு எங்கே நேரம் இருக்கிறது? ஸ்கூல் விட்டால் ஹோம் ஒர்க். விடுமுறை மாதங்களிலும் கூட ஹோம் ஒர்க்கைச் சுமத்தி விடுகிறார்கள். ரகளை பண்ண எங்கே நேரம் இருக்கு?" என்கிறார்கள் கவலையோடு பல பெற்றோர்கள்!

— சாருகேசி

ஆதாரம்: நியூயார்க் டைம்ஸ்



# காதலிக்கத்

"இதோ பாரு ராகவா... நான் தலை மயிரைப் பிய்ச்சுக்கிட்டு இருக்கேன். கணக்கு டாலி ஆகலையேன்னு... நீ ஏன் என்கிட்டே வந்து தலையைச் சொறியறே...? ரெண்டுக்கும் எவ்வளவு வித்தியாசம்னு உனக்குத் தெரியுமா...?"

"சார்.. உங்ககிட்ட ஒரு முக்கியமான விஷயம் பேசலாம்னுதான்... அது சரி... ஏதோ டாலி ஆகலைன்னு சொன்னீங்களே... என்னது...?"

"ரெண்டே முக்கால் ரூபாய்..."

"இப்படி ஒரு நிமிஷம்..." என்றவன், என்னிடமிருந்த அந்த லெட்ஜர் புத்தகத்தை வாங்கினான்... முன்பக்கம் பின்பக்கம் இரண்டு முறை புரட்டினான்...

"சார்... இதோ பாருங்க, எடுத்து எழுதறப்போ ரெண்டே முக்கால் ரூபாய் குறைச்சு எழுதியிருக்கீங்க..."

நான் பார்த்தேன், சரி செய்தேன், கணக்கு டாலி ஆகி விட்டது...!

அப்பாடாவென்று இருந்தது... லேட்டாகி வீட்டுக்குப் போனாலும், முகம் சுளிக்காமல் சூடா காப்பி கொடுத்து மனைவி உபசரித்தால் எப்படியிருக்கும்? அவ்வளவு சந்தோஷம் மனசில்...

இப்போது நான் ராகவனை ஆதங்கத்துடன் பார்த்தேன்... 'சொல்லு ராகவா... என்ன விஷயம்...?'

"சார்.. அது வந்து...?"

"தயக்கம் வேணாம்... எதுவானாலும் சொல்... என்னால முடிஞ்சதைக் கண்டிப்பா உனக்குச் செய்யறேன்..."

"இது போதும் சார்..." என்றவன், "உங்களுக்கு அகிலாவைத் தெரியுமா?" என்றான்.

"க்வாலிடி கண்ட்ரோல் பிரிவில் இருக்கும் அந்த அகிலாவையா...?"

"ஆமாம் சார்..."

"சரி.. அவளுக்கென்ன...?"

"அவளுக்கு ஒன்றுமில்லை சார்... எனக்கு வந்து..." தயங்கினான் ராகவன்.

"ஓ... நீ அவளை லவ் பண்ணறயா..." பட்டென்று நான் கேட்க, சட்டென்று என் வாயைப் பொத்தினான் ராகவன்!

"என்ன சார்... இப்படிப் போட்டு உடைக்கிறீங்க..." நான் அவளை விரும்பறேன் என்றாலும், நீங்க இந்த விஷயத்துல ஓர் உதவி செய்யணும்...

"அந்தப் பொண்ணுகிட்டே உனக்காக பேசச் சொல்றியா...?"

"ச்சே... ச்சே... அப்படியெல்லாம் உங்களைப் போய் செய்யச் சொல்வேனா...?"

"பின்னே..."

"சார்... நான் இந்தக் காதலைப் பற்றி நிறையவே யோசித்துப் பார்த்துட்டேன். இதில் வெற்றியை விட தோல்விகள்தான் அதிகம்..."

"சர்ட்டன்லீ... சினிமாவில் கூட காதல் தோல்வி படங்கள்தான் பாப்புலராயிருக்கு... அந்தக் காலத்து தேவதாஸ் முதல் இந்தக் காலத்து டைட்டானிக் வரை..."

"இந்தக் காதல் தோல்விகளுக்கு மதமோ, ஜாதியோ, அந்தஸ்தோ காரணம்னு பலர் நெனைப்பாங்க.. ஆனால் நன்கு யோசித்துப் பார்த்தால் ஓர் உண்மை புரியவரும். காதலிக்கறவங்களின் பெற்றோர்கள்தான் பொதுவா காதல் தோல்விகளுக்கு மூல காரணம் என்பது தெரியவரும்."

"அடேயப்பா... உன் காதல் தோல்வி குறித்த ரிசர்ச்சுக்கு உனக்கு டாக்டர் பட்டம் கூட கொடுக்கலாம் போலிருக்கே..."

"அதனால் எனக்கு அப்படியொரு நிலை ஏற்படக் கூடாது என்பதில் நான் எச்சரிக்கையா இருக்க விரும்பறேன்... எனக்கு அம்மா மட்டும்தான்: அவங்க என் விருப்பத்துக்கு மாறா எதுவும் சொல்ல மாட்டாங்க. இதே மாதிரி அகிலாவின் பெற்றோர்களும் இருப்பாங்களான்னு உறுதி பண்ணிக்கிட்ட பிறகுதான் எனது காதலே ஆரம்பமாகும்..."

"சரி..."

"இதுக்கு உங்க ஒத்தாசை எனக்கு வேணும்..."

"எப்படி?"

"என்னையே திருப்பிக் கேட்டா எப்படி சார்... எப்படியாவது அகிலாவின் அப்பா எப்படிப்பட்டவர்ன்னு தெரிஞ்சுக்கிட்டு வாங்க... ப்ளீஸ்..."

"ரெண்டே முக்

க. ஒப்பிலிஅப்பன்

# தயாராக...



கால் ரூபாய் டாலி செய்ததற்கு இப்படியொரு நன்றிக்கடனை நான் செய்யணுமா...?'' மனத்திற்குள் நினைத்துக் கொண்டேன்.''

"என்ன சார் யோசிக்கிறீங்க..."

"ஓ... அதுவா... ஒண்ணுமில்லே... எனக்குக் கொஞ்சம் டயம் கொடு..."

"ரொம்ப தாங்க்ஸ் சார்..."

இது நடந்து ஒரு வாரம் ஓடி விட்டது. அடிக்கடி என்னிடம் வந்து ஏதாவது தெரிஞ்சுதா சார் என்று வாரா வாரம் கேட்க ஆரம்பித்து விட்டான். நானும் வாய்தா வாங்கிக் கொண்டே வந்தேன்.

கடைசியில் ஒருவழியாக அவன் சொன்ன வேலையைக் கச்சிதமாக முடித்து விட்டேன்.

''ராகவா... முதல்ல இப்படி உன் கையைக் கொடு. உன் காதலை நீ தொடரலாம்..." என்றேன் நான்.

"சார்... நிஜமாகவா? எப்படி சார் சொல்றீங்க...?''

''நான் இரண்டு நாளுக்கு முன் ஓட்டலில் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.

"பரிச்சயமான குரல்...

"திரும்பிப் பார்த்தேன்... அகிலா அவள் அப்பாவுடன்...!

''அவர் இட்லி சாப்பிடலாம் என்

''நாகர் மேலே எதுக்கு கோபப்படறீங்க?''



''டாக்டர்னா நூறு பவுன் போடணும், போலிடாக்டர்னா ஐம்பது பவுன் போட்டா போதும் எப்படி வசதின்னு கேட்கறாரே!''

– அரவிந்த் பசுபதி

றார். அகிலா பூரி என்றாள். 'சரி உன்னிஷ்டம்...' என்று சொல்லி விட்டார். அது மட்டுமா...? அவர்களை தொடர்ந்து பாலோ பண்ணினேன். ஜவுளிக் கடையொன்றில் நுழைந்தார்கள். அவள் அப்பா எதை யெதையோ எடுக்கச் சொன்னார். ஆனால் செலெக்ஷன் அகிலாவின் விருப்பப்படி தான்...!''

''போங்க சார்... பூரியும் புடைவையும் வைத்து அகிலாவின் அப்பாவை நீங்க எடை போடறதை என்னால ஒத்துக்க முடியலே...''

''நீ இப்படிச் சொல்வேன்னு எனக்குத் தெரியும். அதனால ஒரு டி.வி. நிருபர் மாதிரி அவர் வீட்டிற்கே சென்றேன். அப்ப அகிலா வீட்டில் இல்லை. சுதந்திர பொன் விழா ஆண்டில் பெண்களின் நிலை பற்றி இரண்டொரு கேள்விகேட்பதாகச் சொன்னேன். பெண் சிசுக் கொலையில் ஆரம்பித்து, பெண் கல்வி என்று கேட்டுக் கொண்டே வந்த நான், 'ஏன் சார்... உங்க மகளை படிக்க வச்சு அவ விருப்பப்படியே வேலைக்கும் அனுப்பி இருக்கறதா சொன்னீங்க. அவ யாரையாவது விரும்பினா அவளோட விருப்பத்தை நிறைவேற்றி வைப்பீங்களான்னு...?' ஒரு போடு போட்டேன்...''

''நிச்சயமா... அவ ஆசைக்குக் குறுக்கே நிற்க மாட்டேன்னு சொல்லிட்டார்... போதுமா?''

''ரொம்ப தேங்க்ஸ் சார்... இவ்வளவு போதும்... என் காதலுக்கு கிரீன் சிக்னல் விழுந்தாச்சு.''

''குட் லக் ராகவன்...''

இதற்குப் பிறகு ஒரு வாரத்திற்கெல்லாம் ஒரு இன்ஸ்பெக்ஷன் வேலையாக நான் டில்லிக்குப் போய் விட்டேன். மூன்று மாதங்கள் கழித்துத்தான் கம்பெனிக்கே திரும்பி வந்தேன்... எத்தனையோ வேலைகளுக்கு நடுவில் நான் ராகவன் விஷயத்தை மறந்தே போய் விட்டேன்.

தலைகுனிந்தவாறு என் சீட்டை கடந்து ராகவன் போனதை தற்செயலாக பார்த்தவுடன்தான், அவனது காதல் வாழ்க்கைக்கு நான் செய்த கான்ட்ரிபூஷன் ஞாபகத்திற்கு வந்தது...!

''என்னப்பா... கவனிப்பே கிடையாதா? உன் காதல் கிறக்கத்தில் என்னை மறந்துதான் போய் விட்டாயா...?'' நான் கிண்டலடித்தேன்.

''...............................''

''என்னப்பா பேச்சையே காணோம்... உன் காதல் கணக்கு டாலி ஆச்சா...?''

''நான் இதுக்கு என்ன சார் பதில் சொல்றது...? பொதுவா காதலுக்குப் பெற்றோர்கள்தான் குறுக்கே நிற்பார்கள் என்று தான் நான் அகிலாவின் அப்பாவைப் பற்றி விசாரிக்கச் சொன்னேன்...''

''ஏன்... இப்ப என்ன ஆச்சு...?''

''அகிலாவிடம் மெல்லப் பழகி ஒருநாள் அவளிடம் என் விருப்பத்தைச் சொன்னேன். அவளுக்கு இந்தக் காதல் விவகாரமெல்லாம் கட்டோடு பிடிக்காதாம். அவள் அப்பா பார்க்கும் வரனைத்தான் அவள் கல்யாணம் செய்து கொள்வாளாம்... அவள் அப்பாவும் ஒரு வரன் பார்த்தாராம். இவளும் ஓகே சொல்லி விட்டாளாம்...''

ராகவன் சொன்னதை என்னால் நம்ப முடியவில்லை! எதையுமே தன் அப்பாவிடம் சுதந்திரமாகக் கேட்டு வாங்கிக் கொள்ளும் அகிலாவா இப்படிப் பேசினாள்...? ஆச்சரியமாக இருக்கே...!''

மிகவும் கட்டுப்பாடான சூழ்நிலையில், அந்த கட்டை உடைத்து வெளியேறத் துடிக்கும் மனம், மிகவும் சுதந்திரமான சூழ்நிலையில் ஒரு கட்டிற்குள் வாழவே விரும்புகிறது!

காதல் தோல்விக்கு எப்படியெல்லாம் காரணங்கள் அமைகிறது பார்த்தீர்களா...?

அட... இந்தக் காதல் ஆராய்ச்சியில் நானும் எப்படி...? ●



# தெரிந்திருக்க நியாயமில்லை

● 1818-ம் ஆண்டு வரை, இரண்டு கால்களுக்குமான ஷூக்கள் ஒரே மாதிரியாகத்தான் தயாரிக்கப்பட்டு வந்தன. அதன் பின்தான் வலது காலுக்கும், இடதுகாலுக்கும் சௌகரியமாய், வித்தியாசமான ஷூக்கள் உருவாக்கப்பட்டன.

● குடைக்கு ஆங்கிலத்தில் Umbrella என்று எப்படிப் பெயர் வந்தது தெரியுமா? Umbra என்ற லத்தீன் வார்த்தைக்கு நிழல் என்று அர்த்தம். ஆரம்பத்தில், வெயிலின் தகிப்பிலிருந்து பாதுகாக்கவே குடைகளைப் பயன்படுத்தினார்கள்; மழைக்கு அல்ல என்பது பலரும் அறியாத சேதி.

● பத்திரிகைகளில் இன்று குறுக்கெழுத்து விளையாட்டு வெகு பிரபலம். முதன் முதலில் குறுக்கெழுத்து வெளியிட்ட செய்தித் தாள் தி டெய்லி எக்ஸ்பிரஸ். தேதி : 1924 நவம்பர் இரண்டு.

● 1843-ம் வருடம் சர் ஹென்றிகோல் என்பவருக்கு கிறிஸ்துமஸ் சமயம் ஒரு ஆசை தோன்றியது. ஓர் ஓவியரிடம் சொல்லி, ஒரு பெரிய குடும்பம், சாப்பாட்டு மேஜையில் அமர்ந்து சந்தோஷமாய் விருந்து சாப்பிடுவது போல, ஒரு ஓவியம் வரையச் சொல்லி, அதில் தனது நண்பரின் குடும்பத்துக்குத் தனது கிறிஸ்துமஸ் வாழ்த்தினைத் தெரிவித்து, அந்த ஓவியத்தை அனுப்பி வைத்தார். இதுவே உலகின் முதல் கிறிஸ்துமஸ் வாழ்த்து.

● மாவீரன் நெப்போலியனுக்கும், ஜோசபைனுக்கும் திருமணம் முடிந்தது. தனிமையில் அமர்ந்து இருவரும் பேசிக் கொண்டிருந்த சமயம், தன் மனைவியை முத்தமிட முயன்றார் நெப்போலியன். அப்போது சற்றும் எதிர்பாராத ஒரு சம்பவம் நடந்தது. ஆம்! தன் எஜமானியை யாரோ ஒரு புது ஆசாமி தொல்லைப்படுத்துகிறார் என்று நினைத்து, ஜோசபினின் செல்ல நாய், நெப்போலியனைக் கடித்து விட்டது.

● சிகாகோ நகரில் உள்ள O'Hare விமான நிலையம்தான் உலகிலேயே மிக பிசியான விமான நிலையம். அங்கே 52.2 விநாடிக்கு ஒரு விமானம் கீழிறங்கிக் கொண்டிருக்கும் அல்லது வானில் எழும்பிக் கொண்டிருக்கும். இரவு, பகல் இல்லாமல் வருஷம் முழுக்க பிஸி.

● மெக்சிகோ நாட்டு ஜெயிலில் சிறை வைக்கப்பட்டிருந்த ஐம்பது கைதிகள், சிறையிலிருந்து சுரங்கம் வெட்டி தப்பிக்கத் திட்டமிட்டார்கள். தினமும் சிறிது சிறிதாக ரகசியமாய்ச் சுரங்கம் வெட்டினார்கள். கடைசியாக தப்பிச் செல்ல முயன்று, சுரங்கத்தின் மறு முனையில், பெயர்த்துக் கொண்டு வெளியேறிய போது ஷாக். அது அவர்களை விசாரித்து, தண்டனையளித்த கோர்ட் ஹால்.

● ஒரு பிரெஞ்சுக்காரர், தனது வசதியான மாமாவைக் கொன்றுவிட்டு, அவர் எழுதுவது போல, தானே அவரது சொத்துக்களுக்கு ஒரே வாரிசு என்று ஒரு போலி உயிலைத் தயாரித்து விட்டார். ஆனால், வெகு சீக்கிரமே போலீசில் மாட்டிக் கொண்டு விட்டார். எப்படி? "அந்தப் பணக்காரருக்கு எழுதப் படிக்கத் தெரியாது; கடந்த ஐம்பது வருடங்களாக, அவருக்கு வரும் கடிதங்களைப் படித்துச் சொன்னதும், அவர் சொல்லச் சொல்ல கடிதங்களை எழுதினதும் நான்தான் என்று அவர் வீட்டு வேலைக்காரர் போலீசில் சொல்லி விட்டார்!

● உலகில் மிக அதிகமாய்ப் பணம் புழங்கும் குற்றம் எது தெரியுமா? போதை மருந்துக் கடத்தல். அடுத்தது கலைப் பொருட்களைத் திருடுதல். ●

நன்றி : Megan Fun and Fact Book

தொகுப்பு : மானஸா

# புகழ்பெற்ற தேவாலயம்

இந்தியாவின் புகழ்பெற்ற ஒரு கிறிஸ்தவ தேவாலயம் இடைக்காட்டூர் என்ற கிராமத்தில் அமைந்துள்ளது. இது மதுரையிலிருந்து இராமேஸ்வரம் செல்லும் சாலையில் 36வது கி.மீட்டரில் உள்ளது. இங்கு ஏகபிரான் தமது இதயத்தைச் சுட்டிக் காட்டும் அற்புத வடிவம் உள்ளது. எனவே இதனை திரு இதய தேவாலயம் எனக் குறிப்பிடுகிறார்கள்.

"பிரான்ஸ் நாட்டின் ரீம்ஸ் நகரிலுள்ள தேவாலயத்தைப் போன்று சிறந்த கலையம்சத்துடன் இதனை அருட்திரு செல்ஸ், சே.சே. அடிகளார் கி.பி. 1894ல் கட்டி முடித்தார். இரும்பு, சிமெண்ட், மரம் இல்லாமல் இவ்வாலயம் கட்டப்பட்டது இதன் சிறப்பம்சமாகும்.

வெளிச் சுவரில் பிரான்ஸ் நாட்டிலிருந்து கொண்டு வந்து பதிக்கப்பட்ட வண்ண வண்ணக் கண்ணாடிகளில் இயேசுவின்



வாழ்வும். அவருடன் தொடர்புடைய காட்சிகளும் அமைந்துள்ளன.

இப்பேராலயத்தில் உள்ளது போன்ற நடுப்பீடம் இந்தியாவில் வேறு எந்த ஆலயத்திலும் இல்லையென்று மக்கள் பெருமையோடு கூறுகின்றனர். தங்க ரேக்கு வேலைப்பாட்டுடன் ஜொலிக்கும்படி அமைந்துள்ளது.

பேராலயத் திருப்பணி நடைபெற்று வரும் இச்சமயத்தில் மக்கள் திரள்திரளாய் வந்து இப்பேராலயத்தைச் தரிசித்து மகிழ்வோடு செல்கின்றனர். ●

— இளங்கவின்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)



# பிரார்த்தனைப் பூக்கள்

(இந்த இலவச இணைப்பைக் கல்கியுடன் இணைந்து வழங்குபவர்கள் : டாக்டர் P. பாலசுப்பிரமணியம் B.Sc.,(சீனியர் டிரஸ்டி, கந்தக்கோட்டம்), வானதி பதிப்பகம், கங்கை புத்தக நிலையம்.)

பிரார்த்தனை ஓர் அந்தரங்கமான, அழகிய விஷயம். நம் குறைகளை, நம் கோரிக்கைகளை, மகிழ்ச்சியை, துக்கத்தை, கோபத்தை – அவற்றின் வீரியம் குறையாமல் ஆண்டவனிடமின்றி வேறு யாரிடம் கொட்டி, நிம்மதி அடைய இயலும்?

கேளுங்கள், கொடுக்கப்படும் என்றார் இயேசுநாதர்.

**'More things are wrought by prayer, than this world dreams of'** என்றார் ஆங்கிலக் கவிஞர் டென்னிஸன்.

வாழ்வில் இன்பமும் துன்பமுமாக எத்தனையோ தருணங்கள். இன்பம் கூடவும் துன்பம் குறையவும் பிரார்த்தனை போல அருமருந்து வேறில்லை.

இங்கே தொகுக்கப்பட்டுள்ள பிரார்த்தனைப் பூக்கள் வாசகர்களின் வாழ்வில் வளம் சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

வாருங்கள், பிரார்த்திப்போம்!

## காலை எழுந்ததும் :

இறைவா! உலகம் முழுதும் மகிழ்ச்சியில் திளைத்து இருக்கட்டும். உயிரினங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு துளியேனும் சுதந்தரக் காற்று சுவாசிக்கக் கிடைக்கட்டும். உண்மைகள் எல்லாம் பீடம் ஏறட்டும். ஆள்பவர்கள் நன்னெறி பிறழாதவர்களாக விளங்கட்டும். மேகங்கள் மழையை ஒளித்து வைக்காமலிருக்கட்டும். புண்ணியம் செய்த புனிதர்கள் யாவரும் பயமின்றி, துக்கமின்றி வாழட்டும்.

— சுக்ல யஜுர்வேதம்.

## தினசரி உறங்கப் போகுமுன் :

அம்மா! நான் நலன்கள் செய்தேனில்லை. தியானம், யோகம், ஜபம் எது ஒன்றும்





புரிந்தேனில்லை. நித்தியம் உன்னை வழிபடுவதிலும் சுணக்கம் ஏற்பட்டு விடுகிறது. என் குறைகள் அறிந்து, திருத்திக் கொள்ளும் வல்லமையும் எனக்கில்லை. உலகைக் காப்பவளே! என் குறைகளை ஒரு தாய் போல் பொறுத்து, மன்னித்து, நாளை முதலேனும் நான் நெறி பிசகாது வாழ அருள்புரிவாய்!

**– பவன்யாஷ்டக ஸ்தோத்திரம்.**

## கெட்ட கனவுகளால் அதிர்ந்து எழும் போது :

இறைவா! மாயையிலிருந்து என்னை நிஜத்துக்கு அழைத்துப் போ. சூழ்ந்திருக்கும் இருளிலிருந்து, ஒளி அடர்ந்த பிரதேசத்துக்கு இட்டுச் செல்! இறப்பிலிருந்து பிறவாமைக்குப் பயணப்படச் செய்!

**– ரிக்வேதம்.**

## மாணவர்கள், தினமும் படிக்கத் தொடங்குமுன் சொல்ல வேண்டியது :

அம்மா! நினைவாற்றலும் புத்திசாலித்தனமும் எல்லாவற்றுக்கும் மேல் வெற்றியும் வேண்டி உன் முன் நிற்கிறேன். சுகம் - சுதந்தரம் இவற்றின் மூலாதாரம் அதுதான். அத்தகைய வெற்றியை அடைய என் உற்ற துணையாக நீ இரு!

– மஹாலக்ஷ்மி அஷ்டகம்.



## துன்பம் மிகுந்து துக்கம் பீறிடும் போது :

அன்றே என்றன் ஆவியும்

உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னைஆட்
கொண்டபோதே கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ
எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே!



— மாணிக்க வாசகர்.

## சிறியவர்கள், ஆசி வேண்டி வணங்கும் போது :

எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே!

— தாயுமானவர்.

## கோபத்தை வெல்ல :

வன்பெரு நெருப்பினை புன்புழுப் பற்றுமோ?

வானை ஒரு மான் தாவுமோ?
வலியுள்ள புலியை ஓர் எலி சீறுமோ?
பெரிய

மலையை ஒரு ஈச் சிறகினால்
துன்புற அசைக்குமோ? வச்சிரத் தூணொரு
துரும்பினால் துண்டம் ஆமோ?
சூரியனை இருள்வந்து சூழுமோ காற்றின்
மழை

தோயுமோ? இல்லை அதுபோல்;
அன்புடைய நின்னடியார் பொன்னடியை
உன்னுமவர்

அடிமலர் முடிக்கணிந்தோர்க்(கு)
அவலமுறுமோ? காமம், வெகுளியுறுமோ
மனத்(து)

அற்பமும் விகற்பம் உறுமோ?
தன்புகழ்ச் சென்னையில் கந்தகோட்டத்துள்
வளர்

தலமோங்கு கந்தவேளே!





தண்முகத் துய்யமணி உன்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே!

— வள்ளலார்

## இன்பம் கூட :

செய்க தவம், செய்க தவம், நெஞ்சே!
தவம்செய்தால்
எய்த விரும்பியதை எய்தலாம் – வையகத்தில்
அன்பிற் சிறந்த தவமில்லை; அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு.

— பாரதியார்.

## புத்துணர்ச்சி பெற:

உயிரே, நினது பெருமை யாருக்குத் தெரியும்?
நீ கண்கண்ட தெய்வம். எல்லா விதிகளும்
நின்னால் அமைவன. எல்லா விதிகளும் நின்னால்

அழிவன. உயிரே, நீ காற்று. நீதீ. நீ நிலம் – நீ வானம். நீ, நீர், தோன்றும் பொருள்களின் தோற்ற நெறி நீ! மாறுவனவற்றைத் தோற்றுவிப்பது நின் தொழில். பறக்கின்ற பூச்சி, கொல்லுகின்ற புலி, ஊர்கின்ற புழு. இந்தப் பூமியிலுள்ள எண்ணற்ற உயிர்கள், எண்ணற்ற உலகங்களிலுள்ள எண்ணேயில்லாத உயிர்த் தொகைகள் – இவையெல்லாமே நினது விளக்கம். காலையில் எழுந்ததும் உயிர்களையெல்லாம் போற்றுவோம். நமஸ்தே வாயோ : த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி.

– பாரதியார்.



## செல்வம் சேர :

ஐங்கரனை ஒத்தமனம் ஐம்புலம் அகற்றிவளர்
அந்திபகல் அற்றநினை வருள்வாயே
அம்புவிதனக் குள்வளர் செந்தமிழ் வழுத்தி



உனை

அன்பொடு துதிக்கமனம் அருள்வாயே.
தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்குவழி அருள்வாயே!
தண்டிகை கனப்பவுசு எண்டிசை மதிக்கவளர்
சம்ப்ரம விதத்துடனே அருள்வாயே
மங்கையர் சுகத்தைவெகு இங்கிதமெனுற்றமனம்
உன்றனை நினைத்தமைய அருள்வாயே
மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரட்சைபுரி
வந்தணைய புத்தியினை அருள்வாயே
கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையில்
அப்பரருள்
கொண்டு உடலுற்ற பொருள் அருள்வாயே
குஞ்சரமுகற் கிளைய கந்தனென
வெற்றிபெறு
கொங்கண கிரிக்குள்வளர் பெருமானே!

— **அருணகிரிநாதர்**

## திருமணம் ஆக :

**ம**த்தளம் கொட்ட,
வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த
பந்தற்கீழ்

மைத்துனன் நம்பி
மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்....
– ஆண்டாள்



## குழந்தைச் செல்வம் பெற :

**செ**கமாயை உற்றென் அகவாழ்வில்
வைத்த

திருமாது கெர்ப்பம் உடலூறித்
தெசமாத முற்றி வடிவாய் நிலத்தில்
திரமாய் அளித்த பொருளாகி



மகவாவின் உச்சி விழிஆன னத்தில்
மலைநேர் புயத்தில் உறவாடி
மடிமீ தடுத்து விளையாடி நித்தம்
மணிவாயின் முத்தி தரவேணும்
முகமாயம் இட்ட குறமாதினுக்கு
முலைமேல் அணைக்க வருநீதா
முதுமா மறைக்குள் ஒருமா பொருட்குள்
மொழியே உரைத்த குருநாதா
தகையா தெனக்குன் அடிகாண வைத்த
தனிஏரகத்தின் முருகோனே.
தருகாவிரிக்கு வட பாரிசத்தில்
சமர் வேலெடுத்த பெருமாளே!

*(பொருள்: இறைவா! வேதத்தின் சிகரமென விளங்கும் பிரணவத்தின் அரிய பொருளை விளக்கிய சிவகுருநாதா! உலக மாயை உற்று இல்லற வாழ்வில் மனைவியொடு மகிழும் எனக்குத் தாங்களே குழந்தையாக வரவேண்டும். உச்சி முகந்து களித்தும் கண்ணில் ஒற்றி மகிழ்ந்தும் முகத்தில் முகம் வைத்து விளையாடியும் மார்புறத் தழுவியும் மடி மீது*

*சீராட்டியும் நான் மகிழ அருள் புரிவீர். உம் திருவாயால் முத்தமளிக்கக் குழந்தையாய் வந்து குலாவ இறைஞ்சுகிறேன் இறைவா!)*

— அருணகிரிநாதர்

## உடல், நோயால் அவதியுறும்போது :

**ம**னமே,
சும்மா தனுவருமோ சும்மா பிணி
வருமோ
சும்மா வருமோ சுக துக்கம்–
நம்மால் முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்
செய் விப்பதெனில்
எய்தவனை நாடி இரு.

— சிவபோக சாரம்





## கடன் சுமை அழுத்தும்போது :

அழைக்கின்ற அடி நாயேன் நாய்
கூழை வாலால்
குழைக்கின்றது போலஎன் உள்ளம் குழையும்
மழைக்கு அன்று குன்றம் எடுத்து
ஆ நிரைகாத்தாய்
பிழைக்கின்றது அருள் என்று பேதுறுவனே!

– ஆழ்வார் பாசுரம்

*(பொருள் : மழை தடுக்க, மலையை எடுத்துப் பசுக்களைக் காத்தவனே, ஒரு நாய் தன் கூழை வாலால் தன் ஆசையைக் காட்டுவது போல் நாயேன் நான் உன்னிடம் குழைந்து நிற்கிறேன். உன் அருளால் என் துயர் தீர்க்க வா.)*

## பரஸ்திரீகளால் மனசஞ்சலம் உண்டாகும் போது :

**நா**ரீ ஸ்தனபர நாபீ தேசம்
த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம்
ஏதன் மாம்ஸ வஸாதி விகாரம்
மனஸி விசிந்தய வாரம் வாரம்.
(ஆதிசங்கரர் – பஜகோவிந்தம்)

*(பொருள் : பெண்ணின் அங்க அவயங்களைக் கண்டு நெஞ்சம் தடுமாறுமானால், அந்த அழகுக்குப் பின் உள்ளதெல்லாம் வெறும் இறைச்சியும் திணமும் தான் என்கிற பேருண்மையை உணரச் செய்வாய்.)*





## புதிய தொழில் தொடங்கும்போது :

**எ**ன் இறைவா! உமது கருணையால் எனக்குச் சந்தர்ப்பங்களையும் தைரியத்தையும் விவேகத்தையும் கொடுத்து, எனது முயற்சி, நன்முயற்சியாகக் கருணை புரிவீராக!

— வாரியார்

## தினசரி பணிகள் தொடங்கும் முன்பு :

**எ**ல்லா உயிர்களிடத்திலும் உம்மை எனக்குக் காட்டி, எவ்வுயிர்க்கும் என் மனத்தினாலும் வாக்கினாலும் காயத்தினாலும் எவ்விதத் தீமையும் செய்யாமல் வாழும்படியாகவும், என்னிடத்தில் அன்பு செய்கிறவர்களிடத்திலும், அப்படி அன்பு செய்யாதவர்களிடத்திலும் நான் அன்பு செலுத்தி வாழும்படியாகவும், எனக்கு இவ்வுலகில் உதவுகிற

உடம்பு, அறிவு, செல்வம் முதலியன
என்னுடையன அல்லவென்றும் என்னிடத்தில்
அடைக்கலமாக ஒப்புவிக்கப்பட்டவை என்றும்
நான் நம்பி வாழும்படியாகவும்
அருள்புரிவீராக!

— கிருபானந்தவாரியார்

## தெரிந்தே பிழைசெய்து வருந்தும் போது :

கல்லாப் பிழையும் கருதாப்பிழையும்
கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்
நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும்
தொழாப் பிழையும்



எல்லாப் பிழையும் பொருத்தருள்வாய்
கச்சி ஏகம்பனே!

— பட்டினத்தார்



## வீட்டில் ஹோமம் முதலியன செய்யத் தொடங்குமுன் :



**ம**ந்திரம் மாதவம் என்னும் மாலைய
தந்துறு பயன் இவை முறையின் சாற்றிய
நந்தல் இல் தெய்வம் ஆய் நல்கும் நான்மறை
அந்தம் இல் வேள்வி மாட்டு
அவிசும் ஆம் அவன்.

— கம்பர்

*(பொருள் : யாரும் தியானிக்கும் மந்திரம், பெருமை வாய்ந்த தவம், நற்பயன் யாவும் திருமாலே. அவனே வேள்வி. அவனே அதில் இடப்படும் ஆகுதியுமாவான்)*

## கோவிலுக்குள் நுழையும்போது :

உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் - அவர்
தலைவர், அன்னவர்க்கே சரண் நாங்களே!

— கம்பர்

(பொருள் : உலகம் முழுவதையும் ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் விளையாட்டாக, இடைவிடாது, தொடர்ச்சியாக எங்கும் என்றும் ஆற்றிக் கொண்டிருப்பவர் எவரோ அவரே உலகின் தலைவர். அத் தலைவரின் திருவடிகளுக்கே நாங்கள் அடைக்கலம்.)





## பயணத்தின் போது :

செங்கே ழெடுத்த
சினவடிவேலும் திருமுகமும்
பங்கே நிறைத்த நற்
பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியும்
செங்கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கே என்
முன்வந்து எதிர்நிற்பானே!
– **அருணகிரிநாதர் (கந்தரலங்கா ரம்)**

## அச்சம் நீங்க:

**ஆ**னிப்பொன் னம்பலத்தில் ஐயன் கொண்ட
ஆட்டமதை அறிந்திட்டால் இரவி நீங்கா;

வேணி என்ற என் தாயாம் விமலி நீலி
விளங்கிடவே அமுதப்பால் ஈந்து காப்பாள்
கோணிடாது குருவிருக்கும் இடந்தான்
தோற்றும்
கொண்டல்ஒளி திறந்து மலர்க்கந்தம் வீசும்
நாணியது நழுவாமல் நயத்தூடாடும்
நாதாந்தப் பேரருளால் அச்சம் போமே!
– கோரக்கர் சந்திர ரேகை

## பாவம் நீங்க :

நீங்கும் ஐம்புலன்களும்
நிறைந்த வல்வினைகளும்
ஆங்காரமாம் ஆசையும்
அருந்தடர்ந்த பாவமும்
ஓங்காரத்தின் உள்ளிருந்த
ஒன்பது ஒழிந்து ஒன்றித்



தூங்கி ஈசர் சொற்படி
துணிந்திருக்கச் சுத்தமே!

— **சிவவாக்கியர்**

## தேர்வுக்குச் செல்லும் போது :

**கௌ**ரிதேஹஸ முத்பவாம் சசிதராம்
க்லீம் ஸாத்விகீம் ஸத்பிரியாம்
பாணேஷூம் முஸலம் த்ரிசூல வரதம்
சங்கம்ஸ கண்டாம் கரை :
பிப்ராணாம் ஹலகார் முகம்
ஸூரவில ஸத் ஸௌந்தர்ய ரூபாம் பராம்
பத்மாபாம்ஹி நிசும்பசும்ப மதனீம்
வந்தே மஹாசாரதாம்.

— **மஹாசரஸ்வதி ஸூக்தம்**

(பொருள் : பார்வதியின் தேகத்தினின்று

*உதித்தவளும் சந்திரகலை தரித்தவளும் சத்வ குணத்தவளும் சாதுக்களிடம் பிரியமுள்ளவளும் பாணமாகிய கரும்பு, உலக்கை, திரிசூலம், வரத முத்திரை, சங்கு, மணி, ஏறு, வில் இவற்றைத் தரித்த கைகளுடையவளும் பிரகாசிக்கும் அழகுடையவளும் உயர்ந்தவளும் தாமரை மலர் போன்ற நிறத்தவளும் சும்ப நிசும்பர்களை வதைத்தவளுமான மஹா சாரதை என்ற சரஸ்வதியை வணங்குகின்றேன்.)*

## நோயுற்ற உடல் சீராகி வரும்போது:

இதுவரை அடியேன் அடைந்தவெம்
பயமும்
இடர்களும் துன்பமும் எல்லாம்
பொதுவளர் பொருளே பிறர்
பொருட்டல்லால்



மலையனேன் பொருட்டல இதுநின்
மதுவளர் மலர்ப்பொற் பதத்துணை அறிய
வகுத்தனன் அடியனேன் தனக்கே
எதிலுமோர் ஆசையிலையிலை பயமும்
இடரு மற் றிலையிலை எந்தாய்!

— ***வள்ளலார்***

## பிரிவுத் துயர் வாட்டும் போது:

இறைவா! என்றும் மாறாமல் இருக்கின்ற பொருளாகிய உன்னிடமே என் பூரணமான அன்பை நிலை பெற்றிடச் செய். நீ ஒருபோதும் என்னை விட்டு நீங்குவதில்லை. என் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும் அது உன்னுடன்தான் கலக்கப் போகிறது. ஆக, உன்னிடம் வைக்கும் அன்புதானே சாஸ்வதமாக இருக்க முடியும்? நான் அன்பு செலுத்தும் மனிதரை மரணமடைகிற மனிதராக எண்ணாவிட்டால் அவர்களும் அழியாத பரமாத்மா சொரூபமாகத்தானே தெரிவார்கள்? அத்தகைய பக்குவத்தை எனக்கு அருள்வாய்!

— ***பரமாச்சார்ய சுவாமிகள்***

## சத்ரு பயம் நீங்க:

என் இறைவா! ஞானமாகிய கத்தி, வைராக்கியமாகிற முனையோடு கூடியது. சத்தியமென்பதே கவசம். உறுதியான பக்தியோடிருத்தலே தைரியம் என்கிற தெளிவை எனக்குத் தா! உன்னை அறிந்தவனே விழிப்புள்ளவனாகிறான். அத்தகைய விழிப்பு நிலையில் எப்போதும் என்னை வைத்திரு!

— வாரியார்



## மனம் அமைதியற்றுத் தவிக்கிறபோது:

ஒன்றென்றிரு; தெய்வம் உண்டென்றிரு
உயர் செல்வமெல்லாம்



அன்றென்றிரு; பசித்தோர் முகம்பார்
நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு; நடு நீங்காமலே நமக்கிட்டபடி
என் றென்றிரு; மனமே! உனக் குபதேசமிதே!

– பட்டினத்தார்

## உறவுகள் பிரிந்து போகும்போது:

அப்பன் நீ, அம்மை நீ, ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒரு குலமும் சுற்றமும் ஓருரும் நீ,
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ!
இப்பொன் நீ, இம் மணி நீ இம் முத்தும் நீ
இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே!

– திருநாவுக்கரசர்

## நோய்ப்படுக்கையிலிருந்து
## கணவன் மீண்டெழ:

சடையாயெனுமால் சரண் நீயெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே!

— திருஞான சம்பந்தர்

(திருமணம் செய்யவிருந்த ஓரிளம் ஜோடியில், ஆணை பாம்பு தீண்டிவிட பெண், சம்பந்தரிடம் முறையிட்டு அழவும் அவர் இப்பாடல் பாடி, பாம்பு தீண்டியவனை மீட்டெழச் செய்ததாக வரலாறு.)





## தெய்வநிந்தனை செய்து விட்டால் பரிகாரமாகச் சொல்ல வேண்டியது:

என் இறைவா! களங்கங்கள் என்னுடையனவே அல்லாது, உன்னிடம் மாசு ஏது? நம்முடைய தங்கம் மாற்றுக் குறைந்ததாயிருந்தால், பொற்கொல்லனைக் குறை கூறி, அலட்டிக் கொள்வானேன்? தனது மகள் பிரசவ வேதன்னயால் கஷ்டப் பட்டால், மாப்பிள்ளையை நொந்து கொள்வானேன்? எந்தப் பிறவியிலும் பாத்திரம் அறிந்து தானம் செய்யாமல் பூஜை செய்வதை மறந்து, தெய்வத்தைத் தூற்றுவது ஏன்?

என் தெய்வமே! என் மனமும் என் பக்தியும் தடுமாறுகிறது. உன் மீது குற்றமில்லை. என்னைக் காத்தருள்வாய்!

– தியாகராஜர்

*(மீவல்ல குண தோஷ என்ற க்ருதி)*

## மணநாளன்று சொல்ல வேண்டிய பிரார்த்தனை:

ஒரு சொல், ஒரு வில், ஒரு இல் (மனைவி) என்பதை விரதமாகக் கொண்ட ராமா! உன்னை ஒருக்காலும் மறக்க மாட்டேன். இந்நாளில், நீண்ட ஆயுளும் முதுமையற்ற நலமான வாழ்வும் கொடுத்துக் காத்தருள்!

– தியாகராஜர்

(ஓகமாட ஒக பாணமு என்ற க்ருதி)



## மரண பயம் வரும்போது:

பெற்றதாய் தனை மகமறந்தாலும்
பிள்ளையைப் பெறுந்தாய் மறந்தாலும்

உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்
உயிரை மேவிய உடல் மறந்தாலும்
கற்ற நெஞ்சகங் கலைமறந்தாலும்
கண்கள் நின்று இமைப்பது மறந்தாலும்
நற்றவத் தவர் உள்ளிருந்தோங்கும்
நமசிவாயத்தை நான் மறவேனே

— வள்ளலார்



## யாசிக்கும் நிலை எய்தாமலிருக்க (தினமும் சொல்ல வேண்டியது):

இறைவா, ஒரு மகவைப் பெற்றதும் பெண்மணியின் அழகு குன்றி விடுவதுபோல, ஒரு பொருளை யாசித்தவுடனே மானிடனின் பெருமை கெட்டுவிடுமன்றோ? யாசிக்கும் நிலைக்கு என்னைச் செலுத்தாமல் காத்திரு.

— வாரியார்

## பிறவிச் சுமை நீங்க:

**ஊன**ேறு செல்வத் துடற்பிறவி
யான்வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத்
திறமல்லால்
கூனேறு சங்கம் இடத்தான் தன்
திருவேங்கடத்து
கோனேறி வாழும் குருகாய்ப் பிறப்பேனே!
– குலசேகர ஆழ்வார்



**(இங்கு தொகுக்கப்பட்டுள்ள பிரார்த்தனைப் பூக்கள் யாவும் வானதி பதிப்பகம் மற்றும் கங்கை புத்தக நிலையம் வெளியிட்டுள்ள ஆன்மிக நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை.)**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS(S)M4392/98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka * Supplement to Kalki 21.6.98

## இந்த இலவச இணைப்பை கல்கி வாசகர்களுக்கு அன்பளிப்பாக வழங்குகிறவர்கள் :



டாக்டர் P. பாலசுப்பிரமணியம் B.Sc.,
சீனியர் டிரஸ்டி, கந்தகோட்டம்,
நிர்வாக இயக்குனர்,
பார்க் டவுன் பெனிஃபிட் பண்டு லிட்.
சென்னை - 600 003.



வானதி பதிப்பகம்,
கங்கை புத்தக நிலையம்
13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை - 600 017.



